# Sen Tamil Kovai

BOOK II

By

R. Viswanathan, M.A., B.O.L.





& CO. MADRAS.

# செந்தமிழ்க் கோவை

## இரண்டாம் புத்தகம்

(ஐந்தாம் பாரத்துக்கு உரியது)





தொகுத்தவர்:

**வித்துவான் R. விசுவநாதையர்,** எம்.ஏ., பி..ஓ.எல்.,

தமிழாசிரியர், இராஜதானிக் கலாசாலை,

சென்னை.



பிரசுரகர்த்தர்:

**ஜி. எஸ். விச்வா & கம்பெனி**

திருவல்லிக்கேணி

**சென்னை**

**1945**




[விலை ரு. 1-2-0

FIRST EDITION 1945

## நன்றியுரை

இதிற் கண்ட செய்யுட்களையும், கட்டுரைகளையும் பிரசுரிக்க உரிமை யளித்தருளிய ஆசிரியர்களுக்கும், பிரசுரகர்த்தர்களுக்கும் எங்களுடைய மனமார்ந்த வந்தனத்தை நன்றியறிதலுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

—பிரசுரகர்த்தர்கள்.




PRINTED AT THE B. N. K. PRESS, MADRAS. PAPER ISSUE CARD NO. M.S. 100/B.
FOR G. S. VISWA & CO., MADRAS, PAPER ISSUE
CARD NO. M.S. 103/B—1000—11-45

# முகவுரை

சங்ககால முதல் இன்றுவரையில், தமிழகத்துச் சான்றோர்களால் பாடப்பெற்ற பனுவல்களினின்று எடுக்கப்பெற்ற சிறந்த பாடற்பகுதிகளையும், கட்டுரைப்பகுதிகளையுங்கொண்டு இக்கோவை நூல்கள் யாக்கப்பெற்றுள்ளன. மாணவர்கள் இலக்கியச் சுவையையும் இலக்கிய வரலாற்று முறையையும் உணர்ந்து இன்பமுற்றுப் பயன்பெறும் வண்ணம் அவை வகைப்படுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு பகுதிக்கும் முன் அமைக்கப்பெற்றிருக்கும் முகவுரைகள் அவ்வப்பகுதியின் தன்மைகளையும் ஆக்கியோரின் நிலையையும் அறிந்துகொள்ளப் பயன்படும். பயிற்சிகள், மூலபாடங்களை ஆழ்ந்தறிதற்குத் துணையாயுள்ளவை. துரைத்தனத்தார் அண்மையில் வெளியிட்டுள்ள **கட்டுரையாக்கம், பொருள் விளக்கம்** (Composition & Comprehension) என்ற திட்டங்களுக்கொவ்வ பயிற்சிகள் அமைக்கப்பெற்றுள்ளன.

தொன்று தொட்டுத் தமிழகத்தில் தோன்றி வளர்ந்து வரும் சிறந்த உரைநடை முறைகளை உதாகரிப்பனபோல் வசனபாடங்கள் அமைந்திருத்தலைக் காணலாம். ஆழ்ந்த படிப்பு, மேலெழுந்தவாரியாய்ப் படிக்கவேண்டியவை என்ற இருபகுதிகளில் முன்வகையே இப்புத்தகங்களுக்கு வேண்டியதாதலால், அக்கருத்தைக் கொண்டே உரைநடைப்பகுதி அமைக்கப்பெற்றுள்ளது. தமிழகத்தில் ஒப்புயர்வற்று விளங்கும் உரைநடையாசிரியர்கள் எழுதிய சிறந்த பகுதிகளைக் கோவைப்படுத்த எம் முயற்சி அவ்வாசிரியர்களின் அன்புநிறைந்த ஆசியால் ஒருவாறு முடிந்ததை உன்னி மகிழ்கின்றோம். தத்தம் கட்டுரைகளையும் பாடல்களையும் நாங்கள் பயன்படுத்திக்கொள்ள அருளிய அவர்களுடைய அன்புடை

மையைக் குறித்து அவர்களிடத்து என்றும் மாறா நன்றியுடைய வர்களாவோம்.

தமிழ்க்கல்வி நாடோறும் முன்னேறிக்கொண்டு வரும் இந் நாளில் புதிய முறையில் உயர்ந்த பகுதிகள் பாடங்களாக அமை வது ஏற்றுக்கொள்ளத்தக்கதே. பாடங்களிலமைந்துள்ள உண் மைப் பொருள்களையும் நடைமுறைகளையும் மாணவர்கள் நன்கு உணர்ந்து, தமிழ்மொழியைத் தங்கள் வாழ்க்கை முறையிற் சிறந்த கருவியாக ஆக்கிக்கொள்ள உதவவேண்டுமென்று பயிற்சி கள் அமைந்திருத்தலை ஆசிரியர்களும் மாணவர்களும் பயன்படுத் திக்கொள்வார்களாக.

இந்நோக்கங்கள் இனிது நிறைவேறும் வண்ணம் இறைவன் இன்னருள் பாலித்தருளவேண்டுமென்று இறைஞ்சுகின்றோம்.

—பிரசுரகர்த்தர்.

# பொருளடக்கம்

## செய்யுட் பகுதி






*மனப்பாடம் செய்தற்கு உரியன

## உரைநடைப் பகுதி

# செந்தமிழ்க் கோவை

## இரண்டாம் புத்தகம்

## ( செய்யுட் பகுதி )

---

# I. கடவுள் வாழ்த்து

## 1. பெரியபுராணம்

இந்நூலின் மற்றொரு பெயர் திருத்தொண்டர் புராணம் என்பது. இதன் ஆசிரியர் சேக்கிழார். இவர் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டு. இப்பாடல் அப்புராணத்தின் முதற் செய்யுளாகும். 'உலகெலாம்' என்ற தொடரை நடராஜப் பெருமானே நூலின் அடியாக எடுத்துக்கொடுத்தார் என்பது ஐதிகம்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன் ;
நிலவு லாவிய நீர்மலி வேணியன் ;
அலகில் சோதியன் ; அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

—சேக்கிழார்.

## 2. பரிபாடல்

இது, சங்கமருவிய எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. பரிபாடல் என்பது ஒரு வகைப் பாவின் பெயர். அப்பாவகையால் இந்நூல் இயற்றப்பெற்றமையால் இஃது இப்பெயர் பெற்றது. இதன் காலம் 1800 ஆண்டுகட்கு முன்னர் என்பர்.

நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள ;
நின், தண்மையுஞ் சாயலுந் திங்களுள ;
நின், சுரத்தலும் வண்மையு மாரியுள ;
நின், புரத்தலும் நோன்மையு ஞாலத்துள ;
நின், நாற்றமு மொண்மையு பூவையுள ;
நின், தோற்றமு மகலமு நீரினுள ;
நின், உருவமு மொளியுமா காயத்துள ;
நின், வருதலு மொடுக்கமு மருத்தினுள.

—கடுவன் இளவெயினனார்.

## 3. தேவாரம்

சைவ சமயாசாரியர்கள் அருளிய திருப்பாடல்கள் தேவாரம் எனப் பெயர்பெறும். அவர்களுள் திருநாவுக்கரசு சுவாமிகள் பாடிய திருத்தாண்டகங்களுள் ஒன்றாகும் இப்பாடல். இவர் காலம் கி. பி. எழாம் நூற்றாண்டு.

அப்பனீ யம்மைநீ யையனும்நீ
அன்புடைய மாமனு மாமி யும்நீ
ஒப்புடைய மா தரு மொண்பொருளும்நீ
ஒரு குலமுஞ் சுற்றமு மோரூரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ யிம்மணிநீ யிம்முத்துநீ
யிறைவனீ ஏறூர்ந்த செல்வனீயே

—திருநாவுக்கரசர்.

## 4. திருவாசகம்

இதனை மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்தனர். இந்நூல் சைவத் திருமுறைகளுள் எட்டாவதாகும். 'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்னும் பழமொழி இதன் பெருமையை உணர்த்தும்.

அன்றே யென்ற னாவியு
முடலு முடைமை யெல்லாமும்
குன்றே யனையா யென்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ?
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ?
எண்டோண் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய், பிழை செய்வாய்
நானோ விதற்கு நாயகமே.

—மாணிக்கவாசகர்.

## 5. திருவாய்மொழி

இஃது ஆழ்வார்களுள் ஒருவரான நம்மாழ்வார் என்கின்ற சடகோப முனிவர் பாடியதாகும். இதனைத் தமிழ் வேதம் என்பர்.

வம்மின் புலவீர்நும் மெய்வருத் திக்கைசெய்
[துய்ம்மினோ!
இம்மன் னுலகினிற் செல்வரிப் போதில்லை
[நோக்கினோம்;
நும்மின் கவிகொண்டு நும்நுமிட் டாதெய்வ
[மேத்தினல்
செம்மின் சுடர்முடி யென்திரு மாலுக்குச் சேருமே.

—நம்மாழ்வார்.

## 6. மணிமேகலை

இது ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று. கூலவாணிகன் சாத்தனாால் இஃது இயற்றப் பெற்றது. மணிமேகலை என்ற மாதின் வரலாற்றை இது விரித்துக்கூறும். புத்த மதத்தின் கொள்கைகளை இந்நூல் விரித்துக்கூறும். இதன் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டென்பர்.

மாரனை வெல்லும் வீர நின்னடி!
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி!
பிறர்க்கற முயலும் பெரியோய் நின்னடி!
துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி!
எண்பிறக் கொழிய இறந்தோய் நின்னடி!
கண்பிறர்க் களிக்குங் கண்ணோய் நின்னடி!
தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி!
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி!
நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி!
உரகர் துயர மொழிப்போய் நின்னடி!
வணங்குத லல்லது வாழ்த்தலென் னாவிற் கடங்காது.

—சீத்தலைச்சாத்தனார்.

## 7. சீவகசிந்தாமணி

இந்நூலும் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகும். இதன் ஆசிரியர் திருத்தக்கதேவர் என்ற ஜைனத் துறவி யாவார். இது சீவகன் என்பவனுடைய வரலாற்றை விரித்துக் கூறும்.

மூவா முதலா வுலகம்மொரு மூன்று மேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னி னெய்தி
ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வ
[னென்ப
தேவாதி தேவ னவன் சேவடி சேர்து மன்றே.

—திருத்தக்கதேவர்.

## 8. தேம்பாவணி

இது வீரமாமுனிவரால் இயற்றப்பெற்றது. கிறிஸ்தவ வேதங்களின் கருத்துக்களை இந்நூல் விளக்கிக்கூறும்.

தேறுந் தயையின் முனிவோய் நீ!
சினத்திற் கருள் செய் கனிவோய் நீ!
கூறுங் கலையிற் றுணர்வோய் நீ!
கூறுந் தொனியற் றுரைப்போய் நீ!
மாறும் பொருள் யாவிலு நின்றே
மாறா நிலைகொள் மரபோய் நீ!
ஈறுந் தவிர்ந்துன் புகழ்க் கடலாய்ந்
தெனக்கே கரைகாட் டருளாயோ

—வீரமாமுனிவர்.

குறிப்புரை

1. சேக்கிழார் இப்புராணத்தைப் பாடவேண்டித் தில்லைக்குச் சென்று நடராஜபெருமானை வணங்க, 'உலகெலாம்' என்று அசரீரி கூறியதாகவும், அம்மங்கலத் தொடரைக்கொண்டே இந்நூலை அவர் தொடங்கினரென்றும் கூறுவர். அம்பலம்-சிற்றம்பலம். வேணியன் - சடாமுடியை உடையவன். மலர் சிலம்படி-மலர்ந்த சிலம்படி. வினைத்தொகை.

2. இது கடுவன் இளவெயினனார் என்பவரால் இயற்றப்பெற்றது. இது திருமாலைப்பற்றியதாகும்.

நின் என்றது திருமாலை. உள-உள்ளன. சாயல்-மென்மை. ஈரத்தல்-கொடுக்கக் கொடுக்கப் பொருள் வளர்தல். புரத்தல்-தாங்குதல். நோன்மை-பொறுமை. ஒண்மை-ஒளியின் தன்மை. பூவை-காயாமரத்தின்பூ. தோற்றம் - வெளிப்படுதல். அகலம்-பெருமை. உருவம்-அறிவாற் காணப்படும் உருவம். ஒலி-சொல். வருதல்-அவதரித்தல். ஒடுக்கம்-மீண்டு சென்று அடங்குதல். மருத்து-காற்று.

3. ஒண் பொருள்-ஒளி பொருந்திய பொருள். துய்ப்பன-அனுபவிப்பன. ஏறு-இடபம். அன்றே-என்னை ஆட்கொண்ட அன்றே.

4. உடைமை-உடைய பொருள்கள். எண்தோள்-எண்டோள்

5. வம்மின், மின் முன்னிலைப் பன்மை விகுதி. கைசெய்து-கைத் தொழில் செய்து. இட்டாதெய்வம்-இட்டதேவதை.

6. இது மணிமேகலையில் பாத்திரம்பெற்ற காதை என்ற பகுதி யினின்று எடுக்கப்பெற்றது. மணிபல்லவம் என்ற தீவில், கோமுகி என்ற பொய்கையிலிருந்து ஓர் அக்ஷயபாத்திரம் தோன்றி, மணிமேகலையின் கையில் புகலும், அவள் மகிழ்ச் சியால் புத்த பகவானைப் பரவலானாள்.

மாரன் - தர்மவிரோதிகளான இச்சைகளை மனத்தில் உண் டாக்கும் ஒரு தேவன்; மகாபோதி விருட்சத்தின் கீழே தவ வொழுக்கம் பூண்டு நோற்றிருக்கையில் இவனால் செய்யப்பட்ட இடையூறுகளையெல்லாம் அவர் வென்று மேம்பட்டு விளங்கினமை யால், 'மாரனை வெல்லும்வீர' என்றாள்.

தீநெறிக்கடும்பகை - கொடிய வழிகளாகிய மிக்க பகை. பிறர்க்கு அறம் முயலும் பெரியோய்-பிறருக்குப் புண்ணிய முண்டாவதற்கு முயலுகின்ற பெரியோன். துறக்கம்-சுவர்க்கம். அழிவற்ற நிருவாணத்தையே அவன் விரும்பி, அழியும் தன்மை யுள்ள சுவர்க்கத்தை அவன் விரும்பவில்லை யென்பது கருத்து.

எண் பிறக்கு ஒழிய இறந்தோய்-மனிதர்களின் எண்ணத்திற்கு அப்பாலே நின்றவன். பிறக்கு-பின். இறத்தல்-கடத்தல்.

கண்-ஞானம். புத்தனின் முன்பிறப்புக்களுளொன்றில் இவன் கொடைத்திறத்தைச் சோதிக்கவேண்டி இவனுடைய இரு கண்களையும் கொடுக்கும்படி ஒருவன் இரக்க அவ்வாறே கொடுத்தான் என்ற வரலாறும் உண்டு. தீமொழி-பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என்பன. வாய்மொழி-சத்தியம்.

நரகர் துயர் கெட-புத்தன் தன் முன்பிறப் பொன்றில் நரக லோகத்திற்குச் சென்று ஆங்குள்ளவர்களுக்கு நன்மை புரிந்தானென்பது வரலாறு. உரகர்-நாகர். நாகர்களுக்குக் கருடனாலுண்டான துன்பம் தீர்த்தானென்பது ஒரு ஜாதக கதை.

7. இது சித்த சரணம். தேவாதிதேவன் - தேவர்களுக்கு ஆதியாகிய தேவன். எழுவாய். மூவா-கெடாத. முதலா-ஆதியில்லாத. மூவாமுதலா உலகம்-ஆதியந்தமில்லாத உலகம்; உலகம் நித்தியம் என்பது ஜைனர் கொள்கை. தாவாத-கெடாத. தலையாயது-முதன்மையாயது. தன்னின் எய்தி-தன்னாற்பெறுகையினாலே. ஓவாது நின்ற - தன்னை விட்டு நீங்காமல் நின்ற. என்ப-என்பர் சாதுக்கள்; பயனிலை.

8. முனி-கோபி. தயையால் முனிவோய் என்க. ம்ரபோய் - தன்மையனே.

## பயிற்சி

### வினாக்கள்

(1) சேக்கிழார் சிவபெருமானை எவ்வாறு துதிக்கின்றார்?

(2) திருமாலின் குணங்களாகப் பரிபாடலில் கூறப் பெற்றவை யாவை?

(3) பஞ்ச பூதங்கள் யாவை? அவை ஒவ்வொன்றின் குணங்களாகக் கூறப் பெற்றவை யாவை?

(4) புத்தபகவானின் முன்பிறப்புக்களில் நடந்த வரலாறுகளாகக் காட்டப்பட்டவை யாவை?

(5) துறக்கம் வேண்டாத் தொல்லோய்; எண் பிறக்கொழிய இறந்தோய்—விளக்கப் பொருள் கூறுக.

(6) நானே இதற்கு நாயகமே-சந்தர்ப்பத்துடன் பொருள் கூறுக.

(7) திருமாலே எல்லாத் தெய்வமாக உளன் என்பதை ஆழ்வார் எவ்வாறு கூறுகின்றார் ?

### இலக்கணம்

(1) தொடரிலக்கணம் கூறுக :—மலர் சிலம்பு. ஒரு மூன்றும். ஒண்ணிதி. தீநெறி. எண்டோள்.

(2) இப்பகுதியில் வரும் பின்வரும் சொற்களுக்குச் சொல்லிலக்கணம் கூறுக :— அரியவன். ஏத்த. சேர்தும். துறப்பிப்பாய்.

(3) பின் வருவனவற்றைப் பிரித்துக் காட்டுக :—அப்பனீ, ஏறார்ந்த. சிலம்படி. உலகெலாம்.

### கட்டுரையாக்கம்

கடவுளின் பெருமையைப் பற்றி 2 பாராக்கள் எழுதுக. பாடப் பகுதிகளினின்று மேற்கோள்கள் அமைக்க.

---

# II சங்கச் செய்யுட்கள்

## 1. திருமுருகாற்றுப்படை

ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன்னே மதுரையில் நடந்து வந்த தமிழ்ச் சங்கத்துச் சான்றோர்கள் பாடிய பாடல்கள் சங்கச் செய்யுட்கள் எனப்படும். அவை பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என மூவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. (சிலர் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் பிற்காலத்தவை என்பர்). அவற்றுள்,

திருமுருகாற்றுப்படை முதலிய பத்துப் பாடல்களைக் கொண்ட தொகுதிக்குப் பத்துப் பாட்டென்பது பெயர். திருமுருகாற்றுப்

படை 317 அடிகளை உடையது. ஒருவன் மற்றொருவனை முருகனிடம் ஆற்றுப்படுத்தியதாக இச்செய்யுள் கூறும். ஆற்றுப்படுத்தல்-வழிப்படுத்தல். இதனைப் பாடியருளியவர் நக்கீரர். இப்பாடப் பகுதி முருகனின் படையிடுகளுள் ஒன்றாகிய **திருவேரகத்தில்** இருந்த அந்தணர்களின் இயல்பைக் கூறுவதாகும்.

திருவேரகம்

இருமூன் றெய்திய வியல்பினின் வழாஅ(து)
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்(டு)
ஆறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்(து)
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல,
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்(து)
ஆறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்(து)
ஏரகத் துறைதலு முரியன் ;........

—நக்கீரர்.

## 2. புறநானூறு

நற்றிணை முதலாகவுள்ள தொகை நூல்கள் எட்டிற்கு **எட்டுத்தொகை** என்பது பெயர். இவை ஒவ்வொன்றும் பலராற் செய்யப்பட்ட பாடல்களைக் கொண்டது. இவற்றுள் **புறநானூறு** என்பது புறப்பொருள் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்டது. புறம் என்பது அறம், பொருள் என்றவற்றைப் பற்றிக் கூறுவது. இந்நூலால் சிறந்த நீதிகளும், பண்டைப் பழக்க வழக்கங்களும், பிறசெய்திகளும் புலனாகும்.

### (i) வீரப்பெண்டிர்

கெடுக சிந்தை ; கடிதிவள் துணிவே !
மூதின் மகளி ராதல் தகுமே !
மேனாள் உற்ற செருவிற்கிவள் தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே ;
நெருநல் உற்ற செருவிற்கிவள் கொழுநன்
பொருநரை விலங்கி ஆண்டுப்பட் டனனே ;
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி,
வேல்கைக் கொடுத்து, வெளிதுவிரித்து உடீஇ
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமக னல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.

—ஒக்கூர் மாசாத்தியார்.

### (ii) சான்றோர் இயல்பு

உண்டா லம்மஇவ் வுலகம், இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலு மிலரே ; முனிவிலர் ;
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சி ;
புகழெனின் உயிருங் கொடுக்குவர் ; பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் ; அயர்விலர் ;
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.

—இளம்பெருவழுதி.

### (iii) சீரியவாழ்க்கை

யாண்டுபல வாக நரையில ஆகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்,

மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்;
யான்கண் டனையர்என் இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும்; அதன்றலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே.

—பிசிராந்தையார்.

## 3. ஐங்குறுநூறு.

இது நூறு நூறு பாடல்களைக் கொண்ட ஐந்து பகுதிகளைக் கொண்டது. இப்பாடல்கள் அகப்பொருள் பற்றியவை. அகம்-இன்பம். இப்பாடல்கள் சொற்சுவை பொருட் சுவைகளிற் சிறந்தவை.

### இளவேனில்

1. அவரோ வாரார்; தான்வந் தன்றே;
குயிற்பெடை யின்குர லகவ
அயிர்க்கேழ் நுண்ணற னுடங்கும் பொழுதே.

2. அவரோ வாரார்; தான்வந் தன்றே;
சுரும்புகளித் தாலு மிருஞ்சினைக்
கருங்கா னுணவங் கமழும் பொழுதே.

3. அவரோ வாரார்; தான்வந் தன்றே;
திணிநிலைக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே

4. அவரோ வாரார்; தான்வந் தன்றே;
அஞ்சினைப் பாதிரி யலர்ந்தெனச்
செங்க ணிருங்குயி லறையும் பொழுதே.

5. அவரோ வாரார் தான்வந் தன்றே;
பொரிகான் மாஞ்சினை புதைய
எரிகா லிளந்தளி ரீனும் பொழுதே.

—ஓதலாந்தையார்.

## 4. திருக்குறள்

**கீழ்க்கணக்கு :**—நாலடியார் முதலான பதினெட்டு நூல்களைப் பதினெண்கீழ்க்கணக்கு என்பர். இவற்றின் பாடல்கள் வெண்பாக்களால் ஆகி, அறம் பொருள் இன்பங்களைப் பற்றிக்கூறும். அவற்றுள் குறள், சிறுபஞ்சமூலம் என்ற நூல்களிலிருந்து சில பாடல்கள் இங்குத் தரப்பட்டுள்ளன.

**திருக்குறள் :** இதன் ஆசிரியர் திருவள்ளுவர். இந்நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என மூன்று பகுதிகளைக் கொண்டது. பாக்கள் ஈரடி கொண்ட குறள் வெண்பாக்களால் ஆனமையால் இந்நூல் இப்பெயர் பெற்றது. இது தமிழிலுள்ள நூல்களுள் மிகச்சிறந்தது.

### அறன் வலியுறுத்தல்

1. மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்;
ஆகுல நீர பிற.

### இல்வாழ்க்கை

2. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

### புதல்வர்பெருமை

3. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

### புதல்வர்கடமை

4. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

### அன்புடைமை

5. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு.

விருந்தோம்பல்

6. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

இனியவை கூறல்

7. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

செய்ந்நன்றியறிதல்

8. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

அடக்கமுடைமை

9. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

ஈகை

10. நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்
இல்லெனினு மீதலே நன்று.

## 5. சிறுபஞ்சமூலம்

இதனை யியற்றியவர் **காரியாசான்** என்ற புலவர். சிறுபஞ்சமூலம் என்பது ஐந்து பொருள்களால் ஆன ஒரு மருந்தின் பெயராகும். அதுபோலவே, இந்நூலிலும் ஒவ்வொரு பாவிலும் ஐந்து பொருள்கள் அமைந்துள்ளன. சிறுபஞ்சமூலம் உவமஆகுபெயர்.

1. பொருளுடையான் கண்ணதே போகம்; அறனும்
அருளுடையான் கண்ணதே யாகும்;—அருளுடையான்
செய்யான் பழிபாவஞ் சேரான்; புறமொழியும்
உய்யான் பிறர்செவிக் குய்த்து.

2. சிலம்பிக்குத் தன்சினை கூற்றம்; நீள்கோடு
விலங்கிற்குக் கூற்றம்; மயிர்தான் - வலம்படா
மானிற்குக் கூற்றமாம்; ஞெண்டிற்குத் தன்பார்ப்பு;
நாவிற்கு நன்றல் வசை.

3. நாணிலான் சால்பும் நடையிலான் நன்னேன்பும்
ஊணிலான் செய்யும் உதாரமும் - ஏணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்ருன் கவிசெயலும்
நாவகமே நாடின் நகை.

4. பூத்தாலுங் காயா மரமுள; நன்றறியார்
மூத்தாலும் மூவார்நூல் தேற்ருதார்; பாத்திப்
புதைத்தாலும் நாருத வித்துள; பேதைக்
குரைத்தாலும் செல்லா துணர்வு.

5. தான் பிறந்த இல்நினைந்து தன்னைக்கடைப்பிடித்து
தான் பிறராற் கருதற்பாடுணர்ந்து-தான் பிறரால்
சாவ வென்வாழான் சான்ருேராற் பல்யாண்டும்
வாழ்க வெனவாழ்தல் நன்று.

—காரியாசான்.

குறிப்புரை

## I. திருமுருகாற்றுப்படை

1. இருமூன்று.... வழாஅது. ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறுகிய நல்லிலக்கணங் களில் வழுவாமல். 2. இருவர்....குடி-தாயும் தந்தையுமாகிய இருவர் குலங்களையும் உலகத்தார் மதித்த பலவாய் வேறு பட்ட பழைய குடி (யிற்பிறந்தோர்). 3. அறு நான்கிரட்டி யாண்டு-நாற்பத்தெட்டு ஆண்டு. 4. ஆறினில்-பிரமசரிய மாகிய வேதநெறியில். அறன் நவில்கொள்கை-அறத்தை எப்பொழுதும் கூறுகின்ற கொள்கை. 5. மூன்று வகை— நாற்சதுரமும் முச்சதுரமும் வில்வடிவுமாகிய மூன்றுவகை. முத்தீ—ஆகவனீயம், தக்கிணுக்கினி, காருகபத்தியம் என்பன,

6. இருபிறப்பாளர்—உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இரு பிறப்பினையுடைய அந்தணர். நுவல-தோத்திரங்களைக்கூற. ஞாண் - பூணூல். துணி ஈரத்துடனே இருந்து வழிபடல் கூறப்பட்டது. 9. தன் - முருகனை 10. ஆறெழுத்து - நமோகுமாராய என்பதாம். 11. நாஇயல் மருங்கின் - நா புடைபெயரும் அளவிலே. பாடி - உச்சரித்து. ஏரகம் - மலைநாட்டகத்து ஒரு திருப்பதி.

## 2. புறநானூறு

(i) இப்பாடல் **ஒக்கூர் மாசாத்தியாரால்** பாடப்பெற்றது. இச்செய்யுளில் ஒரு மறக்குடி மகளின் வீரச்செயல் கூறப்பட்டுள்ளது.

1. இவள் - தன் மகனைப் போருக்கு அனுப்பும் தாய்.

2. மூதில் மகளிர் - முதிய மறக்குடியிற் பிறந்த மகளிர்.

3. மேல்நாள். 4. தன்ஐ - தன்னை. ஐ - தலைவன் 5. நெருநல்- நேற்று. செருவிற்கு - போருக்கு. கொழுநன் - கணவன். 6. விலங்கி - விலக்கி. ஆண்டு - அங்கே. 7. செருபறை- போர்ப்பறை. 8. வெளிது - வெள்ளிய ஆடை 9. பாறு மயிர் - விரிந்த மயிர். நீவி - பூசி.

(ii) இப்பாடலைப் பாடியவர் **இளம்பெருவழுதி** என்ற பாண்டியர். இவருடைய பாடல் சொல்லாலும் பொருளாலும் பெருமை வாய்ந்தது. சான்றோர்களின் இலக்கணம் இச்செய்யுளில் நன்றாகச் சொல்லப்பட்டுள்ளது.

ஆல், அம்ம - அசைகள். உலகம் உண்டு என்று அமைக்க. இந்திரர் - தேவர். இயைவது ஆயினும் - தமக்கு வந்து கூடுவதானாலும். தமியர்உண்டலும் இலர் - தனித்து உண்ணமாட்டார். முனிவு - வெறுப்பு. பிறர் அஞ்சுவது அஞ்சித் துஞ்சலும் இலர் எனக்கூட்டுக. துஞ்சல் - சோம்பியிருத்தல். அயர்வு - மனக்கவற்சி. அன்ன மாட்சி அனையர் ஆகி - அப்படிப்பட்ட மாட்சிமைப்பட்ட அத்தன்மையராகி. நோன்தாள் - வலிய முயற்சி.

(iii) இதனைப் பாடியவர் பிசிராந்தையார். இவர் பிசிர் என்ற ஊரினர்; ஆதன் தந்தை, ஆந்தை யென மருவிற்று. இவர் நரை திரை மூப்புத் துன்பங்களின்றி வாழ்ந்தவர். அதன் காரணத்தை இப்பாடலில் விளக்குகிறார்.

யாங்காகியர் - எப்படி ஆயினீர். எவ்வாறு ஆயிற்று என்றும் கொள்ளலாம். மாண்ட - மாட்சிமைப்பட்ட குணங்களையுடைய. யான் கண்ட அனையர் - யான் நினைத்த அதனையே நினைப்பர். இனையர் - ஏவல் செய்வார். அல்லவை - முறையல்லாதவை. ஆன்று-நற்குணங்களால் அமைந்து. கல்வியால் நிறைந்து என்றுமாம். அவிந்து - பணிய வேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து; சுவை முதலியவற்றிற் செல்லும் அறிவு அளந்து. அடங்கிய - ஐம்புலன்களும் அடங்கிய; மன மொழிகளால் அடங்கிய எனினும் ஆம்.

## 3. ஐங்குறுநூறு

இளவேனிற் காலம் வந்தும் பிரிந்த கணவன் வரவில்லையே என்று வருந்திக் கூறுவதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன. இவற்றைப் பாடியவர் ஓதலாந்தையார். இப்பகுதியில் இளவேனிற் காலத்து இயற்கை நலன்கள் நன்கு கூறப்பட்டுள்ளன.

1. அவர் - பிரிந்த தலைவர். அகவ - கூவ. அயிர்கேழ் நுண் அறல் - கருமணல் நிறைந்த நுண்ணிய நீர். அவர் வாரார், பொழுது வந்து. வந்தன்று: அன்சாரியை.

2. சுரும்பு - வண்டுகள். ஆலும் - ஒலிக்கும். இருஞ்சினை - பெரிய கிளை. நுணவம் - நுணா. இது வேனிற்கு உரிய மலர்.

3. கோங்கம் - கோங்குமரம். பயந்த - அளித்த. அணி - அழகு. முகை - மொட்டு. உடையும் பொழுது - மலருங்காலம். கோங்கு இளவேனிற்கு உரியது.

4. பாதிரி - பாதிரி மலர். அலர்ந்தென - அலர்ந்ததென்று. செங்கண் இருங்குயில் - சிவந்த கண்களையுடைய கரிய குயில். அறையும் - கூவும்.

5. பொரிகால் - பொரிந்த அடியையுடைய. மாஞ்சினை - மாமரத் தின் கிளைகள். புதைய - மறைய. எரிகால் - நெருப்பைப் போன்ற ஒளியைக் கக்குகின்ற. மாந்தளிர்க்கு எரி உவமை.

## 4. திருக்குறள்

1. மாசு - குற்றம். குற்றம் தீயன சிந்தித்தல். அனைத்து - அவ் வளவே. பிற - சொல்லும் வேடமும். ஆகுல நீர - ஆரவாரத் தன்மை யுடையன.

2. தென்புலத்தார் - பிதிரர். விருந்து - புதுமை. இங்கு ஆகு பெயர். ஒக்கல் - சுற்றத்தார். ஐம்புலத்து ஆறு - ஐந்திடந்தும். ஓம்பல் - அறநெறியை வழுவாமற் செய்தல். ஆங்கு - அசை. இவ்வைம்புலத்திற்கும் ஐந்து கூறு வேண்டுதலால், அரச னுக்கு இறைப் பொருள் ஆறிலொன்றாயிற்று.

3. ஈன்ற பொழுதின் - தான் பெற்ற பொழுதிலுள்ள மகிழ்ச்சி யைக் காட்டிலும். சான்றோன் - கல்வி கேள்விகளால் நிறைந்த வன். கேட்ட - அறிவுடையோர் சொல்லக் கேட்ட.

4. ஆற்றும் உதவி - செய்யும் கைம்மாறு.

5. எல்லாம் தமக்கு உரியர் - எல்லாப் பொருளாலும் தமக்கே உரியர். என்பு - உடம்பு; ஆகு பெயர். சிபியின் வரலாற்றை அறிக.

6. அனிச்சம் - அனிச்சப் பூ; ஆகு பெயர். திரிந்து - வேறுபட்டு. தீண்டிய வழியே அனிச்சப் பூ வாடும்; தூரத்தில் வரும் போதே இன்முகத்தைக் காணாவிடின் விருந்து குழைந்து விடும். வேற்றுமை அணி.

7. இனிய - இனிய சொற்கள். இன்னாத - இன்னாத சொற்கள். இவையிரண்டையும் உவமைகளோடும் கூட்டுக. கடுஞ் சொற் கூறல் முடிவில் தனக்கே இன்னாது என்றாயிற்று.

8. நன்றி - அறங்கள். கொன்றார் - சிதைத்தவர். உய்வு - பிழைப்பு.

9. யா - தம்மாற் காக்கப்படும் எல்லாவற்றையும். அஃறிணைப் பன்மை வினைப் பெயர். யாவும் என்பது யா என்று குறுகியது. சொல்லிழுக்கு - சொல்லின் கண் தோன்றும் குற்றம். சோகாப்பர் - துன்புறுவர். ஒரு சொல்.

10. கொளல் - ஏற்றுக்கொள்ளுதல். நல்ஆறு-வீட்டுலகுக்கு நல்ல நெறி. ஈதலே, ஏ, பிரிநிலை.

## 5. சிறுபஞ்சமூலம்

1. கண்ணதே - இடத்ததே. போகம் - இன்பம். உய்த்து - செலுத்தி. புறமொழி - பழிபடக்கூறும் புறஞ் சொற்களை. உய்யான் - நடத்தமாட்டான்.

2. சினை - முட்டை. கூற்றம் - யமன். நீள்கோடு - நீண்ட கொம்புகள். வலம் படா மானிற்கு - வலிமைபெறாத கவரி மானிற்கு. ஞெண்டு - நண்டு. பார்ப்பு - குஞ்சு. நன்று அல்வசை - நல்லதல்லாத பழிச்சொல்.

3. சால்பு - அமைதி. நடை - ஒழுக்கம். ஊண் இல்லான் - தனக்குண்ணும் பொருளில்லாதவன். உதாரம் - கொடை. ஏணிலான் - வலியிலாதவன். சேவகம் - வீரம். தேற்றான் - அறியாதவன். நாடின் - ஆராய்ந்தால்.

4. பூத்தாலும் காயாமரம் - பாதிரிபோன்றவை. மூவார்-மூத்தவர்களோடு ஒப்பாகார் தேற்றாதார் - நூல்களைக் கற்காதவரும் (அத்தன்மையரே) நாறாத - முளைக்காத.

5. இல் - குடி. கடைப்பிடித்து - ஒழுக்கத்தின் கண் தவறாதபடி நின்று. கருதற்பாடு உணர்ந்து - மதிக்கப்படும் செய்கையை அறிந்து. சாவ என - சாக என்று சொல்லும்படி. வாழான் - ஒழுகாமல்.

### பயிற்சி

#### வினாக்கள்

1. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க் கணக்கு-இப்பெயர்களுக்குக் காரணங்கள் கூறுக.

2. ஆற்றுப்படை என்றால் என்ன?

3. அந்தணர் இயல்புகள் யாவை?

4. முத்தி, ஐம்புலம், ஆறெழுத்து—இவற்றை விளக்குக.

5. அந்தணர் முருகனை வழிபடும் விதம் யாது?

6. பொருளை விளக்குக:—நாவியல் மருங்கின் நவிலப் பாடி; மூதில் மகளிர். ஆன்றவிந்தடங்கிய கொள்கை.

7. 'இவள் துணிவு கடிது' - இவ்வாறு கூறக்காரணம் என்ன?

8. சான்றோர் இயல்புகள் யாவை?

9. நரையில்லாமைக் காரணங்கள் யாவை?

10. இளவேனிற்பருவத்தில் பூக்கும் மரங்கள் யாவை?

11. நுணவம், சோங்கம், பாதிரி, மா - இவற்றிற் கமைந்த அடைமொழிகள் யாவை?

12. இல்வாழ்வானால் ஓம்பப்படற்குரியார் யாவர்?

13. மகன் கடமைகள் யாவை?

14. விருந்தின் மென்மை எவ்வாறு கூறப்பட்டது?

15. அறத்தின் இலக்கணம் என்ன?

16. அருளுடையான் தன்மைகள் யாவை?

17. குறள், சிறுபஞ்சமூலம், ஐங்குறுநூறு, புறநானூறு- இப்பெயர்ப் பொருள்களை ஆராய்க.

18. நகையாவன யாவை?

19. எத்தகைய வாழ்க்கை நன்றாகும்?

## இலக்கணம்

1. வழாஅ, உடீஇ - இவை என்ன அளபெடைகள்?

2. பின்வருவனவற்றுள் இடைச்சொற்களாக உள்ளவை யாவை? தகுமே. உண்டாலம்ம. மக்களும் நிரம்பினர். அவரோ வாரார்.

3. பின்வரும் குற்றியலுகரங்களுக்கு வகைகள் கூறுக.

எறிந்து. கேட்டு. உலகு. ஆகு.

4. பின்வருவனவற்றிற்குச் சொல்லிலக்கணம் கூறுக:—

ஒரு மகனல்லது இல்லோள். உண்டலும் இலர் யாங்கு ஆகியர். தான் வந்தன்று

கட்டுரையாக்கம்

1. பின்வருவனவற்றைப்பற்றி ஒவ்வொரு பாரா எழுதுக:-

(1) பண்டைக்கால அந்தணர் இயல்பு
(2) வீரத்தாய்மார்
(3) இளவேனிற்காலம்.

# III. காதைப்பகுதி

**சிலப்பதிகாரம்.** ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான இந் நூலைச் சேரஇளவேந்தரான இளங்கோவடிகள் இயற்றினர். இதன் காலம் ஏறக்குறைய 1800 ஆண்டுகளுக்கு முன் என்பர். காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த கோவலன், கண்ணகி என்ற இருவரின் வரலாற்றை இந்நூல் கூறும்.

மிகச் செல்வவானுயிருந்த கோவலன் தன் குற்றத்தால் வறியனாகித் தன் மனைவியுடன் மதுரைக்குச் சென்றான். அங்கே அவன் தன் மனைவியின் காற்சிலம்புகளுளொன்றை விற்க முயன்றபோது, அவன் திருடனென்று அநியாயமாய்க் குற்றஞ் சாட்டப்பெற்று பாண்டியமன்னனின் கட்டளையால், கொல்லப் பட்டான். அதனையறிந்த கண்ணகி மிகுந்த கோபாவேசத்துடன் பாண்டியனிடம் சென்று வழக்காடின வரலாறு இங்கு காணப் படும்.

## 1. சிலப்பதிகாரம்

### வழக்குரைகாதை

**பாண்டியன் அரண்மனை வாயில் காவலனை**
**நோக்கிக் கண்ணகி கூறுதல்**

'வாயி லோயே! வாயி லோயே!
அறி(வு)அறை போகிய பொறியறு நெஞ்சத்(து)
இறைமுறை பிழைத்தோன் வாயி லோயே!
' இணையரிச் சிலம்பொன்(று) ஏந்திய கையள்

கணவனை இழந்தாள் கடையகத் தாள்,' என்(று)
அறிவிப் பாயே! அறிவிப் பாயே!' என,

வாயிலோன் அரசனிடம் கூறல்

வாயிலோன்,
'வாழி; எங் கொற்கை வேந்தே! வாழி;
தென்னம் பொருப்பின் தலைவ! வாழி;
செழிய! வாழி; தென்னவ! வாழி;
பழியொடு படராப் பஞ்சவ! வாழி;
அடர்த்(து)எழு குருதி அடங்காப் பசுந்துணிப்
பிடர்த்தலைப் பீடம் ஏறிய மடக்கொடி
வெற்றிவேல் தடக்கைக் கொற்றவை அல்லள்;
அறுவர்க்(கு) இளைய நங்கை, இறைவனை
ஆடல்கண்(டு) அருளிய அணங்கு, சூருடைக்
கானகம் உகந்த காளி, தாருகன்
பேருரங் கிழித்த பெண்ணும் அல்லள்;
செற்றனள் போலும்! செயிர்த்தனள் போலும்!
பொற்றொழிற் சிலம்பொன்(று) ஏந்திய கையள்,
கணவனை இழந்தாள் கடையகத் தாளே;
கணவனை இழந்தாள் கடையகத் தாளே,' என,

கண்ணகியை அரசன் வரவழைத்து வினுதல்

'வருக மற்(று)அவள்; தருக ஈங்(கு),' என
வாயில் வந்து கோயில் காட்டக்
கோயில் மன்னனைக் குறுகினள் சென்றுழி,
'நீர்வார் கண்ணை! எம்முன் வந்தோய்!
யாரை யோநீ? மடக்கொடி யோய்!' என,

கண்ணகி தன் வரலாறு கூறுதல்

'தேரா மன்ன! செப்புவ(து) உடையேன்;
எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்

புள்ளூறு புன்கண் தீர்த்தோன் அன்றியும்,
வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத்

தான்தன்,
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகார் என் பதியே; அவ்வூர்
ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை யாகி,
வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச்
சூழ்கழல் மன்ன! நின்னகர்ப் புகுந்திங்(கு)
என்காற் சிலம்பு பகர்தல் வேண்டி,

நின்பால்
கொலைக்களப்பட்ட கோவலன் மனைவி;
கண்ணகி என்ப(து) என்பெய ரே',என,

பாண்டியன் விடை

'பெண் அணங்கே!
கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று;
வெள்வேற் கொற்றம் காண்,' என, ஒள்ளிழை

கண்ணகி உண்மையினை எடுத்துரைத்தல்

'நற்றிறம் படராக் கொற்கை வேந்தே!
என்காற் பொற்சிலம்பு மணியுடை அரியே,' என,

பாண்டியன் பதிலுரைத்தல்

'தேமொழி உரைத்தது செவ்வை நன்மொழி;
யாமுடைச் சிலம்பு முத்துடை அரியே;
தரு'கெனத் தந்து தான்முன் வைப்ப,

### அரசன் உண்மை அறிதல்

கண்ணகி அணிமணிக் காற்சிலம்(பு) உடைப்ப
மன்னவன் வாய்முதல் தெறித்தது மணியே;

### பாண்டியன் நிலை

மணிகண்டு,
தாழ்ந்த குடையன், தளர்ந்தசெங் கோலன்,
'பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன்! யானே கள்வன்!
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதல் பிழைத்தது! கெடுகஎன் ஆயுள்!' என
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே;

### கோப்பெருந்தேவி உயிர் நீத்தல்

தென்னவன்
கோப்பெருந் தேவி குலைந்தனள் நடுங்கிக்
'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ(து) இல்'
என்(று)
இணையடி தொழுதுவீழ்ந் தனளே மடமொழி.

—இளங்கோவடிகள்

### குறிப்புரை

(இது, நூலின் அரும்பதவுரையைப் பின்பற்றி எழுதப்பெற்றது).

1. வாயிலோய் - வாயில் காப்பவனே. 2. அறிவு அறை போகிய - அறிவு கீழற்றுப்போகிய. பொறியறு - புண்ணியமற்ற. 3. இறைமுறை - இராசநீதி. 5. கடையகம் - வாயில் 7-10. வணங்குந்தோறும் சொல்லுதலின், வாழ்த்துப் பலவாயின 11-12. பசுந்துணிப் பிடர்த்தலை - எருமைக்கடாவின் தலை. கொற்றவை - துர்க்கை. மகிஷாசுரன் தலையாகிய பீடத்தில் ஏறியவள். அறுவர்க்கு இளைய நங்கை - சத்தமாதாக்களில் ஏழாவதிளையாள்; அவள் பிடாரி 14-15. இறைவனை....அணங்கு - பத்திரகாளி,

சூர் - பேய் 16-17. தாருகன்....பெண். 18. செற்றனள் - முகக் கோட்டனள் கொண்டனள்; மாற்சரியமுடையவள். செயிர்த்தனள் - மனக்கோபம் கொண்டனள்; மிக்க கோபமுடையாள் கணவனை யிழந்தவள் ஒருத்தி அரண்மனை வாயிலில் நின்றாள் என்றபடி. 22. மற்றவள் தருக - அவளைப்புகவிடுக; அழைப்பாயாக என்றுமாம். 24. குறுகினள் - அணுகினள். 25. நீர்வார் கண்ணை - நீர்வார்ந்த கண்ணையுடையாய். 26. யாரை - ஐ, இடைச்சொல். 29. புள் - புறா. சிபியின் வரலாறு குறிக்கப்பெற்றது. 29. நடுங்க-அசைய. 30. கடைமணி - கண்மணிக்கடை. 33. புதல்வனை ஆழியின் மடித்தோன்-மனுநீதிகண்ட சோழன். 35. மகனை, ஐ, இடைச்சொல். 36. வாழ்தல்-சீவித்தல். தரப்ப-செலுத்த-38. பகர்தல்-விலைகூறல். 42. கோறல்-கொல்லுதல். 43. வெள்வேல் கொற்றம் - இராசநீதி. 44. நல்திறம் படரா-நல்ல பகுதியிற் செல்லாத. 44. என் கால் பொன் சிலம்பின் அரி மாணிக்கம். 45. செவ்வை நன்மொழி-செவ்விய வார்த்தை. 47. கொண்டு வருகவென அழைத்து; தான்-அசை. தருகவென வாங்கித்தன் முன்வைப்ப-முத்துடை அரியும் மாணிக்கமுடை அரியும் அறிவதாக வாங்கித் தன் முன்னே வைப்ப என்றுமாம். 47. மணிக்கால்-மணியை இடத்திலே உடைய. சிலம்பு-முன்னே கோவலன் கையிலிருந்து வாங்கப்பட்ட சிலம்பு. 48. வாய் முதல் தெறித்தது மணியே-சிலம்பு தானே விண்டு மணிவாய் முதல் தெறித்தது. 54. என்முதல்-என்னைத் தொடங்கி. 57. கணவனை....இல்லென்று-தந்தை தாய் முதலாயினோரை இழந்தார்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டலாம்; இஃது அவ்வாறு வரக்காணும் சொல் ஆகாதமையில், காட்டுவதில்லென்றாள்.

## பயிற்சி

### வினுக்கள்

1 பாண்டியனுக்குரிய வேறு பெயர்கள் யாவை?

2 வாயிலோனிடம் கண்ணகி கூறியவை யாவை?

3 வாயிலோன் கண்ணகியைக் குறித்து அவள் யார் யார் அல்லள் என்று கூறினன்? ஏன் அவ்வாறு கூறினன்?

4 சோழன் சிறப்பைப்பற்றிக் கண்ணகி யாது கூறினள்?

5 கண்ணகி எவ்வாறு தன் கணவன் கள்வனல்லன் என்று நிரூபித்தாள்?

6 மன்னன் நீதி தப்பினதை அவனுக்குரிய பொருள்கள் எவ்வாறு காட்டின?

### இலக்கணம்

(1) தொடரிலக்கணம் கூறுக:—அரிச்சிலம்பு. எழுகுருதி. மடக்கொடி. வாணிகன் மகன். கொலைக்களம். தேமொழி.

(2) பின்வரும் தொழிற் பெயர்கள் எவ்வாறு ஆயின:— ஆடல். கோறல். விளக்கம்.

(3) பின்வரும் சொற்களுக்குச் சொல்லிலக்கணங் கூறுக:— (எண்கள் வரிகளைக் குறிக்கும்) கையள் (4) வாழி (8) அல்லள் (17) வருக (21) தீர்த்தோன் (29).

### கட்டுரையாக்கம்

(1) இப்பகுதியை ஒரு நாடகக் காட்சியாக்கி எழுதுக.

(2) கண்ணகியின் தோற்றத்தைப்பற்றி ஒரு பாரா எழுதுக.

## 2. சீவகசிந்தாமணி

இந்நூல் ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகும். இதன் ஆசிரியர் திருத்தக்கதேவர் என்ற ஜைனத்துறவியார். இவருடைய காலம் ஏறக்குறைய பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமாயிருக்கலா மென்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். இதை மகாகாவிய மென்றும், இதற்குப் பின்னே தோன்றின பல நூல்களுக்கும் இதுவே வழிகாட்டிய தென்றும் கூறுவர். இது, சீவகனென்னும் ஓரரசன் பிறந்தது முதல் வீடுபெற்றது இறுதியாகவுள்ள கதை யைக் கூறும். சிந்தாமணி என்றது சிந்தித்ததை யெல்லாம் தரும் ஒரு தெய்வமணி. அதைப்போல் படிப்பவர் கருதிய எல்லா வற்றையும் தோற்றுவிப்பதால் இப்பெயர் வந்தது என்பர். வேறு வகையாகக் கூறுவதும் உண்டு.

இங்கு அமைக்கப்பெற்ற பகுதி நூலின் முதலாவதான நாமகளிலம்பகம் என்னும் பகுதியினின்று தொகுக்கப்பெற்றது.

ஆசிரியரின் செய்யுள் நடைச்சிறப்பையும், ஓசையினிமையையும், உவமையழகையும், பொருளாழத்தையும் இச்செய்யுட்களிற் காணலாம்.

**முன் கதைத் தொடர்ச்சி** : ஏமாங்கத நாட்டின் மன்னனுன சச்சந்தன் என்பான் தன் அரசாட்சியைக் கட்டியங்காரன்பால் ஒப்புவித்து, தன் மனைவி விசயை என்பாளோடு காலங்கழித்து வந்தான். கட்டியங்காரன் சமயம் பார்த்து சச்சந்தனேடு எதிர்த்துப் போர்புரியத் தொடங்க, அரசன் அப்பொழுது பூரண கர்ப்பிணியாயிருந்த விசயையை ஒரு மயிற்பொறியில் ஏற்றி, அப்புறப் படுத்திவிட்டுப் போர்புரியத் தொடங்கினன்.

## ஜீவகன் பிறப்பு

1. களிமுகச் சுரும்புண் கோதை
கயிலெருத் தசைந்து சோர
வளிமுகச் சுடரி னில்லா
மனத்தொடு மயங்கி யிப்பாற்
சுளிமுகக் களிற னன்றன்
சொன்னய நெறியிற் போய
கிளிமுகக் கிளவிக் குற்ற
திற்றெனக் கிளக்க லுற்றேன்

## கட்டியங்காரன் வெற்றி முரசம் கேட்டு விசயை சோர்தல்

2. எஃகென விலங்கு வாட்கண்
எறிகட லமிர்த மன்னாள்
அஃகிய மதுகை தன்னல்
ஆய்மயி லூரு மாங்கண்,
வெஃகிய புகழி னன்றன்
வென்றிவெம் முரச மார்ப்ப
எஃகெறி பிணையின் மாழ்கி
இறுகிமெய் மறந்து சோர்ந்தாள்

பொறி ஒரு மயானத்தில் இறங்கல்

3. மோடுடை நகரி னீங்கி,
முதுமரந் துவன்றி, உள்ளம்
பீடுடை யவரு முட்கப்
பிணம்பல பிறங்கி எங்கும்
காடுடை யளவை யெல்லாங்
கழுகிருந் துறங்கு நீழல்,
ஆடுடை மயிலந் தோகை
பைபய வீழ்ந்த தன்றே.

4. மஞ்சுசூழ் வதனை யொத்துப்
பிணப்புகை மலிந்து, பேயும்
அஞ்சுமம் மயானந் தன்னுள்
அகில்வயி ரூர்ந்த கோதை
பஞ்சிமேல் வீழ்வ தேபோல்
பல்பொறிக் குடுமி நெற்றிக்
குஞ்சிமா மஞ்ஞை வீழ்ந்து
கால்குவித் திருந்த தன்றே.

விசயையின் நிலை

5. உண்டென வுரையிற் கேட்பார்
உயிருறு பாவ மெல்லாம்
கண்டினித் தெளிக வென்று
காட்டுவாள் போல வாகி
விண்டொட நிவந்த கோயில்
விண்ணவர் மகளிற் சென்றாள்
வெண்டலை பயின்ற காட்டுள்
விளங்கிழை தமிய ளானாள்.

ஜீவகன் பிறப்பு

6. இருள்கெட விகலி யெங்கு
மணிவிளக் கெரிய வேந்தி,

அருளுடை மனத்த வாகி
அணங்கெலாம் வணங்கி நிற்பப்
பொருகடற் பருதி போலப்
பொன்னனன் பிறந்த போழ்தே
மருளுடை மாத ருற்ற
மம்மர்நோய் மறைந்த தன்றே.

விசயை வருந்தல்

வேறு

7. வெவ்வா யோரி முழவாக
விளிந்தா ரீமம் விளக்காக,
ஒவ்வாச் சுடுகாட் டுயரரங்கி
னிழல்போ னுடங்கிப் பேயாட,
எவ்வாய் மருங்கு மிருந்தேங்கிக்
கூகை குழறிப் பாராட்ட,
இவ்வா ருகிப் பிறப்பதோ
இதுவோ மன்னர்க் கியல்வேந்தே!

8. பற்ற மன்ன னகர்ப்புறமால்,
பாயல் பிணஞ்சூழ் சுடுகாடால்,
உற்ற ரில்லாத் தமியேனல்,
ஒதுங்க லாகாத் தூங்கிருளால்,
மற்றிஞ் ஞால முடையாய்! நீ
வளரு மாறு மறியேனல்,
எற்றே யிதுகண் டேகாதே
யிருத்தி யாலென் னின்னுயிரே.

9. பிறந்த நீயும் பூம்பிண்டிப்
பெருமா னடிகள் பேரறமும்
புறந்தந் தென்பாற் றுயர்க்கடலை
நீந்தும் புணைமற் ருகாக்கால்

சிறந்தா ருளரே லுரையாயால்
சிந்தா மணியே கிடத்தியால்
மறங்கூர் நுங்கோன் சொற்செய்தேன்
மம்மர் நோயின் வருந்துகோ !

தெய்வம் வருதல்

வேறு

10. தேனமர் கோதை மாதர்
திருமகன் றிறத்தை யோராள்
'யானெவன் செய்வ' லென்றே
அவலியா விருந்த போழ்தில்
தானமர்ந் துழையி னீங்காச்
சண்பக மாலை யென்னும்
கூனிய துருவங் கொண்டோர்
தெய்வதங் குறுகிற் றன்றே.

கூனியின் கூற்று

11. விம்முறு விழும வெந்நோய்
அவணுறை தெய்வஞ் சேரக்
கொம்மென வுயிர்த்து நெஞ்சில்
கொட்புறு கவலை நீங்க,
"எம்மனை, தமியை யாகி
இவ்விட ருற்ற தெல்லாம்,
செம்மலர்த் திருவின் பாவாய்!
யான்செய்த பாவ" மென்றாள்

12. "பூவினுட் பிறந்த தோன்றல்
புண்ணிய னனைய நம்பி
நாவினு ளுலக மெல்லா
நடக்குமொன் றூது நின்ற
கோவினை யடர்க்க வந்து
கொண்டுபோ மொருவ னின்னே

காவியங் கண்ணி னயாம்
மறைவது கரும" மென்ருள்.

இவ்வாறு சொல்லி, தெய்வம் அக்குழவியின் கையில் அரசியின் மோதிரத்தை இட்டு, அக்குழந்தைதனை வழியிலே கிடத்தினுள். பிறகு அவள் விசயையை ஒரு மறைவிடத்தில் சேர்த்தாள். அப்பொழுது விசயை,

13. "நல்வினை செய்தி லாதேன்
நம்பிநீ தமியை யாகிக்
கொல்வினை மாக்கள் சூழக்
கிடத்தியோ?" என்று விம்மாப்
புல்லிய கொம்பு தானேர்
கருவிளை பூத்த தேபோல்
ஒல்கியோர் கொம்பு பற்றி
ஒருகணு னேக்கி நின்ருள்.

கந்துக்கடன் வருகை

வேறு

14. நாளொடு நடப்பது வழுக்கி மின்னெடூர்
கோளொடு குளிர்மதி வந்து வீழ்ந்தெனக்
காளக வுடையினன் கந்து நாமனும்
வாளொடு கனையிருள் வந்து தோன்றினுன்.

கந்துக்கடன் குழந்தையை நோக்கி,

15. புனைகதிர்த் திருமணி பொன்செய் மோதிரம்
வனைமலர்த் தாரினுன் மறைத்து வண்கையாற்
றுனைகதிர் முகந்தென முகப்பத் தும்மினுன்
சினைமறைந் தொருகுரல் சீவ வென்றதே.

குறிப்புரை.

1. இது கவியின் கூற்று. களிமுகம்-களிக்கின்ற நெறி. சுரும்பு உண் கோதை-வண்டுகள் உண்கின்ற கூந்தல். கயில்-ஆபா

ணத்தின் மூட்டுவாய். அசைந்துசோர-குலைந்து விழ. வளிமுக சுடரின்-காற்றின் முன்னுள்ள தீபம்போல். சுளி முக களிறு-(குத்துக்கோலை) கோபிக்கின்ற முகத்தையுடைய ஆண்யானை. அ(ன்)னன்-போன்றவன், சச்சந்தன். கிளவி-சொற்களையுடைய விசயைக்கு ஆகுபெயர். உற்றது இற்று என கிளக்கல் உற்றேன். கிளக்கல்-சொல்லுதல்.

2. எஃகு-கூர்மை, வேல். வாள்-ஒளியையுடைய. எறி கடல்-அலைகளை வீசுகிற கடல். அஃகிய மதுகை-குறைந்த தன்மை. ஆய்மயில்-விசைகுறைந்த மயிற்பொறி. வெஃகிய-விரும்பிய, வேந்தனும் தன்மையை விரும்பிய. புகழினன்-கட்டியங்காரன். ஆர்ப்ப-ஒலிக்க. எஃகு-வேல். பிணை-மான். மாழ்கி-மனம் மயங்கி. இறுகி-மூர்ச்சித்து. மறந்து-பொறியைத் திருப்பவேண்டிய முறையை மறந்து.

3. மோடு-பெருமை. துவன்றி-நெருங்கி. உட்க-அஞ்ச. பிறங்கி-விளங்கி. காடு-மயானம். பையப-மெல்லமெல்ல.

4. மஞ்சு-வெண்மேகம், மேகம் புகைநிறத்துக்கு உவமை. அகில்-அகில்புகை : ஆகுபெயர். கோதை-மாலை. பஞ்சி-பஞ்சு. மயில் மயானத்தில வீழ்ந்தது, மாலை பஞ்சின்மேல் வீழ்வது போலிருந்தது. பல்பொறிகுடுமிநெற்றிகுஞ்சி-பல கண்களையுடையதும், கொண்டையை உச்சியிலே கொண்டதும், மயிர்களையுடையதுமான.

5. உரையில்-நூல்களில் உண்டென உரையில் கேட்பார், பாவமெலாம் உண்டெனக் கேட்பார் என இயைக்க. விண்தொட நிவந்த-உயர்ந்த. மகளின்-மகளைப்போல. வெண்தலை—இறந்தவர்களுடைய வெள்ளிய தலை. பயின்ற-மிக்க.

6. இகலி-விளக்கொடு பகைத்து. மணிவிளக்கு-இரத்தின விளக்கு. ஏந்தி-மிக்கு. அணங்கு-தெய்வம், இவன் வீடு பெறுவன் என்பது கருதித் தெய்வம் வணங்கிற்று. பருதி-சூரியன். பொன்னனன்-ஜீவகன். மம்மர் நோய்—வருத்தமாகிய நோய்.

ஞாயிறு, தோற்றத்தில் இருளைப் போக்கிப் பின்பு மதியத்தைக் கெடுக்குமாறு போல, இவனும் பிறந்தபொழுதே தேவியிருளைப் போக்கிப் பின்பு பகைவெல்லும் என்பது கருத்து.

7. வெவ்வாய்-கொடியவாய். ஓரி-நரியின் குரல். விளிந்தார் ஈமம்-இறந்தவரைச் சுடுதற்குரிய விறகடுக்கு. அரங்கு-ஆடுமிடம். நுடங்கி-அசைந்து. கூகை-கோட்டான்.

8. பற்றுமன்னன்-பகைவனுன மன்னன். ஆல்-அசை. பாயல்-படுக்கை. ஒதுங்கல்-நடத்தல். எற்றே-என்ன.

9. பிண்டி-அசோகம். பிண்டிப்பெருமானடிகள்-அருகன். புணை-தெப்பம். சிந்தாமணியே என்றது பிள்ளையை நோக்கி. மறம்-வீரம். சொல்-சொல்லிய காரியம், ஆகுபெயர். மம்மர்-மயக்கம். வருந்துகோ-வருந்துவேனே. வருந்துகு-வருந்துவேனெனத் தனித்தன்மை.

10. கோதை-மாலை. மாதர்-விசயை. ஓராள்-அறியாளாய். அவலியா-வருந்தி. அமர்ந்து-விரும்பி. உழையின்-பக்கத்தினின்றும். தெய்வம்-யக்ஷதேவதை.

11. தேவியது விழுமத்தாலே நோயையுடையதாகிய தெய்வம். அவண்-அவ்விடத்தில். கொம்மென-விரைய. கொட்புறு கவலை-சுழலுதற்குக் காரணமான கவலை. எம்மனை-தாய். தமியை-தனியை. செம்மலர்த்திரு-லக்ஷ்மி. இன்-அசை.

12. பூ-தாமரை மலர். தோன்றல்-தலைவன். புண்ணியன்-முருகன்; முருகக் கடவுள் சரவணப் பொய்கையுள், தாமரை மலரில் தோன்றினன் என்பது ஐதிகம். நா-சொல்: ஆகுபெயர். அவன் வார்த்தையிலே உலகமெல்லாம் நடக்கும் என்க. அப்படி நடத்தற்குப் பொருந்தாது நின்ற கட்டியங்காரனைக் கொல்ல, என்று பொருள்பட, ஒன்றாது நின்ற கோவினை அடர்க்க என்றார். ஒன்றாது-பொருந்தாமல். கோ-இங்கு, கட்டியங்காரன். காவி-நீலோற்பலம். கண்ணினாய்: விளி.

13. நம்பி: விளி. நல்வினை-உன்னை வளர்த்தற்கு நல்வினை. மாக்கள்-விலங்குகள். விம்மா-அழுது. புல்லிய-கொம்பைத் தழு

விய. கருவிளே-ஒருவகைக்கொடி. கொம்பு புல்லிய கருவிளே என மாறுக. ஒல்கி-ஒதுங்கி. கஞல்-கண்ணல். ஏதாவது ஒன்றனைப்பற்றி நின்று பார்த்தல், நாணமுடைய மகளிர்க்கு இயல்பு.

14. மதி-சந்திரன், எழுவாய். மதி, நக்ஷத்திரத்தோடு செல்வதை விட்டு, மின்னலோடும் கோளொடும் தரையில் விழுந்ததைப் போல். உவமை. நாள்-நக்ஷத்திரம். வழுக்கி-தப்பி. நடப்பது: தொழிற்பெயர். ஊர்கோள்-ஊரும் • கிரகங்கள். வினைத் தொகை. கோள்-பாம்பும் ஆம். காளக உடையினன்-கரிய உடை தரித்தவன். கந்துநாமன்-கந்துக்கடன். இவன் ஒரு வணிகன். கனை இருள்-மிக்க இருள்.

15. தாரினன்-கந்துக்கடன். வனைதல்-அழகு செய்தல். மோதிரம் மறைத்து எனக் கூட்டுக. துணை-விரைவு. துணைகதிர்-இருளை நீக்குவதற்கு விரைகின்ற கதிர். முகப்ப-எடுக்க. தும்மினன்-குழந்தை தும்மியது. தும்முதல் நன்னிமித்தம். கிளே-கிளை. சீவ-ஜீவ என்ற வடசொல்லின் திரிபு. ஜீவித்திரு என்பது பொருள். வேண்டுகோளாகிய வியங்கோள். தும்மியவுடன் 'ஜீவ நூறும் புகுக' என்றல் மரபு. இப்பிள்ளைக்கு ஜீவகன் என்ற பெயர் வந்ததற்குக் காரணம் இதுவே. தும்மியவுடன் 'சிவாய' என்பது சைவர் மரபு.

## பயிற்சி

### வினுக்கள்

1. சச்சந்தன் நாட்டை இழந்த வரலாறு என்ன?
2. மயில்பொறி மயானத்தில் இறங்கியது ஏன்?
3. மயானத்தின் தன்மை எவ்வாறிருந்தது?
4. மயில் மயானத்தில் விழுந்ததற்கு உவமை யாது?
5. விசயையின் நிலையால் ஆசிரியர் உலகுக்குக் காட்டும் நீதி யாது?
6. ஜீவகன் பிறந்தபொழுது அவ்விடம் எவ்வாறிருந்ததாகக் கூறப்பட்டுள்ளது?
7. மயானத்தில் உண்டான நாடகம் எவ்வாறமைந்தது? இதனிலமைந்த அணி என்ன?

8. தன் குழந்தையை நோக்கி விசயை யாது கூறி அழுதாள்?

9. சிந்தாமணி என்று அவனைக் கொண்டாடியதேன்?

10. பொருள் கூறுக:—பூம்பிண்டிப் பெருமானடிகள். மம்மர்நோய். பல்பொறிக்குடுமி. நெற்றிக்குஞ்சிமாமஞ்ஞை. செம்மலர்த்திருவின் பாவாய். காளகவுடையினன்.

11. சண்பகமாலை கூறியதென்ன?

12. சீவகன் என்ற பெயர்வரக் காரணம் என்ன?

### இலக்கணம்

1. ஆகுபெயர் என்றால் என்ன? இப்பகுதியினின்று 3 ஆகுபெயர்களை எடுத்துக் காட்டி விளக்குக.

2. உவமை, உருவகம்-இவ்விரண்டிற்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகள் யாவை? இப்பகுதியினின்று ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோருதாரணங் காட்டுக.

3. முதலிரண்டு பாடல்களிலும் மோனை, எதுகை எவ்வாறு அமைந்துள்ளன என்பதைக் காட்டுக.

### கட்டுரையாக்கம்

1. விசயையைப்பற்றிக் கூறிய அடைமொழிகளை யெல்லாம் அமைத்து, அவளைப்பற்றி ஒரு பாரா எழுதுக.

2. மயானத்தில் மயில் இறங்கியபின் நடந்ததை உன் சொற்களில் அமைக்க.

3. இப்பகுதியில் அமைந்துள்ள உவமைகளையும் பொருள்களையும் தொகுத்து அமைக்க.

## 3. பெரிய புராணம்

பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தைச் சேக்கிழார் சுவாமிகள் பாடியருளினர். அவருடைய காலம் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். இந்நூல் அநபாய சோழன் என்ற குலோத்துங்க சோழன் வேண்டுகோளால் பாடப்பெற்றது.

பெரியபுராணம் என்பதற்குப் பெரியோர்களைப் பற்றிய புராணம் என்பது பொருள். செயற்கரிய செய்வார் பெரியர். இந்நூல் பாடுவதற்கு உதவியாயிருந்தவை:—சுந்தரமூர்த்தி நாயனர் அரு

ளிய **திருத்தொண்டத் தொகை,** நம்பியாண்டார் நம்பி இயற்றிய **திருத்தொண்டர் திருவந்தாதி, தேவாரம்** முதலிய அருட்பாடல்கள்.

அப்பூதியடிகள் என்பவர் அப்பர்சுவாமிகளிடம் அளவிலா அன்பு கொண்டிருந்தவர். அவருடைய அன்புத் திறனையும், அவர்பொருட்டு அப்பர்சுவாமிகள் செய்தருளிய அற்புதத்தினையும் இப்பகுதி கூறும்.

### அப்பூதியடிகள் புராணம்

#### அப்பூதியடிகள் திருநாவுக்கரசர் பெயரால் பல அறங்கள் செய்தல்.

தாண்டவம் புரிய வல்ல
தம்பிரா ணருக் கன்பர்
ஈண்டிய புகழின் பாலா
ரெல்லையி றவத்தின் மிக்கார்
ஆண்டசீ ரரசின் பாத
மடைந்தவ ரறியா முன்னே
காண்டகு காதல் கூரக்
கலந்தவன் பினரா யுள்ளார். (1)

களவுபொய் காமங் கோபம்
முதலிய குற்றங் காய்ந்தார்;
வளமிகு மனையின் வாழ்க்கை
நிலையினர் மனைப்பா லுள்ள
அளவைகள் நிறைகோல் மக்கள்
ஆவொடு மேதி மற்றும்
உளவெலா மரசின் நாமஞ்
சாற்றுமவ் வொழுக்க லாற்றார். (2)

வடிவுதாங் காண ராயும்
மன்னுசீர் வாக்கின் வேந்தர்
அடிமையுந் தம்பி ரானு
ரருளுங்கேட் டவர்நா மத்தாற்
படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப்
பந்தர்கள் முதலா யுள்ள
முடிவிலா அறங்கள் செய்து
முறைமையால் வாழு நாளில். (3)

**திங்களூருக்கு வந்த அப்பர் எங்கும் தம் பெயரையே காணுதல்.**

வந்தணைந்த வாகீசர் மந்தமா ருதசீதப்
பந்தருட னமுதமாந் தண்ணீரும் பார்த்தருளிச்
சிந்தைவியப் புறவருவார் திருநாவுக் கரசெனும்பேர்
சந்தமுற வரைந்ததனை யெம்மருங்குந் தாங்கண்டார். (4)

**'வேறொருவர் பெயரால் தண்ணீர்ப்பந்தல் வைக்கக் காரணம் என்?' என்று திருநாவுக்கரசர் வினவ, அப்பூதியடிகள் மறுமொழி கூறுதல்.**

" ஆறணியுஞ் சடைமுடியா
 ரடியார்க்கு நீர்வைத்த
ஈறில்பெருந் தண்ணீர்ப்பந்
 தரில்நும்பே ரெழுதாதே
வேறொருபேர் முன்னெழுத
 வேண்டியகா ரணமென்கொல்
கூறு" மென வெதிர்மொழிந்தார்
 கோதில்மொழிக் கொற்றவனார். (5)

நின்றமறை யோர் கேளா
 நிலையழிந்த சிந்தையராய்
" நன்றருளிச் செய்திலீர்;
 நாணிலமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூழ்ச்சி
 திருத்தொண்டி னுறைப்பாலே
வென்றவர்தம் திருப்பேரோ
 வேறொருபேர்?" எனவெகுள்வார். (6)

" நம்மையுடை யவர்கழற்கீழ்
 நயந்ததிருத் தொண்டாலே
இம்மையிலும் பிழைப்பதென
 வென்போல்வா ருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக்
 கரசர்திருப் பெயரெழுத
வெம்மைமொழி யான்கேட்க
 விளம்பினீ" ரெனவிளம்பி. (7)

"பொங்குகடற் கன்மிதப்பிற்
 போந்தேறு மவர்பெருமை

அங்கணர்தம் புவனத்தி
லறியாதார் யாருளரே?
மக்கலமாந் திருவேடத்
துடனின்றிவ் வகைமொழிந்தீர்
எக்குறைவீர்? நீர்தாம்யா
ரியம்பு" மென வியம்பினர். (8)

**திருநாவுக்கரசர் தம்மை வெளிப்படுத்தல்.**

திருமறையோ ரதுமொழியத்
திருநாவுக் கரசரவர்;
பெருமையறிந் துரைசெய்வார்;
"பிறதுறையி னின்றேற
அருளுபெருஞ் சூலையினு
லாட்கொள்ள வடைந்துய்ந்த
தெருளுமுணர் வில்லாத
சிறுமையேன் யா"னென்றார். (9)

**அப்பூதியடிகளின் செயல்.**

அரசறிய வுரைசெய்ய வப்பூதி யடிகள்தாங்
கரகமல மிசைகுவியக் கண்ணருவி பொழிந்திழிய
உரைகுழறி யுடம்பெல்லா முரோமபுள கம்பொலியத்
தரையின்மிசை வீழ்ந்தவர்தஞ் சரணகம லம்பூண்டார். (10)

மற்றவரை யெதிர்வணங்கி வாகீச ரெடுத்தருள
அற்றவர்க ளருநிதியம் பெற்றார்போ லருமறையோர்
முற்றவுளங் களிகூர முன்னின்று கூத்தாடி
உற்றவிருப் புடன்சூழ வோடினர் பாடினர். (11)

[அப்பூதியடிகள் திருநாவுக்கரசருக்குத் திருவமுது ஆக்க லுற்றார். வாழைக்குருத்தொன்று கொண்டு வருமாறு தமது மூத்த புதல்வரைப் பணித்தார்.]

**அரவு தீண்டுதல்.**

"நல்லதாய் தந்தை யேவ
நானிது செய்யப்பெற்றே" னென்(று)
ஒல்லையில் விரைந்து தோட்டத்
துள்புக்குப் பெரிய வாழை

மல்லலங் குருத்தை யீரும்
பொழுதினில் வாள் ராவொன்(று)
அல்லலுற் றழுங்கிச் சோர
வங்கையிற் றீண்டிற் றன்றே. (12)

கையினிற் கவர்ந்து சுற்றிக்
கண்ணெரி காந்து கின்ற
பையரா வுதறி வீழ்த்துப்
பதைப்புடன், "பாந்தள் பற்றும்
வெய்யவே கத்தால் வீழா
முன்னம்வே கத்தா லெய்திக்
கொய்தவிக் குருத்தைச் சென்று
கொடுப்ப" னென் றோடி வந்தான். (13)

பொருந்திய விடவே கத்திற்
போதுவான் வேகம் முந்த
வருந்தியே யணையும் போழ்து
"மாசுணங் கவர்ந்த தியார்க்கும்
அருந்தவ ரமுது செய்யத்
தாழ்க்கையா னறையே" னென்று
திருந்திய கருத்தி னோடுஞ்
செழுமனை சென்று புக்கான். (14)

எரிவிடம் முறையே யேறித்
தலைக்கொண்ட வேழாம் வேகந்
தெரிவுற வெயிறுங் கண்ணு
மேனியுங் கருகித் தீய்ந்து
விரிவுரை குழறி யாவி
விடக்கொண்டு மயங்கி வீழ்வான்
பரிகலக் குருத்தைத் தாயர்
பால்வைத்துப் படிமேல் வீழ்ந்தான். (15)

**அப்பூதியடிகள் மகன் இறந்ததை மறைத்துத் திருநாவுக்கரசரை அமுது செய்ய அழைத்தல்**

தளர்ந்துவீழ் மகனைக் கண்டு
தாயருந் தந்தை யாரும்

உளம்பதைத் துற்று நோக்கி
யுதிரஞ்சோர் வடிவும் மேனி
விளங்கிய குறியுங் கண்டு
"விடத்தினல் வீந்தா" னென்று
துளங்குத லின்றித் தொண்ட
ரமுதுசெய் வதற்குச் சூழ்வார். (16)

பெறலரும் புதல்வன் தன்னைப்
பாயினுட் பெய்து மூடிப்
புறமனை முன்றிற் பாங்கோர்
புடையினில் மறைத்து வைத்தே
"அறவிது தெரியா வண்ண
மமுதுசெய் விப்போ" மென்று
விறலுடைத் தொண்ட னர்பால்
விருப்பொடு விரைந்து வந்தார். (17)

திருநாவுக்கரசர் பதிகம் பாடிப் பிள்ளையை உயிர்ப்பித்தல்

நாவினுக் கரசர் கேளா
"நன்றுநீர் புரிந்த வண்ணம்
யாவரித் தன்மை செய்வா"
ரென்றுமுன் னெழுந்து சென்றே
ஆவிதீர் சவத்தை நோக்கி
யண்ணலா ரருளும் வண்ணம்
பாவிசைப் பதிகம் பாடிப்
பணிவிடம் பாற்று வித்தார். (18)

தீவிடம் நீங்க வுய்ந்த
திருமறை யவர்தஞ் சேயும்
மேவிய வுறக்கம் நீக்கி
விரைந்தெழு வானைப் போன்று
சேவுகைத் தவராட் கொண்ட
திருநாவுக் கரசர் செய்ய
பூவடி வணங்கக் கண்டு
புனிதநீ றளித்தா ரன்றே. (19)

புகழ்ந்தகோ மயத்து நீரால்
பூமியைப் பொலிய நீவித்

திகழ்ந்தவான் சுதையும் போக்கிச்
சிறப்புடைத் தீபம் ஏற்றி
நிகழ்ந்தவக் கதலி நீண்ட
குருத்தினை விரித்து நீரால்
மகிழ்ந்துடன் விளக்கி யீர்வாய்
வலம்பெற மரபின் வைத்தார். (20)

**திருநாவுக்கரசர் அமுது செய்தல்**

மைந்தரும் மறையோர் தாமும்
மருங்கிருந் தமுது செய்யச்
சிந்தைமிக் கில்ல மாதர்
திருவமு தெடுத்து நல்கக்
கொந்தவிழ் கொன்றை வேணிக்
கூத்தனா ரடியா ரோடும்
அந்தமி ழாளி யாரங்
கமுதுசெய் தருளி னாரே. (21)

**திருநாவுக்கரசர் அப்பூதியடிகளின் தொண்டைச் சிறப்பித்துத்
திருப்பழனத்தில் பதிகம் பாடுதல்.**

மாதவ மறையோர் செல்வ
மனையிடை யமுது செய்து
காதனண் பளித்துப் பன்னாள்
கலந்துட னிருந்த பின்றை
மேதகு நாவின் மன்னர்
விளங்கிய பழன மூதூர்
நாதர்தம் பாதஞ் சேர்ந்து
நற்றமிழ்ப் பதிகஞ் செய்வார். (22)

அப்பூதி யடிக ளார்த
மடிமையைச் சிறப்பித் தான்ற
மெய்ப்பூதி யணிந்தார் தம்மை
விரும்புசொன் மாலை வேய்ந்த
இப்பூதி பெற்ற நல்லோ
ரெல்லையி லன்பா லென்றுஞ்
செப்பூதி யங்கைக் கொண்டார்
திருநாவுக் கரசர் பாதம். (23)

## 3. பெரிய புராணம்.

### அப்பூதியடிகள் புராணம்.

1. தாண்டவம் - நடனம். தம்பிரான் - தலைவர். ஆண்ட அரசு - சிவபெருமானால் ஆளப்பட்ட அரசு; திருநாவுக்கரசு சுவாமிகள். "அறியா முன்னே காண்டகு காதல் கூரக் கலந்த அன்பினர்" என்பது திருநாவுக்கரசரைக் காணு முன்னமே அவர்பால் அப்பூதியடிகள் அன்புரிமை பூண்டு ஒழுகிவந்தார் என்பதைக் காட்டுகின்றது.

2. காய்ந்தார்-முனிந்தவர், அகற்றியவர்; அளவைகள்-முகந்து அளக்குங் கருவிகள்; மரக்கால், நாழி முதலியன. நிறை கோல்-நிறுத்து, எடையைக்காணுந் துலாக் கோல்.

3. படி நிகழ்-உலகத்து நிகழ்கின்ற.

4. மந்தமாருதம்-இளந்தென்றற் காற்று, சந்தம்-அழகு பொருந் தும்படி. எம்மருங்கும்-எல்லாப் பக்கங்களிலும்.

5. ஈறு இல்-முடிவு இல்லாத. கோது-குற்றம்.

6. கேளா-கேட்டு, 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அமணருள் நல்லோரனைவரையும் விலக்குதற்பொருட்டு, 'நாணில் அமண்' என்றார் எனக் கொள்க. சூழ்ச்சி-உபாயங்களை. உறைப்பால் - வலிமையால். வெகுள்வார் - கோபிப்பார்.

7. வெம்மை-கொடிய.

8. மிதப்பு - மிதப்பது; தெப்பம். அரசன் திருநாவுக்கரசரைக் கல்லிற் கட்டிக் கடலிலிட, அவர் அக்கல்லையே தெப்பமாகக் கொண்டு கரையேறிய வரலாறு இங்கறியத்தக்கது; இவ்வரசன் மகேந்திர பல்லவன் (கி.பி. 600—630) என்ப.

9. பிற துறை-சைவ சமயமல்லாத பிற சமயத் துறை; இங்குச் சமண சமயத்தைக் குறிக்கும். தெருளும்-தெளிவுள்ள.

10. கர கமலம் மிசை குவிய - கைகளாகிய தாமரைகள் (தலைக்கு) மேலே தாமாகவே சென்று குவிய, சரண கமலம் - அடித் தாமரை.

11. வாகீசர் - நாவுக்கரசர். அற்றவர்கள் - பொருளற்றவர்கள். உற்ற - பொருந்திய.

12. ஒல்லை-விரைவு. மல்லல் அம் குருத்து-வளப்பம் பொருந்திய அழகிய குருத்து. ஈரும்-அறுக்கும். வாள் அரா-ஒளியுள்ள பாம்பு.
13. கண் எரி காந்துகின்ற-கண்ணில் நெருப்புப் பொறி வீசுகின்ற. பை அரா-படத்தையுடைய பாம்பு. பாந்தள்-பாம்பு.
14. மாசுணம்-பாம்பு. தாழ்க்க-தாமதமாகும்படி. அறையேன்-கூறேன்; தன்மையொருமை வினைமுற்று.
15. ஏழாம் வேகம்-பாம்பினது ஏழாவது வேகமும், முழு வேகமும். எயிறு-பற்கள். பரிகலம்-உண்பதற்கிடும் கலமாகிய குருத்து. படி-பூமி.
16. உதிரம்-இரத்தம். வீழ்ந்தான்-இறந்தான்.
17. பாங்கு-பக்கம். ஓர்புடை-ஓர் இடத்தில்.
18. பாற்றுவித்தார்-மாற்றியருளினர்.
19. சேஉகைத்தவர்-எருதை (வாகனமாக) ஏறிச் செலுத்தும் சிவபெருமான். புனித-தூய்மையான.
20. நீவி-மெழுகி. திகழ்ந்த வான் சுதையும் போக்கி-விளங்குகின்ற வெள்ளிய கோலமிட்டு. ஈர் வாய்-அறுத்த பக்கத்தை.
21. மருங்கு-பக்கத்தில் (இருந்து). கொந்து அவிழ் கொன்றை வேணி-கொத்துக்களாக விரிந்து மலர்கின்ற கொன்றைப் பூக்களை அணிந்துள்ள சடைமுடி.
22. மாதவ மறையோர்-அப்பூதியடிகள். காதனண்பு: காதல்+நண்பு. பன்னாள்: பல்+நாள், பலநாள். மேதகு-மேன்மை+தகு. மூதூர்: முதுமை+ஊர்.
23. ஆன்ற-பெருமை சான்ற. சொல் மாலை-சொற்களாலாகிய பாமாலை.

## பயிற்சி

### வினாக்கள்

1. பின் வருவனவற்றிற்கு விளக்கப்பொருள் கூறுக:—ஆண்டசிரரசு. வாக்கின் வேந்தர். வாகீசர். ஆறணியும் சடைமுடியார். ஏழாம் வேகம். சேவுகைத்தவர். மெய்ப்பூதி.

2. அடிகள் அரசின்பால் வைத்த அன்பை எவ்வாறு புலப்படுத்தி வந்தார்?

3. இப்பகுதியால் வாகீசரின் வரலாற்றைப்பற்றி அறிவன யாவை?

4. அடிகள் வெகுண்டதற்குக் காரணம் என்ன?

5. 'நீர்தாம் யார்?' என்றதற்கு விடையாக வந்தது என்ன?

6. அப்பரைக் கண்டவுடன் அடிகள் அடைந்த மெய்ப் பாடுகள் யாவை?

7. அற்றவர்களருநிதியம் பெற்ருர்போல்-இவ்வுவமையைச் சந்தர்ப்பங் கூறி விளக்குக.

8. மூத்த திருநாவுக்கரசின் பக்தித்திறம் எவ்வாறு புலப் பட்டது?

9. பாம்பு கடித்தலையும், அதன் விளைவையும் ஆசிரியர் எவ்வாறு கூறுகின்ருர்?

10. அமுது எவ்வாறு படைக்கப்பட்டது?

### இலக்கணம்

(1) பிரித்தெழுதுக:—அங்கை. தண்ணீர். பையரா. முன் றில். பன்ளுள்.

(2) தெரிநிலை, குறிப்பு என்பன யாவை? இப்பாடல்களி லிருந்து இம்முற்றுக்கள், எச்சங்களுக்கு ஒவ்வோருதாரணங் கூறுக.

### கட்டுரையாக்கம்

(1) 'அடியார் பக்தி' என்பதைப்பற்றி ஒரு பாரா எழுதுக.

(2) 'அப்பூதியடிகளின் அன்பு' என்பதைப் பற்றி ஒரு கட்டுரை வரைக.

## 4. கம்பராமாயணம்

கம்பரால் செய்யப்பட்ட இராமாயணம் என விரியும். இராமாயணம், ஸ்ரீராமனது அல்லது சீதாபிராட்டியாரது குணங் களை அறிதற்குக் கருவியாகிய நூல். இஃது ஓர் இதிகாசம். இதனை வடமொழியில் இயற்றியவர் ஸ்ரீ வான்மீகி முனிவர். இந்த நூலைத்தழுவிக் கம்பர் தம் இராமாயணத்தைப் பாடினர். இவரு டைய காலம் பன்னிரண்டாம் நூற்ருண்டென்பர்.

இரணியன் வதைப்படலம் என்னும் இப்பகுதி, திருமாலின் அவதாரங்களின் ஒன்ருகிய நரசிங்கமூர்த்தி, இரணியன் என்ற கொடிய அரக்கனை வதைத்த செய்தியைக் கூறும். இவ்வரலாறு முதல்நூலில் காணப்படவில்லை; எனினும், இவ்வரலாற்றை விபீஷணன் இராவணனுக்குக் கூறுவதாகக் கம்பர் அமைத்துக்

கொண்டு கூறுகின்றார். இப்பகுதியை கம்பர் ஸ்ரீரங்கத்தில் மோட்டழகியசிங்கரின் சந்நிதியில் அரங்கேற்றியபொழுது, அப்பெருமான் இதனைக்கேட்டுத் தம் திருக்கரங்களை நீட்டி, ஆரவாரித்தனர் என்ற ஒரு செய்தி கர்ணபரம்பரையாக வழங்குகிறது.

ஸ்ரீ இராமபிரானுடன் போருக்கு எழவேண்டுமென்று இராவணனும் அவன் அவையத்தோரும் முடிவுகட்டும்போது, விபீஷணன் இராவணனைத் தடுத்து "இவ்வாறு முன்னமொரு அரக்கன் கடவுளிடம் சினந்து மாண்டான்" எனக் கூறி. இவ்வரலாற்றைக் கூறினான்.

முன்கதைத் தொடர்ச்சி. இரணியன் என்ற ஓரரக்கன் பிரமனிடமிருந்து அரிய வரங்களைப் பெற்று, தானே பெரியவன் எனத் தருக்கி, உலகங்களெல்லாவற்றையும் வென்று, தன்னையே எல்லோரும் வணங்கவேண்டுமென்று கூறிவந்தான். அவனுக்குப் பிறந்த பிரகலாதன் மட்டும் திருமாலை வணங்கத் தொடங்க, இரணியன் கடுங் கோபங்கொண்டு அவனைப் பலவழிகளிலும் துன்புறுத்தவும், அவன் ஊன்றும் பெருமல் நிற்க, இரணியன் அவனைக் கொன்றுவிடுவதாகக் கூறினான்.

### இரணியன் வதைப்படலம்

#### பிரகலாதனுக்கும் இரணியனுக்கும் சம்வாதம்

1 வந்தானவணங் கியென்மன் னுயிர்தான்
எந்தாய்! கொளவெண் ணினையே லிதுதான்
உந்தா ரியதன் றுலகியா வுமுடன்
தந்தார் கொளநின் றதுதா னெனலும்.

2 "ஏவரே யுலகந் தந்தா
ரென்பெய ரேத்தி வாழு
மூவரே யல்ல ராகின்
முனிவரே முழுதுந் தோற்ற
தேவரே பிறரே யாரே
செப்புதி தெரிய" வென்றான்;
கோவமூண் டெழுந்துங் கொல்லான்;
காட்டுமேற் காட்சி கொள்வான்

3 "உலகுதந் தானும் பல்வே
றுயிர்கடந் தானு முள்ளுற்(று)

உலேவிலா யுயிர்க டோறு
மங்கங்கே யுறைகின் ருனும்
மலரினின் மணமு மெள்ளி
லெண்ணெயும் போல வெங்கும்
அலகில்பல் பொருளும் பற்றி
முற்றிய வரிகா ணத்தா!"

4 "என்கணு நோக்கிக் காண்டற்
கெங்கணு முளன்கா ணைந்தை
உன்கணு னன்பிற் சொன்ன
வுறுதியென் ருென்றுங் கொள்ளாய்;
நின்கணு ஞேக்கிக் காண்டற்
கெளியனே? நினக்குப் பின்னேன்
பொன்கணு ஞவி யுண்ட
புண்டரீ கக்க ணம்மான்.

5 மூன்றவன் குணங்கள் செய்கை
மூன்றுஅவ னுருவ மூன்று,
மூன்றுகண் சுடர்கொள் சோதி,
மூன்றுதன் னுலகம், மூன்று
தோன்றலு மிடையு மீறுந்
தொடங்கிய பொருள்கட் கெல்லாஞ்
சான்றவ னிதுவே வேத
முடிவிது சரத" மென்ருன்.

6 என்றலு மவுணர் வேந்த
னெயிற்றரும் பிலங்க நக்கான்
"ஒன்றலில் பொருள்க ளெல்லா
மொருவன்புக் குறைவ னென்ருய்;
நன்றது கண்டு பின்னர்
நல்லவா புரிதும்; தூணில்
நின்றுள னென்னிற் கள்வ
னிரப்புதி நிலேமை" யென்ருன்.

7 "சாணினு முளனோர் தன்மை
யணுவினேச் சதகூ றிட்ட

கோணினு முளன்யா மேருக்
குன்றினு முளனிந் நின்ற
தூணினு முளனீ சொன்ன
சொல்லினு முளனித் தன்மை
காணுதி விரைவி" னென்று
னன்றெனக் கனகன் சொன்னன்.

8 "உம்பர்க்கு முனக்கு மொத்திவ்
வுலகெங்கும் பரந்து ளானைக்
கம்பத்தின் வழியே காணக்
காட்டுதி; காட்டி டாயேற்
கும்பத்தின் கரியைக் கோண்மாக்
கொன்றென நின்னைக் கொன்றுன்
செம்பொத்த குருதி தேக்கி
யுடலையுந் தின்பே" னென்றான்.

9 என்னுயிர் நின்றாற் கோறற்
கெளியதொன் றன்றி யான்முன்
சொன்னவன் ஞெட்ட தொட்ட
விடந்தொறுந் தோன்று னாயின்
என்னுயிர் யானே மாய்ப்பல்
பின்னும்வாழ் வுகப்ப லென்னின்
அன்னவற் கடியே னல்லேன்"
என்றன னறிவின் மிக்கான்.

**இரணியன் தூணை அறைய, அதனுள் நரசிங்கமூர்த்தி சிரித்தல்**

10 நசைதிறந் திலங்கப் பொங்கி
நன்றுநன் றென்ன நக்கு
விசைதிறந் துருமு வீழ்ந்த
தென்னவோர் தூணின் வென்றி
இசைதிறந் துயர்ந்த கையா
லெற்றினன் எற்ற லோடும்
திசைதிறந் தண்டங் கீறிச்
சிரித்தது செங்கட் சீயம்.

அதுகேட்டுப் பிரகலாதன் ஆனந்தித்தல்

11 நாடிநான் றருவே னென்ற
நல்லறி வாள னானுந்
தேடினுன் முகனுங் காணுச்
சேயவன் சிரித்த லோடும்
ஆடினு னழுதான் பாடி
யாற்றினுன் சிரத்திற் செங்கை
சூடினுன் ருெழுதா னேடி
யுலகெலாந் துகைத்தான் றுள்ளி,

இரணியன் அச்சிங்கத்தினிடம் கூறல்

12 "ஆரடா சிரித்தாய் சொன்ன
வரிகொலோ? அஞ்சிப் புக்க
நீரடா போதா தென்று
நெடுந்தறி தேடி னையோ?
போரடா பொருதி யாயிற்
புறப்படு புறப்ப டென்ருன்"
பேரடா நின்ற தாளோ
டுலகெலாம் பெயரப் போவான்.

நரசிங்கமூர்த்தி வெளிப்படல்

13 பிளந்தது தூணு மாங்கே
பிறந்தது சீயம் பின்னை
வளர்ந்தது திசைக ளெட்டும்
பகிரண்ட முதல மற்றும்
அளந்ததப் புறத்துச் செய்கை
யாரறிந் தறைய கிற்பார்?
கிளர்ந்தது ககன முட்டை
கிழிந்தது கீழு மேலும்.

இரணியன் போர்க்கு நிற்றல்

14 வயிரவா ளுறையின் வாங்கி,
வானக மறைக்கும் வட்டச்
செயிரறு கிடுகும் பற்றி,
வானவ ருள்ளந் தீய

வயிர்படர் வேலே யேழு
மலைகளு மஞ்ச வார்த்தங்கு
உயிருடை மேரு வென்ன
வாய்மடித் துருத்து நின்றான்.

### பிரகலாதன் தந்தைக்கு அறிவு கூறல்

15 நின்றவன் றன்னை நோக்கி
"நிலையிது கண்டு, நீயும்
ஒன்றுமுன் னுள்ளத்தி யாது
முணர்ந்திலை போலு மன்றே
வன்றொழி லாழி வேந்தை
வணங்குதி, வணங்க வேயுன்
புன்றொழில் பொறுக்கு மென்று"
னுலகெலாம் புகழ நின்றான்.

### இரணியன் விடை

16 "கேளிது நீயுங் காணக்
கிளர்ந்தகோ ளரியின் கேழில்
தோளொடு தாளு நீக்கி
நின்னையுந் துணித்துப் பின்னென்
வாளினைத் தொழுவ தல்லால்
வணங்குதல் மகளி ருடல்
நாளினு முளதோ? வென்று
வண்டங்க ணடுங்க நக்கான்.

### இரணியன் வதை

17 ஆயவன் றன்னை மாய
னந்தியி னவன்பொற் கோயில்
வாயிலின் மணிக்க வான்மேல்
வயிரவா ளுகிரின் வாயின்
மீயெழு குருதி பொங்க
வெயில்விரி வயிர மார்பு
தீயெழப் பிளந்து நீக்கித்
தேவர்க ளிடுக்கண் டீர்த்தான்.

### சிங்கப்பிரான் பிரகலாதனைக் கொண்டாடல்

### வேறு

18 உந்தையை யுன்முன் கொன்றுடலைப் பிளந்தனையச்
சிந்தை தளரா தறம்பிழையாச் செய்கையாய்!
அந்தமிலா வன்பென்மேல் வைத்தா-யளியத்தாய்
எந்தையினி யிதற்குக் கைம்மாறி யாதென்றான்

### பிரகலாதன் வரம் வேண்டுதல்

19 "முன்பு பெறப்பெற்ற பேறே முடிவில்லை
பின்பு பெறும்பேறு முண்டோ? பெறுகுவெனேல்
என்பு பெறாத விழிபிறவி யெய்தினுநின்
அன்பு பெறுகை யரும்பே றெனக்"கென்றான்

### பிரகலாதனை வாழ்த்துதல்

20 நல்லறமு மெய்ம்மையுற நான்மறையு நல்லருளும்
எல்லையின் ஞானமு மீறிலா வெப்பொருளுந்
தொல்லைசா லெண்குணனு நின்சொற் றொழில்செய்க
வல்லவுரு வொளியாய் நாளு வளர்கநீ

### சிங்கப்பிரான் பிரகலாதனுக்கு முடிசூட்டுதல்

21 என்று வரமருளி யெவ்வுலகுங் கைகூப்ப
முன்றின் முரச முழங்க முடிசூட்டி
நின்ற வமர ரனைவீரு நேர்ந்திவனுக்
கொன்று பெருமை யுரிமை புரிகென்றான்

### குறிப்புரை

1. உம் தாரியது அன்று-உமது வசத்திலுள்ளது அன்று. 'உலகுதந்தானுக்கன்றி உனக்குக்கொள்ளும்படி என் உயிர் எளிதன்று' என்றபடி.
2. உலகந் தந்தார் எவர்? கோவம்-கோபம்.
3. உலைவுஇலா உயிர்-எல்லையில்லாத பிராணிவர்க்கம். பல் பொருளும் பற்றி முற்றிய-பல பொருள்களிலும் கலந்து நிறைந்திருக்கின்ற.
4. உனக்குப் பின்னோன் பொன்கணன்-உனக்குத் தம்பியாகிய இரணியாட்சனது. புண்டரீகக் கண்-செந்தாமரை மலர்

போன்ற கண். பக்தனுக்கு எளியன், பகைவனுக்கு அரியன் என்றபடி.

5. குணங்கள் மூன்று-சாத்விகம், ராஜசம், தாமசம் என்பன. தொழில்கள் மூன்று-படைத்தல், காத்தல், அழித்தல் என்பன. உருவம் மூன்று-பிரம, விஷ்ணு, ருத்ரர் என்பன. கண் மூன்று-சூரியன், சந்திரன், அக்கினி என்பன. உலகம் மூன்று-சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்பன. சான்று-சாட்சி. சரதம்-சத்தியம்.

6. அவுணர்-அசுரர். இலங்க-விளங்க. நக்கான்-நகைத்தான். நல்ஆபுரிந்தும்-ஏற்ற காரியத்தைச் செய்வேன். தும் : தன்மை யொருமை எதிர்கால வினைமுற்று. நிரப்புதல்-ருஜூப்ப டுத்தல்.

7. ஓர்தண்மையணு-எளிய ஓர் அணுவை. சத கூறு-நூறு பிரிவு. கோணினும்-பகுப்பினும். கனகன்-இரணியன்.

8. உம்பர்-தேவர். கம்பம்-தூண். கும்பம்-தலை. கரி-யானை. கோண்மா-வலியசிங்கம். குருதி-இரத்தம்.

9. கோறல்-கொல்லுதல். அன்று+யான் = அன்றியான். குற்றியலுகரம் யகரம் வர இகரமாய்த் திரிந்தது.

10. நசை-பரிகாசக் கருத்து. எற்றினன்-மோதினன். சீயம்-சிங்கம்.

11. சேயவன்-தூரத்திலுள்ளவன். சேய்மை என்ற பண்பினடியாகப் பிறந்தது.

12. பேர் அடாநின்ற தாள்-தன்பேர் எங்கும் பொருந்தி நிற்றற்குக் காரணமான முயற்சி.

13. கிளர்ந்தது கிழிந்தது-பீறிப் பிளந்தது. ககனமுட்டை-உலகவுருண்டை. முட்டை-அண்டகோளத்தின் ஓடு.

14. வஃரவாள்-வச்சிராயுதம் போன்ற வாள். செயிர் அறு-குற்றமற்ற. கிடுகு-கேடகப்படை. அயிர்-நுண்மணல். ஆர்த்து-ஆரவாரித்து. உருத்து-கோபித்து.

15. நிலை-நரசிங்கமூர்த்தியின் நிலைமை. ஆழி-சக்கராயுதம்.

16. கிளர்ந்த-எழுந்தோங்கிய. துணித்து-துண்டித்து. ஊடல் நாளினும்-பிணக்குக்கொண்ட பொழுதினும்.

17. இச்செயல் இரணியன் பெற்ற வரங்களை ஒட்டிச் செய்ய வேண்டியதால் ஆயிற்று. கவான்-தொடை. உகிர்-நகம்.

இரணியனைத் தந்திரமாகத் தொலைத்த திவ்யசக்தியைப் புகழ்ந்து **மாயன்** என்றார்.

18. அளியத்தாய்-அருள் செய்யத்தக்கவனே. எந்தை-அப்பா. அன்புபற்றிய மரபுவழுவமைதி.

19. வல்ல உரு ஒளியாய்-சிறந்த தேககாந்தியையுடையவனே! எண்குணங்கள்:—தீவினையின்மை, மூப்பின்மை, மரணமின்மை, துயரமின்மை, பசியின்மை, தாகமின்மை, செய்விருப்புடைமை, எண்ணந்தவறாது பலிக்குந்தன்மையுடைமை ஆகியவை. நான்ஆ-என்னைப்போல.

20. முன்றில்-இல்முன். நேர்ந்து-மனமிணங்கி.

## பயிற்சி

### வினாக்கள்

1. கடவுள் எதனிலும் கலந்திருக்கிறார் என்பதற்குக் காட்டப்பட்ட உவமைகள் யாவை?

2. பொன்கண்ணன் ஆவியுண்ட வரலாறு என்ன?

3. கடவுள் தன்மைகளைப் பிரகலாதன் எவ்வாறு கூறுகிறான்?

4. கடவுள் எங்குமுளன் என்பதைப் பிரகலாதன் எப்படிக் கூறினான்?

5. பிரகலாதனின் பக்தியின் உறுதி எவ்வாறு புலப்படுகிறது?

6. 'உலகெலாம்' என்ற தொடர் இப்பகுதியில் எங்கெங்கு வந்துள்ளது?

7. நீரடா போதாதென்று-இதனிலமைந்த வரலாறு யாது?

8. நரசிங்கமூர்த்தி தோன்றியது எவ்வாறு வருணிக்கப்பட்டது?

9. இரணியன் கோபம் எவ்வாறு கூறப்பட்டது?

10. இரணியன் வீரம் எவ்வாறு புலப்படுகிறது?

11. இரணியன் எவ்வாறு கொல்லப்பட்டான்? ஏன்?

12. கடவுள் பிரகலாதனை எவ்வாறு கொண்டாடினார்?

13. பிரகலாதன் கேட்ட வரம் யாது?

இலக்கணம்

1. தொழிற்பெயர் வினையாலணையும் பெயர்கட்குரிய வேற்றுமைகள் யாவை? இப்பாடப் பகுதியிலிருந்து இவ்விரண்டு தொழிற் பெயர்களையும் வினையாலணையும் பெயர்களையும் எடுத்தெழுதுக.

2. பின்வரும் சொற்றொடர்களுள் காணப்படும் இடைச் சொற்களை எடுத்தெழுதி அவற்றிற்குப் பொருள்களைக் கூறுக:—
உலகியாவும். பிறரே யாரே. உலகுதந்தானும் பல்வேறுயிர் கடந்தானும். சாணினுமுளன்.

3. பின்வருவனவற்றுள் குற்றிய லுகரங்கள் யாவை? முற்றிய லுகரங்கள் யாவை?

கொன்று. அன்பு. யாது. விம்மு. நடு. உலகு. வணங்கு.

கட்டுரையாக்கம்

(1) இப்பகுதியை ஒரு நாடகமாக்கி எழுது.

(2) கடவுள் அன்பும் கடமை முரணும் என்பது பற்றி ஒருபாரா எழுதுக.

## 5. அன்பின் வெற்றி

தமிழ்நாட்டிலுள்ள ஆண்டாள் சரித்திரம் போலவே வட நாட்டிலே மீராபாய் என்னும் பக்தையின் சரித்திரம் வழங்கி வருகிறது. ஆண்டாள் பாடிய பாசுரங்களை யொப்ப ஹிந்தி மொழியில் மீராபாய் பாடிய பாடல்கள் பிரபலமாக வழங்கி வருகின்றன. கீழ்வரும் பாடல்கள் மீராபாயின் பாடல்களைத் தழுவிப் பாடப்பட்டனவாகும்.

ராஜபுதனத்திலுள்ள ஒரு சிற்றரனுக்குப் புதல்வியாக மீராபாய் 1601-ம் ஆண்டில் பிறந்தாள். சிறுகுழந்தையாக இருந்த போது அவள் விளையாடிக்கொண்டிருந்த கிருஷ்ணவிக்ரகத்தைச் சுட்டி 'இவரே உன் மாப்பிள்ளை' என்று தாயார் விளையாட்டாகச் சொன்னதைக் கருத்திலே கொண்டு, மீராபாய், கண்ணனையே தன் நாயகனாக வரித்து, அவனிடத்தில் அளவற்ற அன்பு செலுத்திவந்தாள். 'சாது ரவிதாஸ்' என்ற ஒரு பக்தர் பூஜித்து வந்த கிரிதரகோபால விக்கிரகத்தைப் பெற்று, அதை அன்போடு பூஜித்து ஆடியும் பாடியும் பஜனை செய்துவரும் நாளில், கிரிதர

கோபாலன் தன்னை மணந்ததாக ஓரிரவிலே கனுக்கண்டு, பொழுது புலர்ந்தபின் தாயினிடம் தன் கனவைக் கூறுகிறாள்.

### கனுக்காணல்

1 "அன்னையே! தாயே! அழகன் ஜகதீசன்
என்னை மணக்க இரவில் கனுக்கண்டேன்;
நென்னல் இரவுகண்ட நீண்ட கனுமுழுதும்
உன்னை ஒளியாமல் உரைக்கின்றேன்; கேளம்மா!

2 ஆல மரங்கள் அடர்ந்து வளர்ந்தவொரு
சோலையும் அந்தச் சோலை நடுவாக
நீல மணிநீர் நிறைந்த குளமொன்றும்
காலை எழுமுன் கனுக்கண்டேன் அம்மாநான்

3 நங்கையர் கூடி நலங்கனிந் தென்மீது
குங்குமம் பூசிக் குளிர்சந் தனம்பூசி
மங்கள மாக மஞ்சள் மிகப்பூசி
அங்குநீ ராட்டக் கனுக்கண்டேன் அம்மாநான்!

4 தோரணம் நாட்டித் துழாய்மாலை தொங்கவிட்டுப்
பூரண கும்பம் பொலிவாக முன்வைத்துத்
தாரணி போற்றத் தகுமோர் புரோகிதர்வந்(து)
ஆரணம் ஓதக் கனுக்கண்டேன் அம்மாநான்!

5 முன்செய் தவப்பயனுல் முகுந்தன் கிரிதரனே
அன்பு நிறைந்திடுமென் அகமுடையா னுகவந்தான்
இன்ப மணமும் நேற் றிரவிலே யானதம்மா
துன்பம் ஒழிந்ததம்மா சுகமும் பிறந்ததம்மா.

—கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை.

### இலக்கணம்

1. எட்டு வேற்றுமை உருபுகளையும் கூறுக. 2. பின்வரும் சொற்களுக்கு வேற்றுமையும் பொருளும் கூறுக:—அன்னையே (1) இரவில் (1) தவப்பயனுல் (5).

### கட்டுரையாக்கம்

1. தலைவி கண்ட கனுவை உன் சொற்களில் அமைத்து எழுதுக.
2. கலியாண வீட்டின் காட்சியைப்பற்றி ஒரு பாரா எழுதுக.

# IV வருணனைப்பகுதி

## 1. நாட்டுவளம்

சீவகசிந்தாமணியில் ஏமாங்கத நாட்டை ஆசிரியர் வருணித்துக்கூறிய பாடல்களுள் இஃதொன்று.

காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுக னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகிழி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற்றிசை போய துண்டே

—திருத்தக்கதேவர்.

## 2. மதுரைமாநகர்

இஃது பரிபாடலிலிருந்து எடுக்கப் பெற்றது. ஆசிரியர் நகரின் பெருமையைக் கூறும் திறம் போற்றத்தக்கது.

மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையுஞ் சீரூர் பூவின்
இதழகத் தனைய தெருவ மிதழகத்
தரும்பொருட் டனைத்தே யண்ணல் கோயில்
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்
தாதுண், பறவை யனையர் பரிசில் வாழ்நர்
பூவினுட் பிறந்தோ னுவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப
வேம வின்றுயி லெழுத லல்லதை
வாழிய வஞ்சியுங் கோழியும் போலக்
கோழியின் எழாதெம் பேரூர் துயிலே

—குன்றம் பூதனர்.

## 3. பட்டினமறுகு

பத்துப் பாட்டினுள் ஒன்றான பட்டினப்பாலை என்ற பாடலினின்று இஃது எடுக்கப்பெற்றது. இதன் ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனர். இது கரிகாலச் சோழனின் பெருமையைக் கூறுவது. சங்ககாலத்திய நம் நாட்டு வாணிபநிலை இதனல் அறியப்படும். பட்டினம்-புகார்ப்பட்டினம்.

நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த வாரமு மகிலும்
தென்கடல் முத்துங் குணகடற் றுகிரும்
கங்கை வாரியுங் காவிரிப் பயனும்
ஈழத் துணவுங் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவு நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு

—உருத்திரங்கண்ணனார்.

## 4. அடியார் தோற்றமும் செயலும்

இப்பாடல் சேக்கிழார் சுவாமிகள் தம் பெரியபுராணத்தில், திருநாவுக்கரசர், மன்னர் இழைத்த இடையூறுகளினின்று தப்பித் திருவதிகை திருவீதியினுள் புகுந்த கோலத்தை வருணித்துக் கூறியதாகும். இது நாயனாரின் அகப்பண்புகளையும் புறப்பண்புகளையும் ஓவியத்தில் தீட்டினாற்போல அமைந்த பாடலாகும்.

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொன்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே

—சேக்கிழார்.

## 5. கோதாவரி யாறு

கம்பராமாயணம் ஆரணிய காண்டம் சூர்ப்பணகைப் படலத்திலிருந்து இப்பாடல் எடுக்கப்பெற்றுள்ளது. இது கவிக்கும் கோதாவரிக்கும் சிலேடையாகப் பாடியதாகும்.

புவியினுக் கணியா யான்ற
பொருடந்து புலத்திற் றாகி
அவியகத் துறைக டாங்கி
யைந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்
றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்

கவியெனக் கிடந்த கோதா
வரியினை வீரர் கண்டார்

—கம்பராமாயணம்.

## 6. பந்தாடல்

கொங்கு வேளிர் இயற்றிய பெருங்கதை என்ற காவியத்தி லுள்ள வத்தவகாண்டத்தின் 'பந்தடி கண்டது' என்ற பகுதியி னின்று இஃது எடுக்கப்பெற்றது. உதயணன் என்பானுடைய மனைவியான வாசவதத்தையும் அவளுடைய தோழிமார்களும் பந்தடித்து விளையாடியதை இவ்வியல் கூறும். அத்தோழிமார்க ளுள் **மானனீகை** என்பாள் இருபத்தொரு பந்துகளை எடுத்து ஆடின அழகை இப்பகுதி விரிக்கின்றது.

சுழன்றன தாமம்; குழன்றது கூந்தல்;
அழன்றது மேனி; அவிழ்ந்தது மேகலை
எழுந்தது குறுவியர்; இழிந்தது சாந்தம்
ஓடின தடங்கண்; கூடின புருவம்;
அங்கையி னேற்றும் புறங்கையி னெட்டியும்
தங்குற வளைத்துத் தாள்புரிந் தடித்தும்
இடையிட யிருகா றெரிதர மடித்தும்
நித்திலக் குறுவியர் பத்தியிற் றுடைத்தும்
பற்றிய கந்துகஞ் சுற்றுமுறை யுரைத்தும்
தொடையுங் கண்ணியு முறைமுறை யியற்றியும்
அடிமுதல் முடிவரை யிழைபல திருத்தியும்
படிந்த வண்டெழுப்பியும் கிடந்தபந் தெண்ணியும்
தேமலர்த் தொடைய றிறத்திறம் பிணைத்தும்
பந்துவர நோக்கியும் பாணிவர நொடித்தும்
சிம்புளித் தடித்துங் கம்பிதம் பாடியும்
ஆழியென வுருட்டியுந் தோழியொடு பேசியும்
சாரிபல வோட்டியும் வாழியென வாழ்த்தியும்
அந்தளிர்க் கண்ணி யவந்திகை வெல்கெனப்
பைந்தொடி மாதர் பற்பல வகையால்
எண்ணு யிரங்கை யேற்றினள்..........

—பெருங்கதை - கொங்குவேளிர்

## வருணனைப்பகுதி

### குறிப்புரை

### 1. நாட்டுவளம்

(1) மீண்ட-மாட்சிமை பெற்ற. வீழ என்னும் எச்சம் காரண காரிய பொருட்கண் இறந்தகாலமுணர்த்திற்று. நெற்றி-உச்சி. பூமாண்ட தீந்தேன் தொடை-பொலிவு மாட்சிமைப்பட்ட தேன் போல இனிய நீரையுடைய குலை. தேனும் தொடையும் என உம்மை விரித்தலுமாம். வருக்கை-பலா; பலாப்பழத்துக்கு ஆன மையின் ஆகுபெயர். இசையால் திசை போயது.

### 2. மதுரைமாநகர்

(2) மாயோன்-திருமால். கொப்பூழ்-உந்தி. சீர் ஊர். புரையும்-ஒக்கும். இதழ் அகம்-இதழின் உள்ளிடத்து. தெருவம்-தெருக்கள். பொகுட்டு-உட்கொட்டை. அண்ணல்-பாண்டியன். தாது-மகரந்தம். தமிழ்க்குடிகள் தாதின் அனையர். தாதுண் பறவை-வண்டு. பரிசில் வாழ்நர்-பரிசிலால் வாழ்க்கையை நடத்துவோர்: பாணர் முதலியோர். பூவினுட் பிறந்தோன்-பிரமன், நான்மறைக் கேள்வி-வேதமந்திரம். எடுப்ப-எழுப்ப. ஏமம்-இன்பம். எழுதல்-விழித்தல். அல்லதை-அல்லாமல்; ஐ, சாரியை. வஞ்சி-சேரரது தலைநகர். கோழி-உறையூர்; சோழனது தலைநகர். மதுரை வேத ஒலியால் துயிலெழும்; கோழி ஒலியால் எழாது.

### 3. பட்டினமறுகு

1. நீர்-கடலிலே.
2. காலின்-காற்றால். நிமிர்பரிபுரவி-நிமிர்ந்த செலவையுடைய குதிரைகளும். கரு கறிமூடையும்-கரிய மிளகு மூட்டைகளும். இவை இரண்டும் நீரில் காலின் வந்தன.
3. வடமலை-மேரு. மணி-மாணிக்கம். பொன்-சாம்பூநதம் என்னும் பொன்; மேருமலையின் தென்பாலுள்ள நாவல் மரத்தின் கனிச்சாற்றிலிருந்து உண்டாய பொன்.
4. குடமலை-பொதியின் மலை; புகார்க்குத் தென்மேற்காதலின் குடமலை யென்றார்; அன்றி மேற்குள்ள மலை என்றுமாம். ஆரம்-சந்தனம்.
5. தென் கடல்-தென்திசைக் கடல்; தாமரபன்னி கலக்கப் பெற்ற கடல்; அந்தப்பாகம் கொற்கையென்று வழங்கும். குணகடல்துகிரும்-கீழ்த்திசைக் கடலிற் பிறந்த முத்தும்.
6. வாரி-பொருள். பயன்-உண்டாகிய பொருள்கள்.

7. ஈழத்துணவு - சிங்களதேசத்திலுண்டாகிய நுகர் பொருள். காழகம்-கடாரம். (Burma) ஆக்கம்-நுகரும் பொருள்கள்.
8. அரியவும்-சீன முதலிய இடங்களிலிருந்த கருப்பூரம், பனி நீரும், குங்குமம் முதலியன.
9. வளந்தலை மயங்கின நனதலைமறுகு-செல்வம் தலைதெரியாத - அகன்ற இடங்களையுடைய தெருவுகள்.

### 4. அடியார் தோற்றமும் செயலும்

தூய-தூய்மை செய்யும். துதைந்த - செறிந்து மிக்கிருந்த. பொன்மேனி-நிறம், அழகு, அருமைப்பாடு ஆகியவற்றால் பொன் போன்ற மேனி. வடம்-உருத்திராக்கவடம். தாழ்தல்-விரும்புதலுமாம். தைவருதல் - தடவுதல். நாயகன் சேவடி தைவரு சிந்தை என்றமையால், தலைவி தலைவர்க்குள்ள மனவொற்றுமைக்கும் பக்தன் இறைவன் இவர்க்குள்ள மனஒற்றுமைக்கும் ஒப்புமை கூறியவாறு. சிந்தை - அறிவு. அன்புநீர் பொழி - அன்பினால் நீரினைப் பொழியும். பதிகம் - தேவாரப் பதிகம். சிந்தையில் - என்பதும் பாடம்.

### 5. கோதாவரி யாறு

புலம் - அறிவு, வயல். அவி அகம் துறைகள் - அமைந்த அகப்பொருளின் துறைகள்; வெப்பம் தணியத்தக்க நீராடு துறைகள். ஐந்திணை - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், மாலை என்ற ஐந்திணைகளின் இலக்கணம்; மேலே சொல்லிய ஐவகை நிலங்களின் வழி. சவிஉற - ஒளி பொருந்த. ஒழுக்கம் - நடை (Style); நீரொழுக்கு.

### 6. பந்தாடல்

1. தாமம்-மாலை. குழன்றது-குழைந்தது. 2. அழன்றது-வெப்பமாயது. 3. குறுவியர்-சிறிய வியர்வை. சாந்தம்—சந்தனம். 7. கால்தெரிதர. 8. நித்திலம்-முத்துப்போன்ற. 9. கந்துகம்-பந்து. 10. தொடை-மாலை. கண்ணி-தலைமாலை. 11. இழை - ஆபரணம். 14. பாணி - தாளம். 15. சிம்புளித்து - கண்ணை மூடிக்கொண்டு. கம்பிதம்-நடுக்கமுள்ள பாட்டு. 16. ஆழி-உருளை. 18. அவந்திகை-ஒரு நாடு.

## பயிற்சி

### வினாக்கள்

1. ஏமாங்கதநாட்டின் வளம் எவ்வாறு கூறப்பட்டது?

2. மதுரைநகர வாழ்க்கை எவ்வாறு உருவகிக்கப்பட்டது?

3. மதுரையின் கல்வி நிலையைப்பற்றி என்ன அறியலாம்?

4. காவிரிப்பூம் பட்டினம் எந்நாடுகளுடன் வாணிபம் செய்தது? அவ்வவ்விடங்களினின்று வந்த பொருள்கள் யாவை?

5. அப்பர்சுவாமிகளின் தோற்றம் எவ்வாறு வருணிக்கப்பட்டது?

6. கோதாவரிக்கும் கவிதைக்கும் உள்ள ஒற்றுமைகள் யாவை?

7. பந்தாடுபவளின் உடலில் உண்டான மாறுபாடுகள் யாவை?

8. அவள் எவ்வெவ்விதம் பந்தடித்தாள்?

9. பந்தடித்தபோது அவள் செய்துகாட்டிய பிறதொழில்கள் யாவை?

### இலக்கணம்

1. சிலேடை, உருவகம்—இவற்றை விளக்கி, இவை இப்பாடப்பகுதியில் அமைந்துள்ள இடங்களை விளக்குக.

2. பின் வருவனவற்றைப் பிரித்தெழுதுக:—சீரூர். தண்டமிழ். தென்கடல். செஞ்சொல். அங்கை. பைந்தொடி.

### கட்டுரையாக்கம்

1. உன் ஊர்ப்புறக் காட்சியை வருணிக்க.

2. சிலேடையாகப் பொருள் அமையும்படி எவையேனும் இரண்டு வாக்கியங்கள் வரைக.

3. நீ பார்த்த ஏதேனும் ஒருவிளையாடலை விளக்கி ஒரு கட்டுரை வரைக.

# V. பிரபந்தத்தொகை

**பிரபந்தங்கள்** :—தமிழில் பிற்காலத்தில் பிரபந்தங்கள் என்ற பலவகைச் சிறிய நூல்கள் எழுந்தன. அவை 96 வகைப்படும் என்று கூறுவர். அவற்றுள் கலம்பகம், பரணி, தூது, உலா, பிள்ளைத் தமிழ் என்ற வகைகள் மிகப் பிரசித்தமானவை. புலவர்கள் தாம் வணங்கும் கடவுளரையோ அல்லது தாம் போற்றும் வள்ளல்களையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இந்நூல்களை இயற்றுவர். இவ்வாறு ஒவ்வொரு வகையிலும் பல பிரபந்தங்கள் தமிழ்நாட்டில் எழுந்துள்ளன. அவற்றுள்,

## 1. கலம்பகம்

**கலம்பகம்** என்பது பலவகைப் பாடல்களால் பலவகைத் துறைப் பொருள்கள் விளங்க ஒரு தலைவர்மீது பாடப் படுவதாகும்.

**திருவருணைக் கலம்பகம்** என்பது எல்லப்ப நாவலர் என்ற கவிஞரால் திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அருணா சலேசர்மீது இயற்றப்பெற்றதாகும். அதனுள் **மறம்** என்ற துறை, மறவர்வீட்டுப் பெண்ணை விரும்பி ஓர் அரசன் தூதனுப்ப, அத்தூதினை மறுத்து அம்மறவர்கள் கூறுவதாகப் பாடுவது.

**திருவரங்கக் கலம்பகம்** என்பது ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளி யுள்ள திருமால்மீது பிள்ளைப்பெருமாளையங்கார் என்ற புலவர் பாடியதாகும். மடக்கு என்பது ஒரு சொல்லணி.

### மறம்

i. தீண்டரிய மடற்பனையின் சருகை வாரிச்
சிற்றிரும்பால் சுற்றிவரச் செருக்கிக் கூட்டி
நீண்டதுவும் சுருண்டதுமா வரைந்து சுற்றி
நிருபமெனக் கொடுத்தெதிரே நிற்கும் தூதா !
தாண்டவ மாடும்பானார் அருணை நாட்டில்
தருமறப் பெண்டனைவேண்டிச் சமரிற்போந்து
மாண்டவரேறியகோணல் வளைகள் நாங்கள்
வருங்கல்வழி வாயில்நடு மரங்க டாமே.

—திருவருணைக்கலம்பகம் எல்லப்பநாவலர்.

### மடக்கு

ii. அரவில் நடித்தானும் உரவில் ஒடித்தானும்
அடவி கடந்தானும் புடவி யிடந்தானும்
குரவை பிணைத்தானும் பரவை அணைத்தானும்
கோசலை பெற்றானும் வீசலை யுற்றானும்
முரனை அறுத்தானும் கரனை ஒறுத்தானும்
முத்தி அளித்தானும் அத்தி விளித்தானும்
பரமபதத்தானும் சரம விதத்தானும்
பாயல் வடத்தானும் கோயி லிடத்தானே.

—திருவரங்கக்கலம்பகம் - பிள்ளைப்பெருமாளையங்கார்.

## 2. பிள்ளைத் தமிழ்

**பிள்ளைத் தமிழ்.** தாம் பாடவிரும்பிய தலைவரைக் குழந்தை யாகப் பாவித்து, அக்குழந்தைக்குரிய பத்துப் பருவங்களில் அவ்வப்பருவத்துக்கேற்ற செய்திகளை அமைத்து பருவம் ஒன் றற்குப் பப்பத்துப்பாடல்களால் பாடுவது. இவற்றுள் அம்புலிப் பருவப் பாடல் என்பது குழந்தையுடன் அம்புலியை விளையாட வருமாறு தாய்மார்கள் அமைப்பதாகக் கூறும். இப்பாடல், குமர குருபர சுவாமிகளால், வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளி யுள்ள முத்துக்குமாரசுவாமி என்ற பெயருள்ள முருகப்பிரான் மீது பாடப்பெற்றதாகும். இதனில் முருகப்பிரானுக்கும் அம்பு லிக்குமுள்ள சில ஒற்றுமைகள் சிலேடையாக அமைந்துள்ளன.

### அம்புலிப் பருவம்

i. சொற்றரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந்
தோகைமேற் கொண்டருளினய் ;
தோற்றிமுன் பொங்கிமலை போலவலை மோதுமச்
சோதிவேலையுமுகந்தாய் ;
குற்றமில் குணத்தைக் குறித்தவிர வலர்முகம்
கோடா தளித்தல்செய்தாய் !
கோகன நாயகன் வரக்கூ விடுங்குக்
குடங்கொடிய தாகவைத்தாய் ;
உற்றிடு மிதழ்க்குமுதம் விண்டுதன் றேனெழுக
வொளிநிலா நகைமுகிழ்த்தாய் ;
உன்செய்கை யெம்பிரான் றன்செய்கை போலுமால்
உனையுமிவ னெவ்வாதிரான் ;
அற்பொதி களத்தவ னளித்தகும ரேசனுடன்
அம்புலீ, ஆடவாவே !
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ, ஆடவாவே !

—முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்—குமரகுருபரர்.

## 3. கலிங்கத்துப் பரணி

**பரணி** என்றது, ஆயிரம் யானையைக் கொன்ற வீரனைத் தலைவனாகக் கொண்டு, அவனுடைய வீரமும் புகழும் விளங்க,

அவன் செய்த போர்த்திறத்தை விளக்கப் பாடும் பிரபந்தமாகும். போர்க்குரிய கடவுளாகிய காளிக்குப் பரணிநாள் சிறந்ததாதலால், இப்பிரபந்தத்திற்கு இப்பெயர் வந்தது என்பர். அன்றியும், பரணி பாடும் புலவன் வேல் முதலிய படைகளாலாகிய பரண் மீதிருந்து பாடுவன் என்றும், அக்காரணம்பற்றிப் பரணி என்ற பெயர் வந்ததென்றும் கூறுவர்.

பரணி பாடுதலிற் சிறந்தவர் **கலிங்கத்துப் பரணி** ஆசிரியரான **ஜயங்கொண்டார்** என்பவர். இவர் 1-வது குலோத்துங்கச் சோழனின் தண்டத் தலைவனான **கருணாகரத் தொண்டைமான்** என்பவன் கலிங்கநாட்டை வென்ற செய்தியை இந்நூலில் கூறுகின்றார். போர்க்குரிய ஓசையமைதி இப்பகுதியில் அமைந்திருப்பதைக் காண்க. பிற்காலச் சோழர்காலத்தைப் பற்றிய சரித்திர அறிவு பெறுவதற்கு இந்நூல் பெரிதும் பயன்படுகிறது.

போர்

i. எடுமெடும் எடுமென எடுத்ததோர்
இகலொலி கடலொலி அவிக்கவே
விடுவிடுவிடு பரிகரிக்குழாம்
விடும்விடும் எனுமொலியிசைக்கவே;

ii. வெருவர வரிசிலை தெறித்தநாண்
விசைபடு திசைமுகம் வெடிக்கவே;
செருவிடை அவரவர் தெழித்ததோர்
தெழிஉல குகள்செவி டெடுத்தவே;

iii. எறிகடலொடுகடல் கிடைத்தபோல்
இருபடைகளும் எதிர்கிடைக்கவே
மறிதிரைதிரையொடு மலைத்தபோல்
வருபரியொடுபரி மலைக்கவே

—ஜெயங்கொண்டார்.

## 4. தமிழ்விடு தூது

தூது என்னும் பிரபந்தம், காதல் கொண்ட ஒரு தலைவி, பிரிவால் தான்படும் துன்பத்தைத் தலைவனிடம் தெரிவித்து வருவதற்காக, ஏதேனும் ஒன்றைத் தூதாக விடுவதாகக் கூறும்

நூலாகும். இவ்வாறு கூறும் முகத்தால் தலைவனின் பெருமைகள் விளங்கப் பாடுவது இப்பிரபந்தத்தின் நோக்கமாகும்.

**தமிழ்விடு தூது** என்னும் பிரபந்தம் மதுரைச் சொக்கநாதர் மீது ஒரு மடந்தை தன் விரகத்தைச் சொல்லிவரும்படி தமிழைத் தூதாக அனுப்பியதைக் கூறும். இதன் ஆசிரியர் யாரென்று விளங்கவில்லை. இதனைப் பதிப்பித்த மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்கள் 'இன்றும் அறியேனே' என்ற தம் கட்டுரையில், இந்நூலைத் தாம்பெற்ற செய்தியைக் கூறுகின்றனர்.

இந்நூலில் தமிழின் தன்மைகளும் பெருமைகளும் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளன. தமிழுக்கும் கடவுளுக்கும் உள்ள சம்பந்தம் இப்பகுதியில் விளக்கப்பட்டிருப்பதைக் காண்க.

**கண்ணிகள்**

i. இருந்தமிழே யுன்னா லிருந்தே னிமையோர்
விருந்தமிழ்த மென்றாலும் வேண்டேன்-வருந்தி
[னன்மால்

ii. வெல்லானை தின்ற விளங்கனியா னேன்விரகக்
கல்லானை தின்ற கரும்பானேன்-நல்லவரைத்

iii. தேடுநிழற் சிந்தனையிற் றேம்பினேன் வெம்பனியால்
வாடிய செந்தா மரையொத்தேன்-ஓடமிசைக்

iv. கொள்ளம்பூ தூர்வெள்ளக் கொள்ளைகடந் தா
[யென்மேல்
வெள்ளங் கடத்திவிட வேண்டாவோ—தள்ளென்று

v. அங்கரும்பின் கூனெழித்தா யன்றுவழு திக்குமதன்
செங்கரும்பின் கூனெழியச் செய்யாயோ? அங்கமுறு

vi. வெப்புநோய் தீர்த்தாயவ் வேந்தனுக்கென் வெவ்
வெப்புநோய் தீர்க்க விரும்பாயோ! [விரக

## 5. திருக்கழுக்குன்றத்து உலா

உலா என்ற பிரபந்தம் பாட்டுடைத் தலைவன் உலாப் புறப்படும் சிறப்பையும், அவனைக் கண்டு ஊரார் காதலித்துக் கூறும் தன்மைகளையும் விளக்கிக் கூறும்.

அந்தகக்கவி வீரராக முதலியார் என்ற கவிஞர் திருக்கழுக்குன்றத்தில் கோயில்கொண்டருளிய கடவுள் உலாப் போந்ததை இந்நூலில் கூறுகின்றார். ஊர்வலத்தின் முன் திருச்சின்னம் ஊதும் தன்மை இக்கண்ணிகளிற் கூறப்பட்டுள்ளன.

### திருச்சின்னம்

உரையிற் சுருதி யொருவரைசெய் தந்த
வரையிற் குடிவந்தான் வந்தான்-பரவை
அலைமருந் தண்டர்க்கே யண்டர்க்கும் யார்க்கும்
மலைமருந் தாகவந்தான் வந்தான்-தொலையா
வினைமுற்றப் பாட்டொன்று வேட்டோர் கணிகை
மனைமுற்றத் தேவந்தான் வந்தான்

—அந்தகக்கவி வீரராக முதலியார்.

### குறிப்புரை

1. **கலம்பகம்:** மடற்பனை-மடல்களையுடைய பனை. சருகு-ஓலை. சிற்றிரும்பு-எழுத்தாணி. வரைந்து-எழுதி. நிருபம்-கடிதம். தாண்டவம்-நர்த்தனம். சமரில்-போரில். கோணல் வளைகள் மரங்கள் தாமே என இயைக்க.

அரவு-பாம்பு; காளிங்கன். வில் ஒடித்தான்-இராமன். புடவி-பூமி. குரவை-ஒருவகைக் கூத்து. பரவை-கடல்; இங்கே சேது. முரன்-ஓர் அசுரன் பெயர். கான்-தண்டகாரணியத்திலிருந்த ஓர் அரக்கன். அத்தி-யானை; கஜேந்திரம். விளித்தான்-விளிக்கப்பட்டானும். வடம்-ஆல். கோயில்-ஸ்ரீரங்கம்.

2. **பிள்ளைத்தமிழ்:** புலவர் - தேவர், கவிஞர். கலை - சந்திரனுக்குரிய கலைகள்; கல்வி. ஓகை-உவகை. தோகை-மயில். வேலை-கடல்; வேலாயுதத்தை. முகந்தாய், உகந்தாய் எனப் பிரிக்க. இரவலர்-யாசகர். இரவு அலர்முகம் - இரவிலே விளங்கும் முகம். கோகனகாயகன்-சூரியன். குக்குடம்-கோழி. கொடியதாக-கொடிய தன்மையதாக; கொடியாக. நிலாநகை - நிலாவாகிய நகையென்றும், நிலாவையொத்த நகையென்றுங் கொள்க. அல்பொதிகளத்தவன் - நீலகண்டன்; சிவபெருமான்.

3. **கலிங்கத்துப்பரணி**: இகல் - பகைமை; போர். பரிகரிக்கு ழாம் - குதிரை, யானைகளின் கூட்டம். வெருவர - அஞ்ச. செரு தெழி-பேரொலி. கிடைத்த-எதிர்த்தல், கிட்டுதல்.

4. **தமிழ்விடுதூது**: மால்வெல் ஆனை - காமமயக்கமாகிய வெல் லும் யானை. ஆனையென்றது விளங்கனிக்கு வருவதொரு நோயை; ஆனைதின்ற விளங்கனி மேலோடிருக்க உள்ளில்லா மல்போம். விரகக்கல்லானை; விரகம் - பிரிவு. கல்லானை கரும்புதின்ற கதை திருவிளையாடற் புராணத்திலுள்ளது. விரகத்தால் தான் ஆனை தின்ற விளங்கனியாகவும், கரும் பாகவும் ஆகி அழிந்தேன் என்பது பொருள்.

நல்அவரைத் தேடுநிழல்-சிந்தனையில் - நல்ல அவரைக்கொடி படர்ந்த பந்தரின் நிழலிலுள்ளோர் அறிவுபோல்; அவர் அறிவு தேயுமென்பது ஆயுள்நூல் துணிபு. பனி தாம ரையை வாட்டும் என்பதுகொண்டு வெம்பனியால் வாடிய செந்தாமரை என்றாள்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருக்கொள்ளம்பூதூருக் கெழுந்தருளுகையில் "கொட்டமே கமழும்" என்னும் திருப் பதிகம் பாடி, ஆற்றுவெள்ளத்தைக் கடந்த செய்தி இங்குக் கூறப்பட்டது. கொள்ளை - மிகுதி.

அங்கு-மதுரையில். பின்கூன்-முதுகின்கண்ணுள்ள கூன். வழுதிக்கு - கூன்பாண்டியனுக்கு. வழுதிக்குச் சம்பந்தர் பாடி கூன்நிமிர்ந்த வரலாறு. கரும்பின்-மன்மதன் வில்லாகிய கரும்பினது. கூன்-வளைவு. அங்கமுறு-பாண்டியன் உடம்பி லுள்ள.

5. **திருக்கழுக்குன்றத்து உலா**: சுருதி - வேதம். வரை - மலை. கழுக்குன்றத்தில் வேதமே மலையாக நிற்கிறது என்பது ஐதி கம். பரவை-திருப்பாற்கடல்.

அலைமருந்து - அமிருதம். அண்டர்க்கு - தேவர்க்கு. மலை மருந்தென்பது வேதபுரி சுவருக்குரிய ஒரு பெயர்.

வேட்டு - விரும்பி. நாச்சிமுத்து என்னும் கணிகை, தினந் தோறும் பாடல் பாடி வேதகிரீசரை வழிபட்டுவந்தாள். ஒரு

நாள் மழை மிகுதியாய்ப் பெய்தமையால் அவள் கோயிலுக்குச் செல்லமுடியாமல் வருந்த, சிவபெருமான் அவள் வீட்டுமுற்றத்தில் எழுந்தருளிக் காட்சியளித்தனர் என்பது கதை.

## பயிற்சி

### வினக்கள்

1. இப்பகுதியில் காணப்படும் பிரபந்தப்பெயர்கள் யாவை? ஒவ்வொன்றையும்பற்றி இவ்விரண்டு வாக்கியங்கள் கூறுக.

2. மறவர் அரசர் நிருபத்தை எவ்வாறு இகழ்கின்றனர்?

3. மறவர் தம் பெருமையை எப்படிக் கூறினர்?

4. அரங்கக் கலம்பகப் பாடலில் குறிக்கப்பட்டுள்ள அவதாரங்கள் யாவை?

5. பொருள் கூறுக:—முத்தி அளித்தானும் அத்தி விளித்தானும். அற்பொதிகளத்தவன். இகலொலி கடலொலி அடக்கவே. ஆனைதின்ற விளங்கனி.

6. போர்க்களத்தில் நிகழ்ந்தவை யாவை?

7. தமிழில் தான்வைத்த அன்பைத் தலைவி எப்படிக் கூறுகிறாள்?

8. இப்பகுதியில் சம்பந்தர் விஷயமாகக் கூறப்பட்டவை யாவை?

9. கணிகைமனைமுற்றத்தே வந்தான்-வரலாறு என்ன?

### இலக்கணம்

1. சொல்லணி, பொருளணி இவற்றுக்குள்ள வேற்றுமை யாது?

2. மடக்குப் பாடலில் மோனை எதுகைகள் எவ்வாறு அமைந்துள்ளன?

3. பிள்ளைத் தமிழ்ப்பாடல் எத்தனைஅடிகள் உளது? ஒவ்வோர் அடியிலுமுள்ள சீர்கள் எத்தனை?

4. சிலேடை, உவமை, ஐயம்—இவ்வணிகளுக்கு இப்பகுதியினின்று உதாரணங் காட்டுக.

கட்டுரையாக்கம்

1. நமது புத்தகசாலையினின்று பிரபந்த நூல்களைக் கண்டெடுத்து, அவற்றின் தன்மைகளைப்பற்றிச் சில வாக்கியங்கள் எழுதுக.

2. உங்கள் ஊர்க்கடவுள் உலாப்போந்ததாகக் கொண்டு அதன் தன்மைகளை விளக்கி ஒருபக்கம் எழுதுக.

# VI. தனிப்பாடல்கள்

## தாதன்

1. தாதாவென் றாலுந் தருவென்று சொன்னாலுந்
தாதாவென் றாலுந் தருவனோ? தாராதான்;
தாதாவென் றாலுந் தருவென்று சொன்னாலுந்
தாதாவென் றாலுந் தருவனந் தாதனே

—கம்பர்

## நிந்தாஸ்துதி

2. நாணென்றா னஞ்சிருக்கு நற்சாபங் கற்சாபம்
பாணந்தான் மண்டின்ற பாணமே-தாணுவே
சீராரூர் வாழுஞ் சிவனேயஃ தெப்படிநீர்
நேராரூர் செற்ற நினைவு

அதிமதுரக் கவிராசன்—காளமேகன்

## திருமால்

3. நிலங்கா ரணமாக நீர்க்கங்கை யேற்றான்
நீண்டதா ளாலங்கோர் நீர்க்கங்கை யேற்றான்
சலங்கா ரணமாகச் சங்குவாய் வைத்தான்
தாயலா ளவியகஞ் சங்குவாய் வைத்தான்
துலங்காச்சீர்த் தானவரைத் துன்னத்தானட்டான்
துன்னுவார்க்கின்னமிர்தந் துன்னத்தா
[னட்டான்

இலங்கா புரத்தார்தங் கோமானை யெய்தான்
ஏத்தாதார் நெஞ்சத்து ளெஞ்ஞான்றுமெய்
[தான்

**வாழ்த்து**

4. கண்ணுதலோன் காக்க; கடிநேமி யோன்காக்க;
எண்ணிருந்தோ ளேந்திழையாள் தான்காக்கப்-
[பண்ணியனாற்
சென்னியர்க் களிக்குஞ் செல்வனீ
மன்னுக நாளுமிம் மண்மிசை யானே.

—பெரும்பொருள் விளக்கம்.

## குறிப்புரை

1. தரு - கல்பதரு. தருவன் நம் தாதன். தாதா என்பதற்கு இரு பொருள் கூறுக.

2. நாண்-வில்லின் கயிறு. நஞ்சு-விஷம். வாசுகியைச் சிவபெருமான் நாணக்கொண்டார். சாபம்-வில். கல். இங்கே மேருமலை. பாணம்--அம்பு; இங்குத் திருமால். திருமால் ஊழியினிறுதியில் உலகத்தில் உண்கின்றார் என்றதுகொண்டு. தாணு - சிவபிரான். ஆரூர் - திருவாரூர். நேரார் - பகைவர்; திரிபுரம்.

இப்பாடலின்முன் பகுதியை அதிமதுரக்கவிராசனும், பின் பகுதியைக் காளமேகப்புலவரும் பாடினர்.

3. இச்செய்யுள் யாப்பருங்கலவிருத்தி என்ற நூலில் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளது.

நீர்க்கு அங்கை ஏற்றான் எனப் பிரித்துக்கொள்க. இது வாமனவதாரச் செய்தி.

தாளால் கங்கையேற்றது, திருவிக்கிரமாவதாரச் செய்தி.

சதுமுகன் கையில், சதுப்புயன் தாளில், சங்கரன் சடையினில் தங்கி இப்புனல்—என்ற பெரியாழ்வார் திருமொழியைக் காண்க. சலம் - பகை. தாய் அலாள் (பூதனை) அவிய நஞ்சு அங்குவாய் வைத்தான். தானவரை - மதநீர்பொழியும் மலையை

யொத்த குவலயாபீடம். தான் அட்டான் - கொன்றான். குவலயா பீடம் தன்னைக் கொல்லநெருங்கத் தான் அதனைக் கொன்றவன். பிற்பகுதிக்கு, தன்னை நெருங்குபவரான தேவர்கள் பெற, இன்னமிர்தத்தை ஆக்கித்தந்தவன் எனப் பொருள்கொள்க.

4. கண்ணுதலோன்-சிவபெருமான். நேமி-சக்கரம். நேமியான்-திருமால். எண் இரும் தோள்-8 தோள். பண்இயல் நூல்.

## பயிற்சி

### வினாக்கள்

1. நிந்தாஸ்துதி என்றால் என்ன? புலவர் நிந்திப்பது எப்படி? அது துதியாவது எப்படி?

2. பொருள் விளக்குக: சலங் காரணமாகச் சங்குவாய் வைத்தான்; தாயலாளவியச் சங்குவாய் வைத்தான். துலங்காச் சீர்த்தானமரைத் துன்னத்தானட்டான்.

### இலக்கணம்

1. 4-ஆவதுபாடல் பாவகையுள் எதனைச் சார்ந்தது? இதன் சீர், துறைகளின் அமைதியை ஆராய்க.

### கட்டுரையாக்கம்

1. விநாயகர்மீது நிந்தாஸ்துதியாக இரண்டு வாக்கியங்கள் எழுதுக.

2. சங்கரன்பிள்ளை சட்டியிலே மாவறுத்தான்-இரு பொருள்கள் கூறுக. இதற்கோர் கதை அமைக்க.



# உரைநடைப் பகுதி

## 1. இறையனார் அகப்பொருளுரை கண்ட வரலாறு

-நக்கீரர்-

உலகத்திலுள்ள பொருள்களைத் தமிழர் அகப்பொருள், புறப்பொருள் என இருவகைகளாகப் பிரித்திருக்கின்றனர். அவற்றைப்பற்றிப் பாடுவதற்கு விதிகளை வகுத்து, அவற்றை இலக்கணங்களாகவும் எழுதியிருக்கின்றனர். அவ்வாறெழுந்த இலக்கண நூல்களுள், இறையனார் அகப்பொருள் இலக்கணம் என்பது ஒன்று. அது தமிழ் நூல்களுள் பழமையான தொன்றாகும். அது தோன்றிய விதத்தையும் அதற்கு உரை வகுக்கப்பட்ட வரலாற்றையும் இப்பாடப் பகுதி கூறும்.

இஃது அந்நூலின் உரையினின்றே எடுக்கப்பெற்றது. இது நக்கீரருடைய நடை என்று சிலரால் கருதப்படுகிறது. மிகப் பழைய காலத்துத் தமிழ் உரைநடைக்கு இது மிகவும் ஏற்ற உதாரணமாகும். வாக்கியங்கள் மிக நீளமானவை. நடை மிடுக்கும் பொருட் செறிவும் கொண்டதாகும் என்பதை இதனைப் படிப்பதால் உணரலாம். சொற்கள் பெரும்பாலும் செந்தமிழ்ச் சொற்களாயமைந்திருப்பதோடு, ஓசையினிமையும் பெற்று விளங்குவதையும் கூர்ந்து காண்க.

1. அக்காலத்துப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது. செல்லப் பசி கடுகலும், அரசன் சிட்டரையெல்லாங் கூவி, "வம்மின், யானுங்களைப் புறந்தரகில்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகிறது; நீர் போய் நுமக்கறிந்தவாறு புக்கு, நாடு நாடாயின ஞான்று என்னை உள்ளி வம்மின்" என்றான். என, அரசனை விடுத்து எல்லோரும் போயின பின்றைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பின்னர் நாடுமலிய மழை பெய்தது. பெய்த பின்றை அரசன், "இனி நாடு நாடாயிற்றாகலின், நூல் வல்லரைக் கொணர்க" என்று எல்லாப் பக்கமும் ஆட் போக்க, எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, "பொருளதிகாரம் வல்லாரை எங்கும்

தலைப்பட்டிலேம்'' என்று வந்தார். வர, அரசனும் புடை படக் கவன்று, ''என்னை, எழுத்தும் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமெனின் இவை பெற்றும் பெற்றிலேம்' எனச் சொல்லாநிற்ப, மதுரை ஆலவாயில் அழல்நிறக் கடவுள் சிந்திப்பான்: ''என்னை, பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று; அதுதானும் ஞானத்திடைய தாகலான், யாம் அதனைத் தீர்க்கற்பாலம்'' என்று இவ்வறுபது சூத்திரத்தையும் செய்து மூன்று செப்பிதழகத் தெழுதி, பீடத்தின் கீழிட்டான்.

2. இட்ட பிற்றைஞான்று, தேவர்குலம் வழிபடுவான் கோட்டத்தை எங்கும் துடைத்து, நீர்தெளித்து, பூவிட்டு, பீடத்தின்கீழ்ப் பண்டென்றும் அலகிடாதான் அன்று தெய்வத் தவக்குறிப்பினான், ''அலகிடுவன்'' என்று உள்ளங்குளிர அலகிட்டான். இட்டார்க்கு அவ்வலகினோடும் இதழ் போந்தன. போதரக் கொண்டு போந்து நோக்கினாற்கு, வாய்ப்புடைத் தாயிற்றோர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று; காட்டப் பார்ப்பான் சிந்திப்பான்: ''அரசன் பொருளதிகாரம் இன்மையின் கவல்கின்றான் என்பது பட்டுச் செல்லா நின்றது உணர்ந்து நம்பெருமான் அருளிச் செய்தானாகும்'' என்று தன்னகம் புகாதே, கோயில் தலைக்கடைச் சென்று நின்று, கடைகாப்பாளர்க்கு உணர்த்த, கடைகாப்பார் அரசர்க்குணர்த்த, அரசன், ''புகுதருக'' என்று பார்ப்பானைக் கூவ, சென்று புக்கு காட்ட, கொண்டு நோக்கி, ''இது பொருளதிகாரம்; நம்பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்தானாகற்பாலது'' என்று அத்திசை நோக்கித் தொழுது கொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து, ''நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச்செய்த பொருளதிகாரம்; இதனைக் கொண்டு போய்ப் பொருள் காண்மின்'' என, அவர்கள் அதனைக் கொண்டுபோந்து, கன்மாப்பலகை ஏறியிருந்து ஆராய்வுழி, எல்லாரும் தாந்தாம் உரைத்த உரையே நன்றென்று சில நாளெல்லாஞ் சென்றன.

3. செல்ல, "நாம் இங்ஙனம் எத்துணையுரைப்பினும் ஒருதலைப்படாது; நாம் அரசனுழைச் சென்று,'நமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டும்' என்று கொண்டுபோந்து, அவனற் பொருளெனப்பட்டது பொருளாய், அன்றெனப்பட்டது அன்ருய் ஒழியக் காண்டும்" என, எல்லாரும் ஒருப்பட்டு அரசனுழைச் சென்ருர். செல்ல, அரசனும் எதிர் எழுந்து சென்று, "என்னை? நூற்குப் பொருள் கண்டீரோ?" என, "அது காணுமாறு எமக்கோர் காரணிகனைத் தரல் வேண்டும்" எனப், "போமின், நுமக்கோர் காரணிகனை எங்ஙனம் நாடுவேன்? நீயிர் நாற்பத்தொன்பதின் மராயிற்று; நுமக்கு நிகராவர் ஒருவர் இம்மையின்றே" என்று அரசன் சொல்லப்போந்து, பின்னையும் கன்மாப்பலகை ஏறியிருந்து, "அரசனும் இது சொல்லினன்; யாங் காரணிகனைப் பெறுமாறு என்னைகொல்!" என்று சிந்தித்திருப்புழிச், "சூத்திரஞ்செய்தான் ஆலவாயில் அவிர்சடைக் கடவுளன்றே! அவனையே காரணிகனையும் தரல்வேண்டுமென்று சென்று வரங்கிடத்தும்" என்று சென்று வரங்கிடப்ப, இடையாமத்து, "இவ்வூர் உப்பூரி குடிகிழார் மகனுவான் உருத்திரசன்மன் என்பான், பைங் கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப்பிராயத்தான், ஒருமூங்கைப்பிள்ளை உளன்; அவனை அன்னன் என்று இகழாது கொண்டுபோந்து, ஆசனமேவி இரீஇக் கீழிருந்து சூத்திரப் பொருளுரைத்தால், கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும் மெய்யாயின உரை கேட்டவிடத்து; மெய்யல்லா உரை கேட்டவிடத்து வாளா இருக்கும். அவன் குமார தெய்வம். அங்கோர் சாபத்தினல் தோன்றினன்" என முக்கால் இசைத்த குரல் எல்லார்க்கும் உடன்பாடாயிற்ருக எழுந்திருந்து, தேவர்குலத்தை வலங்கொண்டு போந்து, உப்பூரி குடி கிழாருழைச் சங்கமெல்லாம் சென்று, இவ்வார்த்தையெல்லாம்சொல்லி, "ஐயனுவான் உருத்திரசன்மனைத் தரல்வேண்டும்" என்று வேண்டிக் கொண்டு போந்து வெளியதுஉடீஇ, வெண்பூச் சூட்டி, வெண்சாந்தணிந்து, கன்மாப்பலகை எற்றி இரீஇக் கீழிருந்து சூத்

திரப்பொருள் உரைப்ப, எல்லாரும் முறையே உரைப் பக்கேட்டு வாளா இருந்து, மதுரை மருதனிளநாகனுர் உரைத்த விடத்து ஒரோ வழிக் கண்ணீர் வார்ந்து மெய்மயிர் நிறுத்தி, பின்னர் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர் உரைத்த விடத்து, பதந்தொறும் கண்ணீர் வார்ந்து, மெய்மயிர் சிலிர்ப்ப இருந்தான். இருப்ப, ஆர்ப்பெடுத்து, "மெய் யுரை பெற்ரும் இந்நூற்கு" என்ருர்.

## குறிப்புரை

1. அக்காலத்து - மதுரையில் கடைச்சங்கம் நடந்துவந்த காலத்து. பாண்டியன் நாடு-பாண்டியனுடு. வற்கடம்-பஞ்சம். சிட்டர்-அறிஞர். புறந்தரகில்லேன் - பாதுகாக்கக் கூடாதவ ணுனேன். ஞான்று-பொழுது. புடைபடக்கவன்று-மிகுதியாகக் கவலையுற்று. ஆலவாய்-மதுரைக்குப், ஆங்குள்ள கோயிலுக்கும் பெயர். அழல்-நெருப்பு. இறையனுர் அகப்பொருள் என்ற நூல் அறுபது சூத்திரங்கள் கொண்டது.

2. பிற்றை ஞான்று-மறுநாள். தேவர்குலம் வழிபடுவான்-அர்ச்சகன். பண்டென்றும் அலகிடாதான்-முன் ஒரு போதும் பெருக்காதவன். வாய்ப்புடைத்து - நயம் உடையது. பட்டுச் செல்லா நின்றது உணர்ந்து - உலகிற்பொருந்தி நிற்கின்றமை உணர்ந்து. கோயில்-அரண்மனே. கன்மாப்பலகை - சங்கப்பலகை.

3. ஒரு தலைப்படாது-நிச்சயப்படாது. காரணிகன்-பரீட்சகன்; காரணத்தால் ஆராய்கின்றவன். அவிர் - விளங்குகின்ற கிடத்தும்-கிடப்போம். குமாரதெய்வம்-முருகன். இரீஇ-இருக்கச் செய்து. கணக்காயனுர்-உபாத்தியாயர்; நக்கீரனுர் தந்தை. ஆர்ப் பெடுத்து-ஆரவாரித்து

## பயிற்சி

### வினுக்கள்

1. இப்பகுதியினின்று அரசனுக்கும் புலவர்களுக்கும் உண்டான தொடர்பு எவ்வாறு புலப்படுகிறது?

2. தமிழிலக்கணத்திலுள்ள மூன்று அதிகாரங்கள் யாவை? பொருளதிகாரத்தின் சிறப்பு யாது?

3. கடவுள் அரசனுக்குச் செய்த பேருபகாரம் யாது?

4. 'இறையனர் அகப்பொருள்' என்று பெயரமைந்ததற்குக் காரணம் யாது?

5. சங்கப்புலவர்கள் நூல்களை எங்கிருந்து ஆராய்ந்தனர்?

6. புலவர்கள் காரணிகனை விரும்பியது ஏன்?

7. கடவுளால் குறிக்கப்பெற்ற காரணிகன் யாவன்? அவன் எத்தகையவன்?

8. நக்கீரரின் உரை எவ்வாறு மேலானது என்று அறியப்பட்டது?

### இலக்கணம்

1. உயிரளபெடைகள் என்றால் என்ன? இப்பாடத்தில் வந்துள்ள அளபெடைகளை எடுத்தெழுதுக.

2. பின்வரும் குற்றியலுகரங்களுக்கு வகை கூறுக:—

நாடு. வருந்து. நின்று. பெரிது அஃது. புகாது.

3. 3-ஆம் பாராவிலுள்ள நேர்ப்பேச்சுக்குறிகளை எடுத்து, வாக்கியங்களை உரியபடி மாற்றி எழுதுக.

### கட்டுரையாக்கம்

உப்பூர் குடிகிழாரிடம் சங்கத்தார் சென்று தம் கருத்தைக் கூறி அவர் மகனாரை அழைத்துவந்த வரலாற்றை ஒரு நாடகக் காட்சியாக வரைக.

## 2. அறம்

### வீரமாமுனிவர்



இத்தாலி நாட்டிற் பிறந்த வீரமாமுனிவர் (Father Constantine Joseph Bexhi 1680-1742) என்ற கிறிஸ்தவப் பெரியார் தமிழ் நாட்டிற் சமய ஊழியம் செய்ய வந்து, தமிழை ஐயந்திரிபறக் கற்று, அம்மொழியிலே பல நூல்களை இயற்றியருளியவராவார். அவர் நூல்களுள் தொன்னூல்விளக்கம் தேம்பாவணி, சதுரகராதி ஆகியவை பெயர்பெற்றவை. இம்மேகாணும் பகுதி தொன்னூல் விளக்கத்தினின்று எடுக்கப்பெற்றது. 17-ஆம் நூற்றாண்டின் தமிழுரையாசிரியரின் நடையை இதனிற் காணலாம். நடையின்மிடுக்கும், சொற்செறிவும், பொருளாழமும் இங்

குக் கண்டு இன்புறக் கூடியவை. ஐரோப்பிய ஆசிரியரொருவர் இவ்வளவு சீரிய செந்தமிழ் எழுதியது போற்றத்தக்கது. ஆசிரியரின் எளிய நடையை அவரது பரமார்த்த குருவின் கதை என்ற நூலிற் காணலாம்.

மாணவர்களுக்குப் படிக்க எளிமையாயிருப்பதற்காக இப் பகுதி சந்தி பிரித்து எழுதப்பெற்றுள்ளது.

1. **மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன் ஆகுல நீர பிற.**

என்பதாவது : இல்லறம் துறவறமென்ற இவ்விரண்டினுள்ளும் அடங்கி நிற்கும் எல்லா அறங்களும் மனத்தின் தூய்மையாற் பெறும் பெருமையே தருமமெனவும், மனத்தினுள் மாசு கொண்டவன் செய்யும் தவமும் தானமும் மற்றை யாவும் மறத்தின் அரவமாவதன்றி அறத்தின் பயனுள வல்லவெனவும், அக்குறள் இரு பயன் இவையென விரித்துக்காட்டுதும். விரிப்பவே மெய்யும் பொய்யும் விளக்கி, உட்பயன் தரும் மெய்யறத்தின் நன்மையே வெளியாய், அஃதொன்றுணர்ந்து, நாம் அதற்கொப்ப நடந்தால் இது வீடெய்தும் வழியெனக் காணப்படும்.

2. 'அறமெனப்பட்ட யாவும் இன்னுயிர்க்கு ஒருயிராகவும், மனத்திற்கு ஓர் அணியாகவும், நெஞ்சத்திற்கு ஒரு செல்வமாகவும் வழங்கும் இயல்பினையுடையன வாகையின், புறத்துத் தோன்றும் வேற்றுருக் கோலங் காட்டி, அகத்துள் நுழையா அறமோ அறத்தின் பேறும் பெருமையும் உடைய?' என்பர். எப்பொருளினும் அதன் உண்மை உணர்தலே **ஞானம்** ; உணர்ந்த பொருளின் இவையே நல்லவை எனவும், இவையே அல்லவை எனவும் தெளிதலே **காட்சி**. தெளிந்த வழியே அல்லவை ஒருவி, நல்லவை மருவி ஒழுகலே **ஒழுக்கம்**. இந்நல்லொழுக்கமே அனைத்து அறனாகையில், இவையெல்லாம் மனமுயற்சியால் ஆகவேண்டுழி, மனம் ஒவ்வா அறனெல்லாம் பொய்யென இகழப்படுவது முறையே என்பது.

3. அன்றியும், பிறர் நோய் கண்டு அகத்து இரங்கான், 'ஐயோ' என வாய் பொய்த்த இரக்கம் காட்டல்

தயையோ? நெஞ்சம் கடுத்த சுடு பகை கொண்டான், முக நக நட்பது நட்போ? ஒன்று ஈந்து பத்து அடித்துக் கொள்ளத் துணிந்தான், பிறர்க்கு ஈந்து உதவுதல் கொடையோ? மனை, நகர், நாடும் அகல நீக்கி, உள் பொருள் இன்பம் அணுகும் ஆசை நீங்கான், மறுதுணை யில்லாக் கானம் புக்கு உறைதல் துறவோ?

4. பிணியுற, பசிமிக, பகைபட மொய்த்த துன்பம் இன்பமென உணர்ந்து, அகம் கலங்காதான் புறத்தும் புலம்பாதிருப்பது பொறையே! பிறர் அழகாசை மனம் புகாத் தன் நிறை காத்த மகளிர் புறத்துக் காட்டும் ஒடுக் கமும் கற்பே! தம் மனக்கோட்டம் கண்டு நாணுதல் நாணமே! மனத்தில் இறைஞ்சிப் பிறரைப் பணிவான் புறத்துப் பொய்யாச் சொல்லின் வணக்கமும் பணிவே! உளத்திற் கலங்காது எதிர் வெம்போர்முகத்து அஞ் சான் துணிவாய சேவகந்தானும் வீரமே! அன்றியும், உள் ஒவ்வாமல் புறத்துத் தோன்றும் சித்திர அறத்தின் சாயலும் பயன்தரும் நல்லறப்படுமாயின், நாண்கொண்டு ஆட்டிய புன்மரப் பாவையும், களிகொண்டாடிய கருங்கண் பாவையும் வேறுபாடின்றி ஒக்குமெனவும், கண்ணே கனிய அழகு காட்டி உள்ளுயிர் கொல்லும் நஞ்சுடைக் காஞ்சிரப் பழனும், புறத்து வீசும் மணமே ஒப்ப அகத்தும் இனிய தேறல்கொண்ட மாங்கனிதா னும் ஒன்றெனவும் சொல்லவும் படுமே.

5. பசிய பொற்றூண் நிரைத்து நாட்டி, நெற்றி யிற் பவளப் போதிகை ஏற்றி, வயிரநன்மணி உத்திரம் பாய்த்தி, பளிக்குச் சுவர் மேல் முகில் அகடு உரிஞ்சு உயர் சிகரம் ஒளியின் மணியாற் கூட்டி, வான் நிகர் மாளிகை அருந்தொழில் தச்சர் வழுவற முடிப்பினும், உள் ஆள் அரசன் கொடுங்கோல் ஓச்சும் குரூரனயின், உலகில் ஆய ஒரு பயன் உண்டோ? அவ்வாறு, ஒருவன் அருமறை ஓதினும், அரும்பொருள் கலைநூல் அளவறக் கற்கினும், பல நதி ஆடினும், பல தலம் சேரினும், வரை வில கொடுப்பினும், வழுவில நடப்பினும், கோயில் மண்

டபம் குளம் முதல் பற்பல வாயில் தருமமென உவந்து இயற்றினும், திரள் பொருள் ஈட்டிய செல்வம் துறப்பினும், மனை நகர் நாடு மகார் சுற்றமும் துறந்து அருவனத்திடை துணையற உறையினும், இன்புறு சுவை சுகம் எல்லாம் மறுத்து, ஐம்பொறி கொன்று, உடலழிய நோற்பினும், ஈரற வழியெலாம் நேரச்செல்லினும் மனத்து ஊடிய வினை மாசு உளதாயின், தனக்கு ஒரு பயனும் தராதென உணர்க........''

—தொன்னூல் விளக்கம்.

## குறிப்புரை

1. முதற்கண் குறிக்கப்பட்டிருக்கும் செய்யுள் திருக்குறளில் **அறன் வலியுறுத்தல்** என்னும் அதிகாரத்தில் காணப்படுவது. மறத்தின் அரவம் - அதருமத்தின் ஆரவாரங்கள். காட்டுதும் - காட்டுவோம். நேர்ந்து - கொடுத்து.

2. ஒருவி - நீக்கி. முக நக நட்பது-முகத்திலே நட்புத் தோன்றச் சிநேகம் செய்வது.

3. பொறை - பொறுமை.

4. போதிகை - தூண் தாங்கும் கட்டை. முகில் அகடு - மேகத்தின் நடு.

5. வரைவில-அளவில்லாத பொருளை. துணையற - மனைவி நீங்க. ஈரறவழி-இல்லறம், துறவறம் ஆகிய இரண்டுக்கும் கூறப்பட்ட வழிகள். ஊடிய-பகைத்த.

## பயிற்சி

### வினுக்கள்

1. முதற்கண் குறித்த செய்யுட்குப் பொழிப்புரை கூறுக.

2. வீடெய்தும் வழி யாது?

3. அறத்தை உயிர், அணி, செல்வம் என்பனவாகக் கூறுதல் எங்ஙனம்?

4. ஞானம், காட்சி, ஒழுக்கம்-என்பன யாவை?

5. மனமொவ்வா ஒழுக்கங்களுக்குக் காட்டப்பெற்ற உதாரணங்கள் யாவை?

6. பொறை, கற்பு, நாணம், பணிவு, வீரம்-இவை எவ்வெவரிடம் சிறந்து காணப்படும்?

7. அரண்மனையின் வருணனை எவ்வாறு கூறப்பட்டது?

8. வெளித்தோற்றமாகச் செய்யப்படும் சில அறங்கள் யாவை ?

இலக்கணம்

1. மணி, நகர், நாடு, மகார் - இவற்றிலுள்ள எழுத்துக்களுக்கு மாத்திரை கூறுக.

2. தத்பவம், தற்சமம் என்றால் என்ன ? பின் வருவனவற்றுள் ஒவ்வொன்றும் அவற்றுள் எதனைச் சாரும் ? சுகம், மண்டபம், அரசன், குபேரன், ஞானம்.

3. ஐந்தாம் பாராவிலுள்ள பெயரெச்ச வினையெச்சங்களை எடுத்தெழுதுக.

கட்டுரையாக்கம்

1. இக்குறட் கருத்தை விளக்க, உன் சொற்களில் ஒரு சொற்பொழிவுக் கட்டுரை எழுதுக.

2. இக்குறளின் கருத்தை விளக்க ஒரு கதை உண்டாக்கி எழுதுக.

## 3. சாதுரியம்



T. செல்வக்கேசவராய முதலியார், எம்.ஏ.

திருவாளர் செல்வக்கேசவராய முதலியார் அவர்கள் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசியராகப் பல்லாண்டு விளங்கினார்கள். அவர்கள் சில செய்யுள் நூல்களை உரைகளுடன் பதிப்பித்திருப்பதோடு, தம் அரிய ஆராய்ச்சிகளைக் கட்டுரைகளாகவும் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். அவர்களுடைய வியாசங்கள் படித்துப் பயன்பெறத்தக்கவை. பழமொழிகளை அவர்கள் கையாளுவது அவர்களுடைய தனிச்சிறப்பு. நவீன உரை நடைக்கு அடிகோலிய பெரியார்களுள் முதலியார் அவர்கள் தலை சிறந்தவர்கள்.

இவ்வியாசத்தில் சாதுரியம் என்றால் இன்னதென்றும், சாதுரியமாக நடந்துகொள்வதால் உண்டாகும் பயன்கள் யாவையென்றும், அவ்வாறு நடந்துகொள்வது எப்படி யென்றும் காட்டியிருக்கிறார்கள். அவர்கள் கையாளும் வடமொழிச் சொற்கள்

பொருட்செறிவும் ஓசையினிமையும் கூடி அமைந்திருப்பதைக் காண்க.

கட்டுரையின் சுருக்கமே இங்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

1. மனிதருடைய காரியசித்திக்குக் காரணம் சாமர்த்தியம். சாதாரண சாமர்த்தியத்தால் மாத்திரமே காரியங்கள் சித்தியாவது துர்லபம். இடம் காலம் முதலியவற்றிற்கேற்பச் சாமர்த்தியத்தால் காரியசித்தி சுலபமாகும். இங்ஙனம் சமயோசிதமான சாமர்த்தியமே சாதுரியம் என்பது. கெண்டையைப் போட்டு வராலை இழுப்பதும், காற்றுள்ள போது தூற்றிக் கொள்வதும், சாதுரியமே. கல்லைக் குத்துவானேன், கை நோகிறதென் றழுவானேனென்று சும்மா இருப்பதும், மௌனம் கலகம் நாஸ்தி யென்று சில சமயங்களில் பேசாமலிருப்பதும், சாதுரியமே.

"கொக்கொக்க கூம்பும் பருவத்து; மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து"

என்றது இதுவே.

"வினையால் வினையாக்கிக் கோடல், நனைகவுள்
யானையால் யானையாத் தற்று"

என்றபடி, கம்புக்குக் களைவெட்ட அழைத்துக் கொண்டு போய்த் தம்பிக்குப் பெண்கொள்ள முடிவு செய்ததும் சாதுரியமே யன்றோ! இவ்விதமான சாதுரியம் லௌகிக சித்திக்கு இன்றியமையாதது. இது சிலருக்கு இயற்கையில் அமைந்திருக்கும். சமயோசிதமான சாமர்த்திய மாகையால் இதற்குப் பொதுவிதி இல்லை. ஆயினும் சில உபாயங்களை அறிந்திருப்பது உபயோகமாகும்.

2. எல்லாரியல்புகளும் அறிந்து ஒவ்வொருவரிடத்தும் மேதை மரியாதை தவறாமல் உபசாரமாக ஒத்து நடப்பது கஷ்டமன்று; அதனால் நஷ்டம் ஒன்றும் இல்லை; எல்லாருக்கும் மகிழ்ச்சியே உண்டாகும். பணத்தால் விளையாத பல நன்மைகள் இதனால் விளையும். இங்ஙனம் எல்லாருக்கும் மகிழ்ச்சி உண்டாகும்படி நடப்பதை

இளமையிலே பழகிக்கொள்ளல் வேண்டும். வயதேறின பிறகு இந்த வழக்கம் உண்டாவது ஏகதேசம். வேறு விசேஷத் திறமை இல்லாதவர் அநேகர் இவ்வித ஆசார உபசாரங்களால் லௌகிக சித்தி அடைகின்றனர். இவைகளை அநுசரிக்காதவர்கள், மிக்க திறமை வாய்ந்திருந்தும், வீணுக விரோதிகளை ஏற்படுத்திக்கொண்டு இடர்ப்படுவாராகின்றனர். மற்றவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாகும்படி நடப்பதனுல் நமக்கு மகிழ்ச்சியே உண்டாவது அநுபவத்தில் பிரத்தியக்ஷமாகும்.

3. இங்ஙனம் நடப்பதில் முக்கியமாய்க் கவனிக்கத்தக்க உபாயங்களுள் ஸம்பாஷணை ஒன்று. எவரெவரோடு எதெதை எவ்வளவு பேசலாம் என்பதறிந்து, நமக்குரிய வரம்பிலே நின்று பேசவேண்டும். பேச்சின் நிமித்தமாக வீண் வார்த்தை பேசுவது குற்றம். அதைக் காட்டிலும், பேசாதிருத்தலால் பிழை ஒன்றுமில்லை. பரிஷ்காரமாய்ப் பேசாமலிருப்பதும் யுக்தமல்ல. ஆவதற்கும் பேச்சே காரணம்; அழிவதற்கும் பேச்சே காரணம். ஆகையால் முன்பின் பார்த்து மிதமாய்ப் பேசுதல் வேண்டும்; மிதமாய்ப் பேசுவதையும் பட்டுக் கத்தரித்தது போல் ஒழுங்காய்ப் பேசுதல்வேண்டும்.

4. நாம் சொல்வதை மற்றவர்கள் கவனிக்கும் விதமாகச் சொல்லுதல்வேண்டும். வித்தியாமமதை, திரவிய மமதை முதலிய காரணங்களால் பராமுகமாக இருப்பார் சிலர் உண்டு. நாம் அதைப் பாராட்டாமலிருப்பதே நன்மை. மற்றவர்கள் சொல்வதை நாம் கவனமாய்க் கேட்கவேண்டும். கவனமாய்க் கேட்பதனுல் அநேக உபயோகமான விஷயங்களை அறியலாம். நாம் கவனமாய்க் கேட்பவர்கள் என்றறிந்தால் நம்மை உருக்கமுடையவர்கள் என்று கொண்டு, நம்மிடம் அன்பு அதிகரித்து, சிலர் தங்களுடைய கஷ்ட நஷ்டங்களை நம்மிடத்தில் முறையிட்டுக்கொண்டு தக்க யோசனை சொல்லும்படி வேண்டுவர். அதனுல் அவர்களுக்கு ஹிதமான ஆலோசனைகளை எடுத்துரைத்தலான நன்மை நேரிடும்.

5. சாராயத்தை வார்த்துப் பூராயம் கேட்பார் சிலர். எச்சரிக்கை அற்றிருக்கிற ஸமயம்பார்த்து ஏதோ ஒன்றைக்கேட்டு, நாம் வெளியிடலாகாத இரகசியத்தைக் கிரகிக்க முயல்வர் சிலர். ஆதலால் வினு விடைகளைக் கொண்டு அவர்களுடைய நோக்கத்தை உள்ளபடி அறிந்தே, வெளியிடக்கூடிய விஷயங்களை வெளியிடல் வேண்டும்; மற்றவைகளை அடக்கிவைத்தல் வேண்டும். "மனதில் இருக்கும் ரகசியம்; மதி கேடனுக்கு வாயிலே."

6. கவிகளுடைய கருத்தின் ஆழத்தையும் கண்டறியலாம்; மனிதருடைய மனதின் ஆழத்தை உள்ளபடி கண்டறிவது எளிதன்று. நீராழங் கண்டாலும் நெஞ்சாழங்காண முடியாது." உள்ளும் புறமும் ஒத்திருப்பவர் மிகச் சிலரே. அநேகர் நெஞ்சில் நினைப்பது ஒன்று; வாயினுல் சொல்லுவது வேருென்று; ஆகவே சொல்லால் மனத்தை அறிவது அசாத்தியம்; வார்த்தையின் அளவாக மாத்திரமே ஒருவனை நாம் சத்துருவென்றும் மித்துருவென்றும் கொள்ளலாகாது. முகத்துக்கு முகம் கண்ணுடி.

> "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
> கடுத்தது காட்டும் முகம்."

வஞ்சனையில் பழகி முதிர்ந்தவர்களை முகத்தால் மாத்திரமே அறிவதும் எளிதன்று. முகத்தைக்காட்டிலும் கண்ணனது ஒருவன் கருத்தை நன்குணர்த்தும். மிக்க யூகை உள்ளபவர்கள், கண்ணின் குறிப்பால கருத்தை அறியலாம். அங்ஙனம் அறிந்து அவரவர்களுக் கேற்ற விதமாக வார்த்தை சொல்லுவது, காரியசித்திக்கு அநுகூலமாகும்.

7. கோபத்தால் ஒருவர் வெட்டெனப் பேசினுலும், நாம் பொறுமையோடு சாந்தமாக வார்த்தை சொன்னுல், அவர் கோபம் தானே தணிந்து போகும். கோபத்துக்கிடங் கொடுத்தால் காரியம் கெடும். பயமுறுத்தியும் பலாத்காரம் பண்ணியும் ஆகாத காரியங்கள், நயத்தால் ஆகும். "நய மொழியால் ஜயமுண்டு".

8. பேசும்போது ஒளிப்பில்லாமல் தெளிவாகவும் சுருக்கமாகவும் பேசுதல் வேண்டும். நிஷ்கபடமாய் நேர்மையாகப் பேசுவது நல்லதே. ஆயினும் ஓட்டை வாயாகப் பேசுவதும் சரியன்று. நம்மைப் பற்றியாவது, நமது சார்பிலாவது, நமக்கு விரோதமாயாவது அதிகம் பேசுவது யுக்த மன்று. வீண் மனஸ்தாபத்தையும் துக்கத்தையும் விளைவிக்கும் விஷயங்களை இடையிடையிலே சுட்டிப் பேசுதலாகாது. காரணமின்றிப் பரிகாச வார்த்தைகள் பேசிச் சிநேகபங்கம் உண்டாக்குவது பேதைமை.

9. எடுத்துக்கொண்ட காரியம் இடையூறின்றி இனிது முடியும் என்று உறுதியாக இருத்தலாகாது. "நல்லது செய்வதில் நாலிடையூறும் வரும்". "கைக் கெட்டினது வாய்க்கு எட்டாமற் போகிறதும் உண்டு." தருணம் வாய்த்தபோதே தக்கபடி காரியத்தை முடித்துக் கொள்ளல் வேண்டும். தூண்டிற்காரனுக்கு மிதப்பின் மேலே கண். தருணம் வாய்க்கிறவரையில் தூங்காமற் காத்திருக்க வேண்டும். தூங்கினவன் கன்று சேங்கன்று. சில காரியங்களில் தருணம் வாய்க்குமென்று காத்திருப்பது வீணாகும். "அலை ஒய்ந்து கடலாடுவதில்லை." "அலை மோதும்போதே தலை முழுக வேண்டும்."

10. அற்ப காரியமானாலும் ஆராய்ந்து பார்த்தே அதில் அடியிடவேண்டும். "ஆராய்ந்து பாராதவன் காரியம் தான் சாந்துயரம் தரும்." "நுண்ணிய கருமமும் எண்ணித் துணி." அடியிட்ட காரியங்களை அநுகூலமாக முடிப்பதானால், சாவதானமும் நிதானமும் வேண்டும். காரிய சம்பந்தமான விவகாரங்களைப் பொறுமையாய்க் கேட்டறிய வேண்டும். கேட்டபின் சிக்கறுக்கத்தக்கவைகளை ஒழுங்காகச் சிக்கறுத்தல் வேண்டும். பொறுமை கடலினும் பெரிது. ஆத்திரப்படுதல் ஆகாது. ஆத்திரம் அடைந்தாலும், அவசரப்பட்டு அதை வார்த்தையாலும் செய்கையாலும் வெளியிடலாகாது. "அவசரக்காரனுக்கும் ஆத்திரக்காரனுக்கும் புத்தி மட்டு." "பதறிச்

செய்கிற காரியம் சிதறிக் கெட்டுப் போகும்." "பதறாத காரியம் சிதறாது."

11. நாம் கவனித்துச் செய்யத்தக்க காரியங்கள் எத்தனையோ இருக்கின்றன. சரியாக அவைகளை நடத்துவதே கஷ்டம். அப்படியிருக்கப் பிறர் முயலுதலான காரியங்களில் பிரவேசிக்கும்படி நாமே வழிதேடுவது உசிதமன்று. நம்முடைய உதவியை விரும்பினால் நம்மால் இயன்றதைச் செய்ய வேண்டும்.

## பயிற்சி

### வினாக்கள்

1. சாதுரியம் என்பது யாது?

2. கொக்கு, யானை-இவற்றின் எச்செயல்கள் சாதுரியத்தை உதாகரிக்கக் கூறப்பட்டுள்ளன.

3. பின்வரும் தொடர்களுக்குப் பொருள்கூறி அவற்றை நும்வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக:—ஏகதேசம், பிரத்தியக்ஷம், பரிஷ்காரமாய், புராமுகமாக, நிஷ்கபடமாய்.

4. சம்பாஷணைக்குரிய விதிகள் யாவை?

5. பிறருடைய உட்கருத்தை அறிவது எங்ஙனம்?

6. காரியங்களைச் செய்யும்போது கவனிக்கவேண்டியவை யாவை?

### இலக்கணம்

1. பின்வரும் வாக்கியங்களிலுள்ள தடித்த சொற்களுக்குச் சொல்லிலக்கணம் கூறுக.

(i) **நுண்ணிய** கருமமும் **எண்ணித் துணி**

(ii) உள்ளும் புறமும் **ஒத்திருப்பவர் மிகச் சிலரே**

2. பின்வரும் வாக்கியங்களைக் குறித்தபடி மாற்றி அமைக்க.

(1) பிறர் பேசுவதைக் கவனமாய்க் கேட்பதனால் அநேக உபயோகமான விஷயங்களை அறியலாம் (செயப்பாட்டு வினைகளாக மாற்று.)

(2) ஆவதற்கும் பேச்சே காரணம்; அழிவதற்கும் பேச்சே காரணம் (ஒரே வாக்கிய மாக்குக).

(3) மற்றவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாகும்படி நடப்பதனால் நமக்கு மகிழ்ச்சியே உண்டாவது அனுபவத்தில் பிரத்தியக்ஷமாகும் (3 சிறு வாக்கியங்களாக்குக).

கட்டுரையாக்கம்

1. இப்பாடத்தில் வந்துள்ள பழமொழிகளை அகரவரிசையில் அமைக்க.

2. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி-இதை விளக்கி 2 பாராக்கள் எழுதுக.

## 4. ரூபாவதி

### பகுதி I



வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பி. ஏ.

பரிதிமாற்கலைஞன் என்ற புனைவுப் பெயர்கொண்ட திருவாளர் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள் (1870-1903) சென்ற நூற்றாண்டின் இறுதியில் விளங்கிய சிறந்த தமிழ்ப் புலவரும் ஆசிரியரும் ஆவார்கள். இவர்கள் இளமையிலேயே கவி பாடுந்திறமையும் பெற்றிருந்தார்கள். பல ஆண்டுகள் இவர்கள் சென்னை, கிறித்தவக் கல்லூரியில் தமிழாசிரியராகவும் விளங்கினார்கள்.

சாஸ்திரியார் அவர்கள் எழுதி வெளியிட்ட நூல்கள் பலவாகும். அவர்கள் நாடகக்கலையை நன்கு கற்றுணர்ந்து அக்கலைக்குரிய ஓர் இலக்கணத்தையும் சில நாடகங்களையும் எழுதி வெளியிட்டார்கள். அந்நாடக நூல்களுள் ஒன்றான **ரூபாவதி** என்றதினின்று எடுக்கப்பெற்ற இரண்டு காட்சிகளின் பகுதிகளே இங்கே பாடமாய் அமைந்துள்ளன.

சேரநாட்டரசனான சூரசேநவர்மன் என்றவன் சற்குணவழுதி என்ற பாண்டிய மன்னனை வென்று அவன் நாட்டை ஆண்டுவந்தான். தோற்ற மன்னன் தஞ்சையில் ஆண்ட சோழ மன்னனுடன் நட்புப்பூண்டு, அவனுடைய உதவியால் சேரனை வென்று மறுபடியும் தன் நாட்டைப் பெற்றான்.

சேரன் ஆண்டுகொண்டிருந்தபோது, ஒரு புலவர் அவனைப் பாடிப் பரிசுபெற்றனர். பிறகு பாண்டியன் திரும்பியபோதும் அவனைப் புகழ்ந்தனர். இக்குற்றத்தைக் கூறி அவருடைய நண்பர்கள் நகைத்தனர். இப்பகுதியே இங்குப் பாடமாக அமைந்துள்ளது. இதனில் நகைச்சுவை ததும்பியிருப்பதைக் காணலாம். ஆசிரியருடைய தமிழ் உரைநடைச் சிறப்பையும் காண்க.

## அங்கம் - 3. முதற்களம்.

**இடம்:**—பாண்டியனரண்மனை.

**காலம்:**—காலை

**பாத்திரங்கள்:**—சேவகன்; புலவர்; சூரசேன மகாராஜனும் சுசிலர் என்ற அமைச்சரும்

**சேவகன்:**—(அரண்மனை வாயிலிலிருந்து) ஓய்! நீர் யார்?

**புலவர்:**—நாம்தான் மகா வித்வான் வித்தியாசாகரப் புலவர். அரசன்மீது கவிபாடிப் போந்துளம். இதனை யிறைவனிடந் தெரித்தி.

**சேவகன்:**—ஏ! புலவர்! ராசாவுக்குத் தெரியப்படுத்தின நமக்கு என்ன கொடுப்பாய்?

**புலவர்:**—எமக்கு மன்னவர் பெருமான் மகிழ்சிறந்து அளியா நிற்கும் பரிசில் நான்கிலொன் றீகுதும். பெறுதி!

**சேவகன்:**—ஏ! புலவர்! அதென்ன? பெறுதி! பகுதி! விகுதி! அதெல்லாம் இங்கே நம்மிடத்திலே இலக்கணம் படிக்காதேயும்! சொல்லும் நேரே! எவ்வளவு கொடுப்பீர்?

**புலவர்:**—அதுதான் நாலிலொன்று தருவோம் என்று அப்பொழுதே சொன்னோமே! தெரியவில்லையோ?

**சேவகன்:**—சரி. புலவர்! மோசம் செய்யக்கூடாது. பார்த்துக்கொள்ளும். பத்திரம்!

[சேவகன் உள்ளே போகிறான்]

**புலவர்:**—சரிதான், போ. (தனக்குள்) எந்தப்பெரிய மனுஷன் வீட்டிலும் இந்தமாதிரி சிற்சில சேவக நாய்களிருந்துகொண்டு எம்போலியரைக் கண்டாலுங்

குரைத்து வெள்ளென்று மேலே விழத் தலைப்படுகின்றன!

[பாடுகின்றார்]

வேலை யின்றிப்பல் வீதி தொறுந்திரி
சீல முள்ளவிச் சேவகர் காவல்செய்
வேலை பெற்றுழி மேன்மைபெற் றேமெனச்
சால வுந்தம தன்மை திரிதலேன்?

சீ! இவ்வரசன் என்னவோ! மகா காவல் வைத்திருக்கின்றான்! முன்னிருந்த வள்ளல் சற்குணவழுதி யாம் எப்பொழுதும் தாராளமாய் அரண்மனைக்குட் போகலாம் என்று உத்தரவு செய்திருந்தான்!—இவனுக்கு நம்மை இன்னுந் தெரியாதே! தெரிந்தால் இவனும் அவ்வாறு உத்தரவு செய்யக்கூடும்.

**சேவகன்.**—மகாராசா அவர்களுக்கு ஆயிரங் கோடி வந்தனம்.

**சூரசேநன்:**—அடா! சேவகா! என்ன சங்கதி? சீக்கிரமாய்ச் சொல்லடா.

**சேவகன்:**—மகாராசா அவர்களிடத்தில் யாரோ மகா வித்துவானும், வித்தியாசாகரப் புலவராம். அவர் வந்திருக்கிறார். இது விஷயம் சமுகத்திற்குத் தெரியப் படுத்தினேன்.

**சுசீலன்:**—ஏ! சேவகா! நீ போய் அவரை உள்ளே வரச்சொல்.

[சேவகன் வெளியே போகிறான்.]

**சேவகன்:**—ஏ! புலவர்! போம்! வரச்சொல்லி மகாராசா உத்திரவு செய்திட்டார். சொன்னதை மறந்திடாதேயும்! பத்திரம்!

[புலவர் உள்ளே போகிறார்.]

**புலவர்:**—சுகபோக சுகுண மன்மதரூப மகாராஜ சூரசேநவர்மர் சமுகத்திற்கு; அடியேம் ககன மூதண்ட வேதண்ட பிரமாண்ட மெங்கணுங் கன புகழ் படைத்த வரவேம்; இமயமுதலீழம் வரை யிவர்க்கு நிகரெவருமிலை

யென்று சொலப்பெற்ற தகையேம் ; கவிமதக்குஞ்சரம், கல்விக் களஞ்சியம் ; ஆதல் பற்றி வித்தியாசாகரப் புலவ ரெனு மேலான வயிதான முடையராவேம் ; வந்தனந்தந் தனம் நூதனம் பெற்றேகவே!

**சூரசேநன்:**—ஏ! புலவரே! என்ன மடமடவென்று உம்பாட்டிற்கு அடித்துக்கொண்டு போகிறீரே!

**புலவர்:**—என்ன! மகாராஜா அவர்கள் உத்தரவு தெரியவில்லையே! எமது பாட்டிற்காக எம்மை யடிக்கி றதா? தெரியாது வந்துவிட்டேன்! மகாராஜாவே! பொறுத்தருளவேண்டும்!

[நடுங்குகின்றார்]

**சுசீலன்:**—ஓய்! கத்தாதேயும்! சும்மா இரும்! இவர் நல்ல வித்துவான்! சமுகத்திலே பேசியது தெரியவில்லை. அதனாலேதான் இப்படிப் பேசினார்! வேறொன்றுமில்லை.

**சூரசேநன்:**—எங்கே! நாம் பாண்டியனோடு செய்த யுத் தத்தில் அடைந்த வெற்றியைப் பற்றிப் பாடிய கவி யைச் சொல்லச் சொல்லும் சுசீலரே! கேட்போம்.

**சுசீலன்:**—ஏ! புலவரே! பதறாமல், பயப்படாமல், தைரியமாய், வேகமாய்ச் சொல்லாமல், நிறுத்திச் சொல் லும்; நீர் மகாராஜா அவர்கள் பேரிற் செய்த கவியை.

**புலவர்:**—கொஞ்சம் கண் பார்த்துக்கொள்ள வேண்டும்!

**சுசீலன்:**—அவை யெல்லாம் யோசியாதேயும்! கநகா பிஷேகம் செய்யச் சொல்லுகிறேன். கவியைச் சொல் லும்.

**புலவர்:**—பள. பளா! மிகவியந்தனம்!

**சுசீலன்:**—இதுதானே எமக்குக் கோபம் வருகிறது! சொல்லுமென்றால் உடனே சொல்லவேண்டாமா?

**புலவர்:**—இதோ சொல்லுகிறோம். கேண்மின்.

[பாடுகின்றார்]

நிம்பமலர் மாலையை மிலைச்சுசற் குணவழுதி
நிகரற்ற பாண்டிராச

னின்மகிமை யோராது மதிகெட் டெதிர்ப்பவவ
னிமிடத்தி னிற்றெலையவே
தும்பைமலர் வேய்ந்துயுத் தஞ்செய்து வென்றுசந்
தோடமுடன் வாகை மலருஞ்
சூடுநற் பாணர்நா டொறும்வந்து பாடிடத்
தோகையர்கள் வாழ்த்தெடுப்பச்
சம்பகங் கமழ்குழலி னார்போற் றுறுமினிய
சந்தவடி வுள்ள சதுரா!
சுகமெலாந் தனதாளு கைக்குட் படுத்திய
தனக்குவமை யெவருமில்லாய்!
வம்புறும் பெண்ணையந் தார்ச்சூர சேநனெனு
மகாராச மகீப! நீதான்
வரையாம வீந்து பொருண் மிடிதீர்த்து நீடூழி
மாட்சியுடன் வாழியவரோ

திருச்சிற்றம்பலம்

**சுசீலன்:**—வித்தியாசாகரப் புலவரே! கவி வெகு நன்று யிருக்கின்றது! எங்கே! கொஞ்சம் அர்த்தஞ் சொல்லும் கேட்பேம்.

**புலவர்:**—'வேப்பம்பூ மாலையையணிந்த சற்குணவழுதி! நின்னுடைய மகிமையை அறியாது புத்தி கெட்டுப்போய் நின்னை யெதிர்த்த மாத்திரத்தில் ஒரு நிமிடத்தில் தோல் வியுறும்படி, தும்பப் பூமாலை யணிந்து போர்புரிந்து, அவனை வென்று,'வாகைமாலை தரித்துப் பாணர் பாடத், தோகையர் வாழ்த்த, சண்பகப்பூ வாசனை பொருந்திய கூந்தலையுடைய மாதர்கள் போற்றும் நல மனுபவித்துப் பிரகாசிக்கின்ற அழகான ரூபமுள்ள நற்குணமுடைய வனே! பூலோக முழுவதுந் தன்னுடைய சக்கிராதிபத்தி யத்திற்குள் கீழ்ப்படுத்தித் தனக்குச் சமானமானவ ரெவருமில்லாதவனே! மணநிறைந்த பனம்பூ மாலை யைத் தரித்த சூரசேந வர்மன் என்ற திவ்ய திருநாமத் தையுடைய மகாராஜ பூபதியே! எனக்கு அளவற்ற திர வியத்தைக் கொடுத்து எனது தரித்திரந் தரித்திராவண் ணஞ் செய்து நீ நெடுங்காலம் சிறப்புடனே வாழ்வாயாக' வென்பதாம் யாம் பாடிய செய்யுளின் பொருள்.

சூரசேநன் :—சுசீலரே! கவி வெகு நன்றாயிருக்கின்றதே! அர்த்தஞ் சொல்லிய பிற்பாடன்றோ தெரிகின்றது. புலவரே! நீர் கேட்டுக் கொண்ட பிரகாரம் உம்முடைய தரித்திரம் நீங்கும்படி பதினாயிரம் வராகன் உமக்குக் கொடுக்குமாறு உத்தரவு செய்திருக்கின்றோம். பெற்றுக்கொள்ளும். போம்.

புலவர் :—மிகவும் வந்தனம். ஆயினும், நாம் புரிசை வாயில் காவலனுக்கு எமது பேற்றிற் காற்பங்கு தருதுமெனச் சொல்லி யிருக்கின்றோம். அதனையுஞ் சேர்த்துக் கொடுக்கிய ஆணையிடின் மிகவும் நலமுடைத்தாமால். அல்லாக்கால், அப்பேதைமகன் எம்மை யதிகமான அரந்தைக்கு ஆளாக்குவான் காண்.

சுசீலன் :—போய் வாரும்! அப்படியே செய்யச் சொல்வோம்.

[புலவர் போகின்றார்.]

## 5. ரூபாவதி

### பகுதி II

### அங்கம் 5. நான்காங்களம்.

இடம் :—மதுரை மாநகரிலொரு வீதி.

காலம் :—காலை.

பாத்திரங்கள் :—வித்தியாசாகரப் புலவர், சில கனவான்கள்.

முதற் கனவான் :—ஓய்! புலவரே! மந்திரி சுசீலர் நம் வழுதியாரோடு வர்மன் பொருட்டுச் சமாதானம் பேசப் போயிருக்கிறாராமே! அதென்ன மெய்தானா?

புலவர் :—மெய்யோ! பொய்யோ! அதனை யாம் அறிந்திலேம். இது நிற்க, யாமொன்று செய்ய வுன்னினேம். அஃதென்னை யென்பிரேற் கூறுதும்.

[பாடுகின்றார்.]

அருவுருவ மானபர மானந்தத் தனிக்கடவுள்
மருவலுறு மெழில்வையை மணியாற்றின் வடகரைக்கண்

வருமனெடு சமர்புரிய வந்தவிரு பெருவேந்தர்
கருமமுற் றுகவென்றி பெறுகவெனக் கவிசெய்வான்.

**முதற் கனவான்** :—ஓய்! ஓய்! புலவரே! போதும்! போதும்!! போதும்!!! நிறுத்தும்! நிறுத்தும்!!

**புலவர்** :—என்ன! என்ன!! அப்படிச் செய்தாலென்ன!

**இரண்டாங்கனவான்** :—நன்று! நன்று! நுமது வெள்ளறிவு இன்னதென்று பொள்ளெனப் புலப்பட்டதே!

**புலவர்** :—ஏயே!

[பாடுகின்றார்.]

கற்றுணர்ந்த நல்ல கவிவாண னென்றனக்குக்
குற்றங்கற் பித்த குணமிலியிச் - சிற்றறிவை
யெவ்வயினீ கற்று யெவர்கொளுப தேசித்தார்
செவ்வியிலாப் புன்மையினய் சொல்.

**இரண்டாங்கனவான்** :—சரிதான். புலவருக்குப் பித்தம் அதிகமாய் விட்டது போலும்! அதுதான் வாய்க்கு வந்தபடி யெல்லாம் பிதற்றுகின்றார்!

**புலவர்** :—எனையா!

**இரண்டாங்கனவான்** :—ஆமாம். உம்மைத்தாம்!

**புலவர்** :—யானே பிதற்றினேன்கொலோ? அன்றி நீவிர் பிதற்றினீர்கொலோ? நன்னராலோசித்துக் கூறுதிர்.

**இரண்டாங்கனவான்** :—ஓய்! புலவீர்! இதுகாறும் நும்மைப் புல்வாய்ப் புலவரென்று கருதி யிருந்தேன்! இப்பொழுது நீவிர் பெருவாய்ப் புலவ ராயினீரே!

**புலவர்** :—கேட்டீர்! கேட்டீர்! அவர் கிளத்தலை.

**இரண்டாங்கனவான்** :—ஓய்! உமக்குக் கிழத்தலையா? எமக்குக் கிழத்தலையா?

**முதற்கனவான்** :—அது மட்டுமா? அவர் பண வாசை கொண்ட பிணம்.

**புலவர்** :—யாவர்?

**இரண்டாங்கனவான்** :—நீர் தாம்!

**புலவர்** :—நீவிர் வாளா திருத்திர்! யாம் உம்மோடு பேசுகின்றிலேம்.

**இரண்டாங்கனவான்** :—ஆமாம்! சரியாய்ச் சொன்னீர்! "பண வாசை கொண்ட பிணம்!" நும் வாய்க்குச் சர்க்கரையிடவேண்டும்.

**புலவர்** :—வெற்றுரை! வெற்றுரை!!

**இரண்டாங்கனவான்** :—வெற்றுரையா! கேளும் யான் சொல்லுகின்றேன். நீர் முன் சற்குண வழுதியார் அரசராயிருக்குங் காலத்து அவர் வாயில் வித்வானயிருந்து அவர் மீது புகழ்ச்சிக் கவி பாடினீர்! இது வரைக்கும் வருமனைப் புகழ்ந்தீர்! இப்பொழுதோ சோழனையும் வழுதியையும் புகழ வெண்ணினீர்! இவ் வளவும் அந்தப் பணப் பேராசையினலோ அன்ரே?

**புலவர்** :—ஓகோ! யாம் முன்னர் வன்மனைப்பாடிய கவியுட் புகழ்ந்தன மெனக் கருதினீரோ! அது வசைக் கவி யென்பது மறியீரோ? மங்கல முதன் மொழியல்லாத 'நிம்பம்' என்னுஞ் சொல்லைப் பிரயோகித்ததனல் மங்கலப் பொருத்த மின்மையும், சிறப்பில் சொல்லாதவின் சொற்பொறுத்த மின்மையும் ஒற்று உட்பட நான்கெழுத்தாதலின் எழுத்துப் பொருத்த மின்மையும், இன்னும் பிற பொருத்த மின்மையும் நீவிர் உணர்கிலீரோ? அன்றியும் 'நிமிடத்தினிற்றெலைய' என்பதனை 'நிமிடத்தில் நின் தொலைய' என்று பிரித்து 'அவன்' என்பதனை யெழுவா யாக்கி, 'உறும்' என்ற பயனிலையொடு முடித்து வேறுபொருள் கண்டிலீரோ?

**முதற்கனவான்** :—நீர் சொன்ன கவியிலே முதற்சொல் வழுதிக்கு அடை மொழியாயிருப்பதனலே இவ்வமங்கலம் வழுதியைப் பற்ருதோ?

**இரண்டாங்கனவான்** :—இப்பொழுது நாம் கேட்டால் இந்த மாதிரியும் வருமனுக்கு வேண்டியவன் யாருங்கேட்

டால் அது வழுதியைச் சேருமென்றும் தமக்குத் தோன்றியபடி யெல்லாம் கூறித்திரியும் புலவர் பெருமானல்லரோ? இதைக் கருதியன்றே சோழனும் கம்பரை நோக்கிப்,

"போற்றிலும் போற்றுவர் பொருள்கொ டாவிடில்
தூற்றினும் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினு மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே"

என்று சொல்லியது?

[மூன்றாங் கனவான் வருகின்றான்]

**மூன்றாங்கனவான்** :—ஓய்! புலவரே! உமக்கொரு சமாசாரம் தெரியாதே!

**புலவர்** :—என்ன? என்ன?

**முதற்கனவான்** :—அவர் சொன்னதற்குச் சமாதானஞ் சொல்லாமற் புதுச் சமாசாரம் விசாரிக்கப் புகுந்தீரே!

**இரண்டாங்கனவான்** :—சொல்லத் தெரிந்தால் உடனே சொல்ல மாட்டாரோ! சட்டியில் இருந்தால் அன்றோ அகப்பையில் வரும்!

**புலவர்** :—அவை யெல்லாம் நம் வயிற்பொருந்தா; சற்றே பொறுத்தீர். இவர் சொல்வதைச் செவிக்கொண்டபின்றை நுமக்குச் சமாதானம் சொல்லுகின்றோம்.

**மூன்றாங்கனவான்** :—இப்பொழுதுதான் பார்த்தேன். மந்திரி சுசீலரும் இந்த வஞ்சகவர்மனும் சில மெய்க்காப்பாளருடன் சோழன் பாசறைக்குப் போகிறார்கள்! ஏதோ சமாதானம் பேசுகிறதற்காம்!

**புலவர்** :—கேட்பீரோ அவர் கூற்றினை? யாம் அவ்வருமன்மீது இவ்வசைக் கவிபாடிய ஞான்று தொட்டு அவன் எய்திய இடுக்கண்களும், இப்போழ்தத்து அவன் நம் வழுதியார் தாட்டுளையில் வீழ்ந்து சமாதானம் பேசி உயிர் தப்பிப் பிழைக்க எண்ணுதலுமே அவ்வசை சூர சேநனையேபற்றிய தென்பதற்குத் தக்க சான்று பகரும்.

அஃதான்றியும், வழுதியார்மாட்டு எமக்குள அன்பு அளவிட்டுரைக்கற் பான்மையதன்று. எமது மாணுக் கருட் சிறந்தவனுய சுந்தரானந்தன்றனக்கு என்மீ திருந்த அன்பையும், எனக்கு அவன் மேலிருந்த ஆதரத்தையும் பற்றி நும்மிடத் துரைப்ப தென்னே! அந்தோ! இத்தகைய மாணுக்கனைக் கொலைக்களம் படுத்த வருமன் தலைக்கண் உருமுருதோ!

**முதற்கனவான்** :—சரி; இவரிப்படித்தான் என்னவாவது சள சள வென்று பேசிக் கொண்டிருப்பார்!

**இரண்டாங்கனவான்** :—ஆமாம். நாமும் வையை யாற் றின் தென்கரைக் கண் ஒளித்திருந்து வர்மன் சமா தானம் செய்துகொண்டு வரும்பொழுது பார்ப்போம்; வாரும்.

## பயிற்சி

### வினுக்கள்

1. சேவகர்களின் தன்மையைப்பற்றிப் புலவர் கருத் தென்ன?

2. புலவர் சேரனிடம் தம்மை எவ்விதம் அறிமுகப்படுத் திக்கொண்டார்?

3. சுசீலர், அரசர்முன் கவிதை சொல்லவேண்டிய விதத்தை எவ்வாறு கூறுகின்ருர்?

4. தும்பை, வாகை—இவை தரிக்குங் காலங்கள் எவை?

5. பாண்டியனுக்கும் சேரனுக்கும் உரியமாலைகள் யாவை?

6. புலவர் கனவானைக் காணுங்காலம் சேரனுக்கு எவ்வா றிருந்தது?

7. வசைக்கவி என்ருலென்ன? புலவர் கவி வசைக்கவி ஆனது எங்ஙனம்? விளக்கிக்கூறுக.

8. கம்பரைச் சோழன் பாடியதன் கருத்தென்ன?

### இலக்கணம்

1. பின் வருவனவற்றைப் பிரித்துக் காட்டிப் புணர்ச்சி விதிகளையும் காட்டுக :—தாட்டுணை ; சுந்தரானந்தன் ; பேராசை ; வடகரை.

2. ஆகுபெயர் என்றால் என்ன? பின் வருவன ஆகுபெயராவது எங்ஙனம்? வள்ளுவர் படி. நகரம் முழுமையும் வருந்திற்று. கடவுள் இருக்கிறார். நீர் பணவாசைகொண்ட பிணம்.

3. அடைமொழி; மங்கல முதன்மொழி; எழுத்துப் பொருத்தம். இவற்றை விளக்குக.

கட்டுரையாக்கம்

1. இப்பாடத்தில் வந்துள்ள புலவரின் குணாதிசயங்கள் யாவை?

2. புலவர் அரசனிடம் பாடிய பாடலின் இரு பொருள்களையும் தனித்தனியே நும் சொற்களில் அமைக்க.

## 6. அரசரோடு பழகுதல்



மகாமகோபாத்யாய

ம. வி. இராமாநுஜாச்சாரியார்.

வடமொழியில் வியாசபகவானால் இயற்றப்பெற்ற மகாபாரதம் உலகத்திலுள்ள நூல்களுளெல்லாம் மிகப் பெரியது. இதனை ஐந்தாவது வேதம் என்பர். இந்நூல் முழுவதையும் தமிழில் உரைநடையில் மொழிபெயர்த்துப் பதிப்பித்தவர் மகாமகோபாத்யாய ம. வி. இராமாநுஜாச்சாரியார் அவர்களாவர். அவர்கள் கும்பகோணம் கலாசாலையில் தமிழாசிரியராகவும் விளங்கினார்கள். இப்பகுதி அவர்களுடைய மகாபாரதத்தினின்று எடுக்கப்பெற்றது.

அரசருடன் பழகுவது எவ்வளவோ அருமையானது. அதற்கு நல்லறிவும் தக்க முன் ஜாக்கிரதையும் வேண்டும். அவற்றைப்பற்றி நாலடியார், குறள் போன்ற தமிழ் நூல்களும் பல கூறுகின்றன. அரசரோடு நேரிற் பழகுவது எல்லோருக்கும் இயல்வதன்றாயினும், அரசரோடொத்த பெரியோர்களிடம் பழகுவது பலர்க்கு இன்றியமையாததாதலால், இப்பாடத்தில் கூறப்பட்டவற்றை மாணவர்கள் நன்கு அறிந்து கொள்வார்களாக.

1. ஒருவனுக்கு அரசரோடு பழகவேண்டிய அவசியம் நேருமானால் அவன் 'உள்ளேவரலா'மென்று அனு

மதி பெற்றுக்கொண்டே அரசனைப் பார்க்கவேண்டும். அரசர்களுடைய பொருள்களில் ஆசைவைக்கலாகாது. தன்னைக் கேளாமலிருக்கையில் அரசனுக்கு ஒருபொழுதும் நீதி சொல்லக்கூடாது. பேசாமலிருந்துகொண்டே அவனை உபாசிக்கவேண்டும். தகுந்த சமயத்தில் அவனைப் புகழவேண்டும். பொய்சொல்லுகின்ற மக்களிடத்தில் அரசர்கள் சினங்கொள்வார்கள். பொய் சொல்லுகின்ற மந்திரியை அரசர்கள் அவமதிப்பார்கள். மிகவும் சிறியவையாயினும், காரியங்களை அரசனிடத்தில் தெரிவித்தே செய்யவேண்டும். இவ்வாறு அரசனிடத்தில் பழகுபவனுக்கு ஒருபொழுதும் குறை நேரிடாது. உலகத்தில் பிராணிகளை உணவு முதலியவற்றால் உண்பிக்கின்றவனும், ஆபத்தினின்று காப்பாற்றுகின்றவனும், எல்லா ஆயுதங்களாலும் நிறைந்தவனுமான அரசன் மனித வடிவங்கொண்ட ஒரு பெரு நெருப்பு.

2. அரசனை அடுத்திருப்பவன் தன்னிடம் எவ்விதத்திலும் குற்றம் அணுகாதபடி நடந்துகொள்ளவேண்டும். புத்திசாலியான ஒருவன், அரசனையும் பாம்பையும், ஆற்றலற்றவர்களா யிருந்தாலும் ஒருபொழுதும் இகழக்கூடாது. இவர்கள் இகழப்பட்டால் மனிதனை எரிப்பர். ஆதலால், கற்றறிந்தவர்கள் எப்பொழுதும் அரசனை முயற்சியுடன் பூஜிக்கவேண்டும். அரசனால் ஒப்புக்கொள்ளப்பட்ட மனிதன் வரம்புகடந்து செல்லக்கூடாது. அரசர்கள், மகனானாலும் பேரனானாலும் உடன் பிறந்தானானாலும் வரம்புகடந்து நடப்பவனைப் புகழமாட்டார்கள். அரசனால் ஒருவித அதிகாரங்கொடுக்கப் பட்டவன் மிக்கசெல்வத்தை அடைந்திருந்தாலும், தனக்குரிய நிலைமையை எண்ணிப் பிறவிக் குருடனைப் போலத் தன்னைக் கருதவேண்டும்.

3. அரசனிடத்தில் பழகுபவன் தைரியசாலியாக எப்பொழுதும் வாயிலைப் பார்த்துக்கொண்டு அரசர்களிடத்தில் நம்பிக்கையில்லாதவனாயிருக்க வேண்டும். அரசர்களிடத்தில் நம்பிக்கை வைக்கக்கூடாது. எந்த ஆசனத்தில் பிறன் பிரியம் வைக்கமாட்டானோ அந்த ஆசனத்தையே விரும்பவேண்டும். இராஜமாளிகை

யில் வசிக்கின்ற மனிதன், எந்த ஆசனத்தில் உட்கார்ந்தால் மிக்க பலவானான ஒருவனுடைய மனம் வருந்தாதோ, அந்த ஆசனத்தை விரும்பவேண்டும். இராஜமாளிகையில் வசிப்பவன் எந்த இடத்தில் எவ்வாறு உட்கார்ந்திருந்தால் 'இவன் துஷ்டகார்யம் செய்கிறவன்' என்று மற்றவன் சந்தேகிப்பனோ அந்த இடத்தில் அவ்வாறு ஒருபோதும் உட்காரக் கூடாது. தனக்குரிய இடத்தில் இஷ்டப்படி இருக்கலாம்; அல்லது, அரசனுடைய சமீபத்தில் நிற்கலாம்; பிறனுடைய ஆசனத்தை ஒருபொழுதும் விரும்பவே கூடாது. வேறொருவனுடைய ஆசனத்தில் உட்கார்ந்தால் அவனை அவனுடைய வேலைக்காரர்கள் சபையில் இழுத்துவிடுவார்கள். அவன் பகைவர்களால் பரிகசிக்கப்படுவான். வேலைக்காரன் செல்வத்தின் பொருட்டு அரசனை அடைந்திருத்தலால், எப்பொழுதும் அரசனுக்கு முன்னிலையிலிருப்பது கூடாதென்று நீதிமான்கள் எண்ணுகிறார்கள். கற்றறிந்தவன், அரசனுடைய வலப்பக்கத்தையோ, இடப்பக்கத்தையோ அடைந்து, விநயமுள்ளவனாக நிற்கவேண்டும். அரசனுக்கு முன்புறத்திலாவது பின்புறத்திலாவது நிற்கக்கூடாது. பின்புறத்திலுள்ள இடமானது அரசனைக் காப்பாற்றும் ஆயுதபாணிகளுக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. மனிதர்களை வசப்படுத்துவதின் பொருட்டுத் தாய் வம்சத்திலாவது தகப்பன் வம்சத்திலாவதுள்ள பெரியோர்களுடைய பெயர்களையும் நன்னடக்கைகளையும் எப்பொழுதும் சொல்லவேண்டும். அரசனால் பூஜிக்கப்பட்டும் எந்த மனிதன் அவ்வரசனுக்குப் பிரதிபூஜை செய்யவில்லையோ அந்த மனிதனை, அரசன், ஆசாரியன் சோம்பேறிகளான சிஷ்யர்களைக் கௌரவியாதது போல, ஒருபொழுதும் கௌரவப்படுத்த மாட்டான். இராஜமாளிகையில் வசிப்பவன், 'நான் அரசனுடைய அன்புக்குப் பாத்திரமாயிருக்கிறேன்' என்று அரசனுடைய வாகனத்திலாவது கட்டிலிலாவது ஆசனத்திலாவது இரதத்திலாவது ஏறக்கூடாது.

4. எந்த மனிதன், வீட்டினின்று வெளிப்பட்டு, செய்யவேண்டிய காரியத்தை நினைத்துக்கொண்டு, முன்னேற்றத்தில் உறுதியான எண்ணமுள்ளவனும், சோம்பலற்றவனும், மனத்தை அடக்கினவனுமாகி, பசி தாகங்களால் வருத்தப்பட்டாலும், துயரப்பட்டாலும், கஷ்டத்தினல் சுகத்தை யடையவேண்டுமென்று விரும்புவனே அவன் இராஜமாளிகையில் வசிக்கவேண்டும். அரசனல் மற்றவர்கள் ஏவப்படும்போது, 'நான் செய்வேன்' என்று தைரியத்துடன் எந்த மனிதன் முற்படுவானே, அந்த மனிதனே அரசர்களிடம் பயனைப் பெறுவான். எந்த மனிதன் வெயிலிலோ குளிரிலோ பகலிலோ இரவிலோ ஏவப்பட்டால் ஆலோசியாமல் காரியங்களைச் செய்வானே அவன் அரசர்களிடம் காரியசித்தியை அடைகிருன். இராஜமாளிகையில்இருக்கும் சமர்த்தனை மந்திரியை ஒருபொழுதும் அவமதிக்கக்கூடாது. கௌரவிக்கப்பட்டாலும் மகிழ்ச்சி யடையக்கூடாது. அவமதிக்கப்பட்டாலும் மனவருத்த மடையக்கூடாது. எவன் நுண்ணறிவையும் மெல்லிய இயல்புகளையும் பெற்றவனும் உண்மை பேசுபவனுமாயிருக்கிருனே, அவன் அரசர்களிடம் தான் நினைத்த காரியத்தைக் கைகூடப் பெறுகிருன். இராஜமாளிகையில் வசிப்பவன் இலாபத்தினல் மகிழ்ச்சி யடையக்கூடாது. சுகதுக்கங்களில் சரியான நிறைபாரமுள்ள தராசுபோலச் சமனயிருக்க வேண்டும். இராஜமாளிகையில் வசிப்பவன் அதிக ஆசையில்லாதவனும், தைரியமுள்ளவனும், நிழல்போல எப்பொழுதும் அரசனைப் பின்பற்றுபவனும், பண்டிதனுமாயிருக்கவேண்டும். இராஜமாளிகையில் வசிப்பவன் இதிஹாஸங்களையும் புராணங்களையுமறிந்தவனும், நல்ல கதைகளைச் சொல்வதில் திறமையுள்ளவனும், மிக்க கொடையுள்ளவனும் வாய்மையுள்ள வனுமாயிருக்க வேண்டும்.

5. மறைவில் சொல்லப்பட்ட அரசனுடைய வார்த்தையை மனிதர்களிடம் வெளிப்படுத்தக்கூடாது. அரசர்கள், எவனிடத்தில் அசூயையைப் பாராட்டுகிருர்

களோ அவனைப்பற்றிப் பேசக்கூடாது. அரசர்களுடைய காரியங்களில் ஏவப்பட்டவன் சிறிதேனும் குடிகளிடமிருந்து பரிதானத்தை வாங்கக் கூடாது; வாங்குகின்றவன் சிறைச்சாலையையோ, அல்லது மரணத்தையோ அடைவான். 'சமமாகச் சேவகத்துக்கு வந்திருக்கின்ற நான், மற்றொருவன், எங்கள் இருவர்களுள் என்னைக் காட்டிலும் குறைந்த மற்றவனை அரசன் போஷிக்கிறான்; பார்!' என்று அறிவுள்ளவன் மயக்கமடையக் கூடாது. ஒவ்வொரு காரியத்திலும் அரசர்கள் மிகச் சிறந்த அறிவுள்ளவனை விட்டுவிட்டு அதிகமாகக் கீழ் நிலைமையிலிருப்பவனை ஏற்படுத்துவார்கள். அரசர்களுடைய தன்மை அப்படிப்பட்டது. இராஜமாளிகையிலிருக்கின்ற மகிழ்ச்சிக்குரிய சில பொருள்களைப்பற்றித் தான் அதிகமாக மகிழக்கூடாது. அப்பொருள்களைப் பற்றி அரசனிடத்தில் புகழவேண்டும். புத்திக் குறைவுள்ள மனிதன் மகிழ்ச்சியினால் தன் விருப்பப்படி கெட்டகாரியத்தைச் செய்துவிடுவான். ஆதலால், இவனுடையநடக்கையை அரசன் கவனித்துப் பார்ப்பான்.

6. அரசனல்லாத கற்றறிந்த ஒருவன், தன்னை அரசனுக்கு நண்பனென்றெண்ணிக்கொண்டு, அரசன் அணியத்தக்க உயர்ந்த மணிகளை அரசனைப்போலத் தானும் உபயோகிக்கக்கூடாது. அரசனுக்குப் பிரியமான மணிகளை அரசனைப்போல அனுபவிக்கின்ற அரசனல்லாத மனிதனை அரசன் உயிரோடு வைப்பதற்குப் பொறுக்கமாட்டான். ஆதலால், நன்மையை விரும்புகின்ற மனிதன் சுகங்களை மறைவில் அனுபவிக்க வேண்டும். அரசனானவன் தனக்குச் சமமான நன்மையுடன் வாழும் வேலைக்காரனைத் தன் கோபத்துக்குள்ளாக்குவான். அரசனுடைய மகனோடு எக்காரணத்தினாலும் நேசம் பாராட்டக்கூடாது. அரசனால் அவமதிக்கப்பட்டவனையும் பயனற்றவனையும் பகைவனையும் தூரத்தில் விலக்கவேண்டும். விரோதத்தை எவ்விதத்தினாலும் அடையக்கூடாது. இராஜ பந்துக்களோடும் பலமுள்ளவர்களான மனிதர்களோடும் சேர்க்கையை நல்லதாக

எண்ணவேண்டும். எவ்விதத்தினலும் பகைமையைத் தேடிக்கொள்ளக்கூடாது. கர்வமுள்ளவர்களுடைய வேஷத்தையும், கபடமுள்ளவர்களுடைய வேஷத்தையும், அரசனுடைய வேஷத்தையும், வெளிப்படையாகத் தரிப்பவன் விருத்தி அடையமாட்டான். இராஜவேஷந்தவிர மற்ற இரண்டு வேஷங்களையும் தரிப்பவன் சுற்றத்தாரால் நகைக்கப்படுவான்.

7. காரணமில்லாமல் காரணமிருப்பதுபோல் அரசனிடமிருந்து பரிசு பெறுகிறவர்களோடும், சிற்றரசர்களுடைய தூதர்களோடும் ஒருபொழுதும் சேர்க்கை பெறலாகாது. இராஜமாளிகையில் வசிக்கின்ற புத்திசாலியான மனிதன் அரசனல் உத்தரவளிக்கப்படாமல் மற்ருெருவனுடைய இடத்தை அடையக்கூடாது. அரசர்கள் முன்னிலையில் தற்புகழ்ச்சி செய்யக்கூடாது. அவ்வாறே, தும்மல் முதலியவற்றையும், காறி எச்சிலுமிழ்வதையும் மெதுவாகச் செய்யவேண்டும். பரிகாச வார்த்தைகளில் ஒருபொழுதும் சிரிக்கக்கூடாது. அப்படிச் செய்வதானது அறிவீனனுடைய செய்கையென்று எண்ணப்படுகிறது. அரசனுடைய பிரீதியினலுண்டான சிரிப்பை மெதுவாக வெளியில் காட்டவேண்டும். ஒரு காலத்தும் உதடுகளை அசைக்கக்கூடாது. கைகளையும் ஆட்டக்கூடாது. அரசனுடைய வார்த்தையை ஆக்ஷேபிக்கக்கூடாது. குறுக்காகப் பார்க்கவும் கூடாது. நன்ருகக்கண்களால் பார்க்கவேண்டும். அரசனுக்கருகில் புருவத்தை நெறிக்கலாகாது. கட்டைவிரல்களால் பூமியைக் கீறலாகாது. ஒருபொழுதும் நன்ருகக் கொட்டாவி விடக்கூடாது. அந்த அரசனுடைய முன்னிலையில் அன்பர்களும் நண்பர்களும் புகழப்பட்டாலும் இகழப்பட்டாலும் தான்புகழவுங்கூடாது; இகழவுங்கூடாது. அன்பர்களையும் நண்பர்களையும் பார்க்கும்பொழுதும், அவர்களுடைய வாக்கியங்களைக் கேட்கும்பொழுதும், அமிருதம்போல அவர்களை வர்ணிக்கவேண்டும்.

8. அரசனுக்குப் பகைமையான காரியங்களைச் செய்பவன் அரசனுக்கு மகனைலும் அண்ணனைலும்

ஒத்தவனானாலும் நன்மையடையமாட்டான்; புத்திசாலியானவன் விழிப்புடன் அரசனை, முழுமையான நல்ல ஒழுக்கத்தாலும் முயற்சியினாலும் பற்பல விதமான சுத்தியினாலும் மகிழ்விக்கவேண்டும். நீராடுவதும் தூய ஆடையுடுப்பதும் உடல் சம்பந்தமான சுத்தியென்று சொல்லப்படுகின்றன. இழிவான விஷயங்களில் பற்றுதலற்றிருப்பது இரண்டாவது சுத்தியென்று சொல்லப்படுகிறது. புத்தியுள்ளவன், பக்தியுள்ளவனும் உண்மை பேசுகிறவனும் பொறிகளை அடக்கினவனும் மேதாவியும் தைரியமுள்ளவனுமாக அரசனை அடுக்கவேண்டும். நன்றியறிவுள்ளவனும் கற்றறிந்தவனும் அற்பத்தன்மையில்லாதவனும் உறுதியான அன்புள்ளவனும் பொறிகளை அடக்கினவனும் விருத்தியடைகின்றவனும் நல்ல நிலைமையிலிருக்கின்றவனுமான அரசனை அடுக்க வேண்டும்.

—மகாபாரதம்.

## பயிற்சி

### வினாக்கள்

1. நெருப்புடன் பழகுவதற்கும் அரசனுடன் பழகுவதற்கும் ஒப்புமை யாது?

2. அரசன் முன்னுள்ள ஆசனங்களில் அமருதலில் எவ்வித எச்சரிக்கை வேண்டும்?

3. அரச சபையில் வேலைக்காரன் நிற்குமிடம் யாது?

4. அரசர்களிடம் பயனைப் பெறுவதற்கு ஏற்ற வழிகள் யாவை?

5. இராஜமாளிகையில் வசிப்பவனுக்கு இருக்கவேண்டிய இயல்கள் யாவை?

6. அரண்மனையில் சுகங்களை அனுபவிப்பது எப்படி?

7. அரசன்முன் செய்யப்படக்கூடாத காரியங்கள் யாவை?

8. சுத்திகளென்று கூறப்பட்டவை யாவை?

9. அரசனை அடுப்பவர்களுக்குரிய இயல்புகள் யாவை?

### இலக்கணம்

1. அரசனையும் பாம்பையும் ஆற்றலற்றவர்களாயிருந்தால் இகழக்கூடாது—இதனிலமைந்த வழுவமைதி யாது?

2. பின்வரும் வாக்கியங்களைக் குறித்தபடி மாற்றியமைக்க.

(1) அரசர்களிடத்தில் நம்பிக்கை வைக்கக்கூடாது ?
(7 ஆம் வேற்றுமையை 2 ஆம் வேற்றுமையாக்குக)

(2) அவன் பகைவர்களால் பரிகசிக்கப்படுவான்.
(செய்வினை வாக்கியமாக மாற்றுக)

(3) அரசர்கள் எவனிடத்தில் அசூயையைப்பற்றிப் பாராட்டுகிறார்களோ அவனைப்பற்றிப் பேசக் கூடாது. (பாராட்டுகிறார்களோ என்பதை செய்ப்பாட்டு வினையாக மாற்றுக)

கட்டுரையாக்கம்

புதிதாக உத்தியோகத்துக்குப் போகும் ஒரு மகனுக்கு, அவன் தன் எஜமானனிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்று தந்தை எழுதுவதுபோல் ஒரு கடிதம் எழுதுக.

## 7. தமிழ் வளர்ச்சி



மேன்மை தங்கிய டாக்டர்
இராஜா சர் அண்ணாமலை செட்டியார்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தையும் அண்ணாமலை நகரையும் நிறுவி உலகமுள்ளளவும் தம் புகழை நிலை நிறுத்திய பெரிய வள்ளலான மேன்மை தங்கிய டாக்டர் இராஜா சர் அண்ணாமலைசெட்டியார் அவர்கள் தமிழ்நாட்டுத் தனவணிகர் குலத்தைச் சேர்ந்தவராவார்கள். அவர்கள் தமிழ் இயற்றமிழ்க் கல்லூரியொன்றை ஏற்படுத்தி யிருப்பதோடு, சென்னையில் தமிழிசைச் சங்கத்தையும் நிறுவி அவற்றை நன்கு பரிபாலித்து வருகின்றார்கள்.

1933-ம் வருஷம் டிசம்பர் மாதம் 23-ந் தேதி சென்னை, பச்சையப்பன் கலாசாலை மண்டபத்தில் நடந்தேறிய **தமிழ் அன்பர் மகாநாட்டை ஸ்ரீ** இராஜா அவர்கள் திறந்துவைத்தபோது அவர்கள் நிகழ்த்திய விரிவுரையே இங்குப் பாடமாக அமைந்துள்ளது. விரிவுரை நிகழ்த்தும் முறையை இதனிற் காண்க. **தமிழ்** முன்

காலத்தில் வளர்ந்த வகையையும், இப்பொழுது அது நிற்கும் நிலைமையையும், இனி அதன் வளர்ச்சிக்கு ஆகலான முயற்சி வழிகளையும்பற்றி ஸ்ரீ இராஜா அவர்கள் மிக்க உணர்ச்சியுடன் பேசி யிருப்பதைக்காண்க.



## விரிவுரை

தலைவரவர்களே, சீமான்களே, சீமாட்டிகளே!

1. எல்லாம்வல்ல இறைவன் திருவருளால் தமிழன்பர் மகாநாடு இச்சென்னைமாநகரில் இன்று கூடுகின்றது. பிற்காலத்துப் பெருவள்ளல்களில் ஒருவராகிய பச்சையப்ப முதலியார் கல்வி மண்டபத்தில், தமிழ் வளர்ச்சிக்காக இத்தமிழன்பர் மகாநாடு கூடுவது மிகப் பொருத்தமானது. இம்மகாநாட்டைத் திறந்து வைக்கத் தக்க பேராற்றல் மிக்க பெரியோர் எத்தனையோபேர்கள் நம் நாட்டில் இருக்கின்றார்கள் என்பதை நான் நன்கு அறிவேன். என்னிடம் அத்தகைய பேராற்றல்கள் இருப்பதாக நான் எண்ணவில்லை. ஆனால் நான் இம் மகாநாட்டைத் திறந்துவைப்பதற்கு இசைந்தது, அதை ஒரு பெரும்பாக்கியமென்று கருதியேயாகும். தாய்மொழித் தொண்டுசெய்ய எனக்குச் சரியான சமயம் கிடைத்த போது, நான் அதனை எங்ஙனம் மறுக்க முடியும்?

2. தமிழன்பர்களே, நம் தாய்மொழியாகிய தமிழ் மிகப் புராதனமானது; எவரும் வியக்கவல்ல ஆற்றல் வாய்ந்தது; நாகரிகம் படைத்தது; பல கலைகள் நிரம்பியது; விரிந்த நோக்கமுடையது. முடியுடை வேந்தர் மூவரும் செய்த மொழித்தொண்டுகள் கணக்கில. சங்கமிருந்து தமிழாராய்ந்தவர்கள் எத்தனையோ பெரும் புலவர்கள். சேதுபதிகள், ஜமீன்தார்கள், பிறவள்ளல்கள், மடாதிபதிகள், சைவசமயாசாரியர்கள், ஆழ்வார்கள், பௌத்த ஜைன சமயத்தவர், இஸ்லாமிய அறிஞர், கிறிஸ்தவ அறிஞர் முதலிய எத்தனையோ பேர் பல துறைகளிலும் நம் தமிழ்மொழியை ஆதரித்து வந்திருக்கிறார்கள். இவர்கள் எங்கே எப்பொழுது எப்படி ஆத



ரித்தனர் என்ற விஷயத்தைப்பற்றி நான் எதையும் இப்பொழுது சொல்ல உத்தேசிக்கவில்லை.

3. ஆங்கிலத் துரைத்தனத்தார் நம்தேசத்தை ஆளுகின்ற இந்நாளிலே நாகரிகம் நாளுக்கு நாள் பெருகி வருகின்றது. புதிய புதிய விஷயங்களெல்லாம் பிற பாஷைகளிலே தோன்றிக்கொண்டே யிருக்கின்றன. பிறநாடுகளெல்லாம் கல்வியில் அதிக விரைவாக முன்னேறி வருகின்றன. நாம் மாத்திரம் ஒன்றும் செய்யாமல் இருக்கிறோம். நமது தமிழ்மொழி புதிய புதிய துறைகளில் வளர்ச்சி பெறவேண்டாமா? பழம்பெருமை பேசியே காலத்தைப் போக்கிவிடுதல் நல்லதா? நமது மக்களுக்கு அறிவு பெருகவேண்டாமா? படிக்காதவர்களின் எண்ணிக்கை இன்னும் நமது நாட்டில் குறைந்தபாடில்லையே! இந்த விஷயம் எந்த அறிவாளியின் நெஞ்சத்தைத்தான் புண்ணாக்காது? தமிழ், தமிழ் என்று பேசிப் பேசி நாம் காலத்தை வீணாக்கினால், புதிய வழிகளில் இறங்கி நாம் எப்பொழுதுதான் உழைப்பது?

4. நண்பர்களே, இனித் தமிழின் தற்கால நிலைமையைப் பாருங்கள். அது மிகவும் கவலைக்கிடமாக இருக்கின்றது. ஆரம்பக்கல்வி, நடுத்தரக்கல்வி, உயர்தரக் கல்வி இம்மூன்றுக்கும் எத்தனையோ பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. தமிழுக்கும் தனியான கௌரவம் அளிக்கப்பட்டு வருகின்றது. ஆனால் அதன் அபிவிருத்தி அவ்வளவு சிலாகிக்கக்கூடியதாக இல்லை. இனி ஒருகால் அதற்கு நல்ல நிலை ஏற்படலாம். தமிழ் முன்னேற்றம் அடையாததற்கு ஆங்கிலபாஷையும் துரைத்தனமுமே முக்கியகாரணமென்று சிலர் கூறலாம். அது உண்மையன்று. நாமே அதன் அபிவிருத்திக்குத் தடையாக நின்றோம் என்று சொல்வது பொருந்தும். எதற்கும் துரைத்தனத்தாரையே எதிர்பார்த்துச் சும்மா இருந்தால் ஒன்றும் நிறைவேறாது. நம்முடைய நோக்கம் இப்படியென்று அவர்கள் கண்டால் அல்லவோ, அதற்குத்தக்கபடி உதவிசெய்ய முன்வருவார்கள்?

5. படித்தவர்கள் மாத்திரம் அறிந்து அனுபவிக்கக்கூடிய செய்யுள் நூல்களும் வசன நூல்களும் தமிழ் மொழியில் நிறைந்து கிடப்பதால், அவை பொதுமக்கட்கு அறிவைக் கொடுக்கக்கூடிய வகையில் அமையவில்லையென்று சிலர் கூறலாம். ஒருகால் அது உண்மையாயிருக்கலாம். ஆங்கிலபாஷையின்கண் அறிவைத் தரக்கூடியனவும் அனைவரும் படிக்கக்கூடியனவுமான செய்யுள் நூல்கள் வசன நூல்கள் இருப்பதுபோலவே, நமது தமிழ்மொழிக்கும் இருக்கவேண்டியது அத்தியாவசியமல்லவா ? அவையில்லாக் குறையை நீக்குவது இம் மகாநாட்டின் கொள்கைகளில் ஒன்றென்பதை அறிந்து நான் பெரிதும் மகிழ்கின்றேன்.

6. சிலர், நம்நாட்டுச் சிறுவர்களுக்கு ஆங்கிலத்தில் ஓர் ஊக்கமும் உற்சாகமும் உண்டாவது போலத் தமிழில் உண்டாவதில்லையேயென்று கூறுகின்றார்கள். தமிழில் வசன நடைக்கு உறுதியான நிலை இன்னும் ஏற்படாதது வருந்தத்தக்கது. எது நல்ல வசன நடை என்ற ஒரு கேள்வி ஏற்படுமானால், எத்தனைபேர் அதற்குப்பதில் சொல்லுவார்களோ அத்தனை விதமாக அதற்குப் பதிலும் இருக்கும். இந்த நிலை, மொழிவளர்ச்சிக்குப் பெரியதொரு தடையாக இருக்கின்றது. எளிய நடையில் இனிய சொற்களைக் கலந்து எவரும் எளிதில் அறியக்கூடிய தன்மையில் எழுதவேண்டுமென்பதை மனத்திற் கொண்டு அவ்வாறு எழுதாமல், மனம்போனவாறெல்லாம் இழுத்துக்கொண்டு போகவிடுவது பாஷையின் உயர்வுக்கு நிச்சயமாய்த் தீமையைத் தரக்கூடியது. செய்யுள் நூல்களில் வழங்கும் சொற்களைத் தேடிப்பிடித்தும், வழக்கத்தில்லாத சொற்களைப் புதிது புதிதாகக் கண்டுபிடித்தும், பொருட்பொருத்தமில்லாமல் அச்சொற்களை வழங்கி, யாருக்கும் ஒன்றுமே விளங்காமல் தம் ஆற்றலை வெளிப்படுத்துதலையே பிரதானமாகக் கொண்டு, இதனைப் படிப்பவர்கள் எவர் என்பதைக் கனவிலும் கருதாமல், விடாப்பிடியோடும் ஆவேசத்தோடும்

எழுதப்படும் சில புத்தகங்கள் பாஷையின் முன்னேற்றத்துக்குக் கேடு விளைப்பனவேயாம்.

7. நாம் பார்க்கின்ற, உணர்கின்ற, எண்ணுகின்ற அனுபவத்திற்கேற்றவைகளுக்குப் பொருத்தமான சொற்களையே நாம் எழுதும் நடையில் பிரயோகிக்க வேண்டும். நாம் தெளிவுடன் எழுதினால் பிறருக்கும் அது தெளிவாக இருக்கும். கருத்தும் பேச்சும் ஒன்றையொன்றுவிட்டு என்றும் பிரிவதில்லை. நாம் இனி உண்டாக்க இருக்கும் புத்தகங்கள் உண்மையான வசன லட்சணங்கள் அமைந்து வெளிவருதல் நலம்.

8. நாட்டுமக்களுக்குக் காலத்திற்கேற்றபடி நல்லறிவு தரக்கூடிய நூல்களை மேல் நாட்டு அறிஞர்கள் தத்தம் மொழிகளில் பல்லாயிரக் கணக்காக எழுதிவைத்துள்ளார்கள். தினந்தோறும், புதிய புதிய நூல்கள் வெளிவந்துகொண்டே யிருக்கின்றன. அந்த நூல்களினின்று, இப்பொழுது வேண்டிய நூல்களை நல்ல நடையில் மொழிபெயர்த்தால், மொழிபெயர்க்கும்போது சிலசொற்களுக்குச் சரியான பிரதிபதம் நமதுமொழியில் காண முடியாது. இது இயற்கையே. சரியானசொற்கள் கிடைக்காவிட்டால் அதேசொற்களை உபயோகித்துவிடலாம். அதனால் பாஷைக்குக் குறைவென்று எவரும் கூறமுடியாது. உதாரணமாக High Court என்னும் சொல்லைத் தமிழில் 'ஹைகோர்ட்' என்று எழுதினால் யாருக்குத் தான் பொருள் விளங்காது? அதையே 'உயர்தர நீதி மன்றம்' என்று மொழி பெயர்த்தால் அதில் எத்தனை பேருக்குத் திகைப்பு உண்டாகின்றது!

9. கல்லூரிகளிற் படிக்கும் மாணவர்க்குப் பொதுவாகத் தமிழில் நாம் எதிர்பார்க்கின்றபடி அறிவு ஏற்படுகின்றதில்லை. அதற்குக் காரணம் மாணவர்கள் தங்கட்குப் பாடமாய் வைத்திருக்கும் புத்தகங்களைத் தவிர வேறு புத்தகங்களைப் படிக்காமையே. அவர்கள் படிப்பதெல்லாம் பரீக்ஷையில் தேறுவதற்காகவே. கூர்ந்து படிக்க வேண்டுமென்ற தீவிர ஆசை தரக்கூடிய புத்தகங்கள்

அதிகம் உண்டாகவேண்டும். அறிவு வளர்ச்சிக்குத் தகுந்த புத்தகங்களைப் பெருவாரியாக உண்டாக்கிக் கிராமங்கள்தோறும் புத்தகசாலைகள் அமைக்கப்பட்டால், அந்த அந்த இடங்களில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் தங்கள் ஒய்வு நேரங்களைத் தங்களுக்கும் தேசத்திற்கும் நலம்தரும் வழிகளில் உபயோகிக்கலாம். அவர்கட்கு அறிவு பெருகும். கிராமம் நகரம் என்று தனித்து நிற்கும் இந்த இரண்டு பிரிவுகளும் ஒன்றாகும். அந்த ஒன்றாகும் நிலையையே நாம் வேண்டுகிறோம். அதற்குப் புத்தகசாலைகள் பெரிதும் துணை புரியும். பிறநாட்டிலுள்ள புத்தக சாலைகளின் தொகையையும் நம்நாட்டிலுள்ள அவற்றின்தொகையையும் ஒப்பிட்டுப்பார்த்தால், நம்நாட்டில் ஒன்றுமே இல்லையென்று சொல்லத்தக்க அளவில் இருக்கின்றது. ஆங்கிலபாஷையின் உயர்வையும், அதன் செல்வாக்கையும், அதன் விரிவையும், அதன் அபிவிருத்தியையும், அதனைப் பயில்வதால் வரும் நன்மைகளையும் நான் உங்கட்கு எடுத்துக்கூறுவது மிகையென்று எண்ணுகின்றேன். அத்தகைய உயர்வை நம் தாய் மொழியும் பெற வேண்டுமென்று நான் மனப்பூர்வமாய் எண்ணுவது போலவே, யாவரும் எண்ணுவரென்பது என் துணிவு.

10. தாய்மொழி மூலமாகப் பொதுமக்கள் நல்லறிவு பெற்று உய்யும்படியான ஒருபெரிய இயக்கத்தில் நாம் ஈடுபட்டிருக்கின்றோம். இவ்விஷயத்தில் ஜாதி, மதம் முதலியவற்றின் சார்பான எத்தகைய சச்சரவுகளுக்கும் இடமில்லை. எல்லா மக்களும் நம் தாய்மொழியின் மூலமாய்ப் போதிய அறிவைப்பெற்று விளங்கும் அக்காட்சியைக் கண்ணாரக்கண்டு அளவிலா இன்பம் அடைவோம். தமிழே பேசட்டும், தமிழிலேயே எழுதட்டும், எங்கும் தமிழ் முழக்கமே முழங்கட்டும்.

11. ஒரு பாஷை இயங்கிக்கொண்டிருக்கும் நாட்டில் பிறபாஷை பேசுவோர் வந்து சேர்வதும், அந்தப் பிறபாஷையின் சொற்களும் கருத்துக்களும் அதில் கலப்பதும் இயற்கை. அக்கலப்பினைத் தவிர்த்துவிட்டுத் தனியாகவே நிற்பேன் என்ற பாஷை எங்கேனும் தன்னலம்

பேணுமா? அப்படி ஒதுங்கி நிற்கலாமா நம் தமிழ்மொழி? ஆங்கில பாஷை இங்ஙனம் ஒதுங்கி நின்று உலகெலாம் மதிக்கத்தக்க உன்னத நிலையை அடைந்தது? ஆனாலும் பாஷையின் சிறப்பியல்புகளைக் குறைக்கக்கூடிய எந்தக் கலப்பும் விரும்பத்தக்கதன்று. நாம் பேசுகின்ற பேச்சில் எத்தனை ஆங்கிலச் சொற்களைக் கலந்து பேசுகிறோம். வேண்டாம் வேண்டாம் என்று தள்ளிப் பார்த்தாலும் முடிகின்றதா ?

12. தமிழன்பர்களே, அறிவு அனைவருக்கும் பொது. அது ஒருவருக்கே உரியதன்று. அதனை ஆடவரும் பெறவேண்டும், மகளிரும் பெறவேண்டும்; ஏழையும் பெறவேண்டும், தனிகனும் பெறவேண்டும். அதனைப் பெறுதற்கு மொழியன்றோ கருவி? அதனையல்லவா நாம் போற்றல்வேண்டும்? அதுவன்றோ தழைக்கவேண்டும்? இத்தகைய பெருமுயற்சியில் வீணான மனத்தாங்கல்களுக்கு இடமேது? ஜாதி, மதம் முதலியவற்றால் இவ்வியக்கம் விலக்கப்படமாட்டாது. பேசிப் பேசிக் கழிந்த நாட்கள் எண்ணத்தொலையா. கழிந்தன கழிந்தனவே; அவற்றிற்காக வருந்தவும் வேண்டாம். எதிர்காலத்தில் நம்முடைய தாய்ப்பாஷை உன்னத ஸ்திதியை அடையுமென்பது நிச்சயம். இதற்கு ஒவ்வொருவரும் தம்மாலான உதவிபுரிதல் அவசியமென்பதை நான் வற்புறுத்த வேண்டியதில்லை. ஊக்கமும் உற்சாகமும் உண்டாகிவிட்டால், அந்நற்காலம் அதி சமீபத்திலேயே வந்துவிடும். தமிழ் முன்னேற்றம் தமிழர் முன்னேற்றத்தையே பொருத்ததாகும்.

13. இம்மகாநாட்டின் சார்பாக நாம் எண்ணிய எண்ணம் நிறைவேற இறைவன் திருவருளைவேண்டி இதனை நான் திறந்து வைக்கின்றேன்.

## பயிற்சி

### வினாக்கள்

1. பச்சையப்பன் கலாசாலையில் தமிழன்பர் மகாநாடு நடப்பதன் பொருத்தம் யாது ?

2. தமிழ்மொழியின் சிறப்புகள் யாவை?

3. தமிழை ஆதரித்தவர்களாகக் கூறப்பட்ட வகையினர் யாவர்? ஒவ்வொரு வகையினருள்ளும் ஒவ்வொரு பெயரேனும் சொல்லக்கூடுமா?

4. தமிழுக்காக நாம் எவற்றைச் செய்யவேண்டும்?

5. தமிழ் முன்னேறுமைக்குக் காரணமாயிருப்பவர் யார்?

6. எத்தகைய செய்யுள் நூல்கள் விரும்பப்படுவன?

7. எத்தகைய வசனநடை வேண்டப்படுவது?

8. எத்தகைய வசனநடை, பாஷையின் முன்னேற்றத்துக்குக் கேடு விளைப்பது?

9. உண்மையான வசன லக்ஷணங்கள் என்பன யாவை?

10. மொழிபெயர்ப்பு செய்யும் விதத்தைப்பற்றி ஆசிரியர் கருத்தென்ன?

11. கிராமம் நகரம் என்று தனித்து நிற்கும் பிரிவுகள் ஒன்றுக வழி என்ன?

12. தமிழன்பர் மகாநாட்டின் நோக்கம் யாது?

13. பிறமொழிச் சொற்களைக் கையாளுவதில் நாம் கவனிக்க வேண்டுவது யாது?

## இலக்கணம்

1. பின்வரும் வினு வாக்கியங்களைச் சாதாரண வாக்கியங்களாக்குக:—

(1) நான் அதனை எவ்வாறு மறுக்கமுடியும்?
(2) அதில் எத்தனைபேருக்குத் திகைப்புண்டாகிறது?
(3) தனியாகவே நிற்பேன் என்ற பாஷை எங்கேனும் தன்னலம் பெறுமா?

2. பின்வரும் வாக்கியங்களைக் குறித்தபடி மாற்றுக:—

(1) ஊக்கமும் உற்சாகமும் உண்டாகி விட்டால், அந்நற்காலம் அதிசமீபத்திலேயே வந்துவிடும்.
(உண்டாகாவிட்டால் என்று மாற்றுக)

(2) பாஷையின் சிறப்பியல்புகளைக் குறைக்கக்கூடிய எந்தக் கலப்பும் விரும்பத்தக்கதன்று.
(நாம் என்ற எழுவாயை உபயோகிக்க)

(3) இறைவன் திருவருளை வேண்டி இதனை நான் திறந்துவைக்கிறேன்.

(செயப்பாட்டு வினைகளாக மாற்றுக)

கட்டுரையாக்கம்

ஒரு தமிழ்ச்சங்கத்தில் வருஷாந்த விரிவுரையாக 2 பக்கங்களில் 'தமிழின் தற்கால நிலைமை' என்ற பொருள்பற்றிப் பேசக் கட்டுரையொன்று வரைக.

## 8. நாடகக் கலை

மகாவித்வான் பாஷாகவிசேகரர் ரா. இராகவையங்கார்.

இராமநாதபுரம் சேது ஸமஸ்தான வித்வானான மகாவித்வான் பாஷாகவிசேகரர் ரா. இராகவையங்கார் சுவாமிகள் அவர்கள் சிலகாலம் 'செந்தமிழ்ப்' பத்திரிகையின் ஆசிரியராகவும், பின்பு சிலகாலம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவராகவும் விளங்கினார்கள். அவர்கள் வடமொழி, ஆங்கிலம் தமிழ் ஆகிய மொழிகளில் தேர்ச்சி பெற்றவர்கள். தமிழ் நூல்களைத் துருவி ஆராயும் வன்மையுடையவர்கள்; இனிய கவிதைகள் இயற்றுவதிலும் அரிய சொற்பொழிவுகள் ஆற்றுதலிலும் சிறப்புற்றோங்குபவர்கள்; பாரிகாதை, வஞ்சிமாநகரம், சாகுந்தலம் முதலிய நூல்களை இயற்றியவர்கள்.



இப்பகுதி அவர்களுடைய மொழிபெயர்ப்பு நூலாகிய சாகுந்தலத்தின் முகவுரையினின்று எடுக்கப்பெற்றுள்ளது.

1. உலகெலாம் அறிவொளி பரப்பிய புண்ணிய பூமியாகிய இந்நாவலந் தீவில் ஒரு பெருங்கடவுளின் விடுமூச்சின் வடிவாகக் கருதப்பெற்ற அரிய ஞானநிதியான வேதங்கள் எண்ணில என்றுசொல்வர். அவ்வெண்ணிறந்த வேதங்களுள் ஒவ்வொரு வகையை முதனூலாகக் கொண்டெழுந்த பல்வேறு கலைத் தொகுதியும் அவ்வாறே அநந்தமாகும். அப்பல்வகைக் கலைகட்கும் மூலமான வேதவகையுள் காந்தர்வவேதம் என்பதும் ஒரு பாகுபாடாம்.

2. இதனை ஆசிரியர் தொல்காப்பியனார், "இசையொடு சிவணிய நரம்பின் முறை (எழுத். நான்மரபு 33) என்று பெயரிடுவர். இங்கே நரம்பு என்பது யாழ் என்னும் இசைக் கருவியைக் குறிப்பதாகும். யாழ் நூலை மறையென்று கூறுதலால் அதனை வேதம் என்று இவர் கருதியது துணியலாம். கந்தருவரை 'யாழ்த் துணைமையோர்' என்றிவர் வெளியிடுவர். யாழுக்குப் பொருந்தப் பாடுவதும் அதற்குப் பொருந்த ஆடுவதும் தமக்குரிய இயல்பாகக் கொண்டொழுகிய கந்தருவர் என்னும் ஒரு கூட்டத்தாருடைய ஆசார முறைகளையே மிகுத்துக் கூறுதலான் இஃது இப்பெயர் பெற்றதென்பர். இசையைத் தலைமையாகக் கொண்ட ஸாமவேதத்தின் உபவேதமென்றும் இதனைச் சொல்வர்.

3. இம்மறையை முதனூலாகக்கொண்டு, உள்ளம், உரை, செயல் என்னும் மூன்றனும் உலகின் மக்கள் நாகரிகத்தில் வளர்தற்குக் காரணமாகப் பழையோர் இனிது நிகழ்த்திய நல்ல நிகழ்ச்சிகளை நிகழ்ந்தவாறே கூறி, எல்லாச் சுவைகளையும் பொருந்தக் காட்டலால், பின்னுள்ளோர் அவற்றைக் கண்டு அவ்வொழுக்கங்களையும், உரையாடலையும், உள்ளத்துயர்ந்த கோட்பாடுகளையும் போற்றிக்கொள்ளும் வண்ணம் எழுந்த நாடக நூல்களும் இந்நாவலந்தீவில் எண்ணிலவே யாகும். இந் நாடக நூலே, ஆதியில் 'கிரந்தம்' என்று பெயர் பெற்றதென்பது' பகவான் பதஞ்சலி இந்நாடக நூலாரைக் 'கிரந்திகர்' என்றெடுத்தாளுதலான் அறியப்படுமென்பர். தொல்காப்பியனாரும் இந்நாடக நூலையே புலன் என்று ஆளுவர். தமிழில் இவ்வழக்கம் பண்டுதொட்டுண்டாயதென்பது நாடக முறையையே நூலென்னும் பெயரான் முன்னோர் வழங்கிக் காட்டலான் அறியலாம். சிலப்பதிகாரத்து உரைப்பாயிரத்து அடியார்க்கு நல்லார்,

"ஆயிர நரம்பிற்று....வைத்தனர் புலவர்"

என நூலுள்ளுங் கூறினர்' என உரைத்தலான் இவ்வுண்மை அறியப்படும்.

* * * *

4. நாடகம் என்பது நல்லோர் ஒழுகியதனை ஒழிந்தோர் அறிந்தொழுகுதலைப் பயனாகவுடையது என்பதும், இது பெரும்பாலும் நல்லோர்க்கு உள்ளனபற்றியே வரும் என்பதும் துணியலாகும்.

5. இஃது ஆடல், பாடல், அழகு என்ற மூன்றையுங் கொண்டு நிகழ்வதென்பது, ஆடலாசிரியன் நடியெனப் பட்ட இனிதணிந்த விறலியைக் கால வியல்புக்கேற்றவாறு பாடுவித்துத் தொடங்கும் பண்டை வழக்கத்தான் உய்த்துணரலாகும். தொல்காப்பியனார் நாடக நூலாகிய புலனுக்கு இலக்கணங் கூறிய இடத்துச் "சேரிமொழியாற் செவ்விதிற் கிளந்து" என்றதனால், சேரிமொழியாகிய பாடிமாற்றம் வடமொழி நாடகங்களுட் பாகதம்போலப் பெண்டிர் கூற்றினும், இழிந்தோர் கூற்றினும் வைத்து வழங்குதல் தமிழினும் உண்டாதல் உணரலாம்.

6. இவற்றால், நாடகநூல் முறைமை ஆரியத்திற்கும் தமிழிற்கும் பல்வகையினும் வேறுபாடின்றி ஒத்த துணரலாம். அங்ஙனம் ஒத்தியன்ற நாடகநூல்கள் வடமொழியிற்போலத் தமிழினும் பழங்காலத்துப் பல விருந்தன வென்று இதனால் நன்கு துணியப்படும். இவ்வுண்மை இயலிசை நாடகம்பற்றி முத்தமிழ், தமிழ் மூன்று, தமிழ் மும்மையெனச் சான்றோர் வழங்குதலானும் வலியுறும். அங்ஙனம் பண்டே உண்டாகிய நாடக நூல்களுள், "விளக்கத்தார் கூத்து" என்ற ஒரு நூற்பெயர் மட்டுமன்றி, வேறெதுவும் இக்காலத்துக் கிடைக்காதொழிந்தது தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட நன்மக்கள் எல்லோரானும் வருந்தத்தக்கதேயாகும்.

7. இந்நிலையில் ஆரியம் என்னும் பெருங்கடற் பரப்பில் நல்லோர் எடுத்துதவிய அமிழ்தம் போன்றுள்ள உயர்தர நாடக நூல்களை மொழிபெயர்த்துத் தமிழை அம்முறையானும் வளம்பெறச்செய்வது பண்டை ஆசிரியர் சென்ற நெறியையே தழுவியதாகும். ஆசிரியர் தொல்காப்பியனார் வழிநூல் வகையைக் கூறிய

இடத்து, "மொழிபெயர்த் ததர்ப்பட யாத்தல்" என்பத ஞல் மொழி பெயர்த்துக் கொள்வதற்கு உடன்படுதலால் இவ்வுண்மை துணியலாம். இங்கே பேராசிரியர், "அதர்ப் பட என்பது நெறிப்பட என்றவாறு; நெறிப்படுதலென் பது அவ்வாறு மொழிபெயர்த்துச் செய்யுங்கால், அவை கிடந்தவாற்றானே செய்யப்படும்; தொகுத்தும் விரித்தும் தொகை விரியாகவுஞ் செய்ததனற் பயனில்லை, தமிழர்க் கும் ஆரியர்க்கும் என்பது. மொழிபெயர்த்தெனவே பொருள் பிறழாமை பெற்றும்; வழக்கு நூலுள்ளும் மொழிபெயர்த்து யாக்கப்படுவன உளவோவெனின், அற் றன்று; அது வேண்டுமே? வேதப்பொருண்மையும் ஆக மப்பொருண்மையும் நியாய நூற்பொருண்மையும் பற் றித் தமிழ்ப்படுக்குங்கால் அவற்றிற்கும் இதுவே இலக் கணம் என்றற்கு மொழிபெயர்த்தலையும் இவற்றின்கட் கூறினன் என்பது" எனக் கூறியது காண்க.

8. ஈண்டு மொழிபெயர்ப்பென்பது, மொழிபெயர்க் கப்படும் நூல், தொகுக்கவும் விரிக்கவும் தொகுத்து விரிக்கவும் படாது, கிடந்தவாறே பொருள் பிறழாமல் தமிழிற் செய்வதென்பது தெளியப்படும்.

## பயிற்சி

### வினாக்கள்

1. காரணங் காட்டிப் பொருள் வரைக :—நாவலந் தீவு; காந்தர்வ வேதம்; பாடிமாற்றம்; அதர்ப்பட; உரைப்பாயிரம்; விறலி.

2. பின்வருவனவற்றிற்கு நேரான தமிழ்ச் சொற்கள் வரைக: ஞானநிதி. அநந்தம். அநுகரித்து. பாகதம்.

3. தொல்காப்பியனார் காந்தர்வ வேதத்துக்குக் கூறும் பெயர் யாது? அதன் பொருத்தத்தை ஆராய்க.

4. நாகரிக வளர்ச்சி தோன்றும் வாயில்கள் யாவை?

5. நாடக நூல்களின் நோக்கம் யாது?

6. நாடக முறையை நூலென்று வழங்கியதற்கு மேற் கோள் காட்டுக.

7. நாடகம் எவற்றைக் கொண்டு நிகழும்? அஃது எவ் வாறு புலனாகும்?

8. நாடகநூல் முறை ஆரியத்துக்கும் தமிழுக்கும் பொதுவானது எப்படி ?

9. பேராசிரியர், மொழிபெயர்ப்புச் செய்யும் விதத்தைப் பற்றிக் கூறுவன யாவை ?

### இலக்கணம்

1. பின்வரும் தொகைநிலைத் தொடர்களை விரித்துக் காட்டுக :—யாழ்நூல். உரைப்பாயிரம். ஆடல் பாடல். வடமொழி. நூன்முறை. முத்தமிழ்.

2. பின் வரும் சொற்களுக்குப் பகுதிகளையும் விகுதிகளையும் எடுத்துக் காட்டுக:—கோட்பாடு. மாற்றம். சான்றோர். அறம்.

3. பின் வரும் சொற்களின் பொருள்களை விளக்குக :—நூன்மரபு. முதனூல். புலன். நூலாசிரியர். உரையாசிரியர். தொகை. விரி. தொகைவிரி. வழக்கு நூல்.

### கட்டுரையாக்கம்

1. மொழிபெயர்ப்பு செய்யப்பட வேண்டும் முறையைப் பற்றி உன் கருத்துக்களைத் தொகுத்தெழுதுக.

2. நாடகத்தின் உயர்வு - இப்பொருள்பற்றி ஒரு பாரா எழுதுக.

## 9. வாழ்க்கைக் குறிப்புக்கள்

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.

### கல்வி

தமிழன்னையின் தவப்புதல்வரான திருவாளர் திரு. வி. க. அவர்கள் 26-8-1883 ல் சோழநாட்டின் தலைநகர்களுள் ஒன்றான திருவாரூரிலே விருத்தாசல முதலியார் என்பவரின் அருமைப் புதல்வராய்த் தோன்றினர். அவர் தமிழுலகில் மிகப் பெரும் பண்டிதராகவும், கவிஞராகவும், பத்திரிகாசிரியராகவும், சமூகத் தொண்டராகவும், அரசியல் வாதியாகவும், சீர்திருத்தச் செல்வராகவும், விளங்கி வருகின்றார். அவருடைய பிரசங்கங்களும், கட்டுரைகளும் தனிச் சிறப்புடையவை. அவர் தம் வாழ்க்கைக் குறிப்புகளை ஒரு நூலாக்கி வெளியிட்டுள்ளார். அதனில் அவர்



தாம் கல்விபெற்ற முறையை விளக்கியுள்ளார். இயற்கையின் ஊடே உழன்று பெறுங் கல்வியே உண்மைக் கல்வியாகும் என்பது இப்பகுதியில் மிக அழகாகக் காட்டப்பட்டுள்ளது. இதனைக் கர்ண்க.

1. காவியம் ஓவியம் முதலியவற்றில் உறவுகொண்டு, அவைகளில் ஒன்றி ஒன்றி நிற்பவரை, அவைகள் தங்கட்கு முதலாக உள்ள ஒன்றனிடத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கும். அம்முதல் எது? இயற்கை. இயற்கையை அறிவால் ஆராய்ந்து பார்த்தால் அதன் உள்ளுறையை உணர்தல் கூடும். உள்ளுறை எது? இறை. இறை உயிர். இயற்கை உடல். இறையற்ற இயற்கைக் கூறே கிடையாது. இறை, இயற்கையின் உள்ளும் புறமும் நீக்கமற நிறைந்து நிற்பது; அவ்வளவிலன்றி மேலுங் கடந்து தனித்து நிற்பது. எல்லாவற்றையுங் கடந்த இறையின் தனி நிலை வாக்கு மனத்துக்கு எட்டாதது. வாக்கு மனத்துக்கு எட்டாத ஒன்றை எப்படிப் பேசிக் காட்டுவது? எப்படி எழுதிக் காட்டுவது? இயற்கையை உடலாகக்கொண்டு, தான் உயிராக நிற்கும் இறை நிலையை உன்ன உன்ன இறையின் கடந்த நிலையின் உண்மையை உணர்தல்கூடும். இயற்கையின் உயிராக உள்ள இறையை எவ்வாறு உன்னுவது? இயற்கை என்னும் உடல் வாயிலாக்வே உன்னுதல் வேண்டும். வேறு வழியில்லை.

2. உடலைக்கொண்டே உயிருண்மை நிறுவப்படுகிறது. உடலை விடுத்து உயிருண்மை நிறுவுதல் இயலாது. ஆதலின் இயற்கை வாயிலாக இறையை உணர முயல்வது அறிவுடைமையாகும். இறையை உணர்தற்கு இயற்கையை உன்னுதல் வேண்டும். உன்னுதலாவது தியானஞ்செய்வது. தியானக் கருவி இயற்கை. காவிய ஓவியங்களின் முதல் - மூலம்—இயற்கை. இயற்கையை அடைதற்கு அவைகள் ஏணிபோன்று துணை செய்யும். காவிய ஓவியங்கள் இயற்கைப் படங்கள் -இயற்கைக் குழவிகள். இயற்கையினின்றும் பிறந்த காவிய ஓவியங்களே இயற்கையை உணர்த்தும் கருவிகள் என்பது கருதற்பாலது.

காலையிலே நீலக் கடலிலே இளஞ் செஞ்ஞாயிறு எழுகிறது. அது நீலத்தின்மீது தவழுங் காட்சியைத் தமிழன் தமிழில் இசைக்கிருன்; ஆரியன் ஆரியத்தில் ஓதுகிருன்; ஆங்கிலேயன் ஆங்கிலத்தில் பகர்கிருன்; மற்றவர் மற்ற மற்ற மொழிகளில் புகல்கிருர். மூலம் ஒன்று; மொழி வேறு. வியாசர் கண்டதைச் சோக்ரதர் கண்டார்; வான்மீகி கண்டதை ஷேக்ஸ்பியர் கண்டார்; காளிதாஸன் பார்த்ததைக் கம்பர் பார்த்தார்; சம்பந்தர் பார்த்ததை ஷெல்லி பார்த்தார்; சேக்கிழார் நோக்கியதை மில்டன் நோக்கினர்; சங்கரர் நோக்கியதைக் காண்ட் நோக்கினர். என்ன வேற்றுமை! எங்கே வேற்றுமை? எல்லார் மனமும் ஒன்றிலேயே தோய்ந்தது. மொழிகள்மட்டும் வேறு வேருகத் தோன்றுகின்றன. ஆனல் அவைகளின் பிறப்பிடம் ஒன்றே. அது நாதம். நாதம் காரணம்; மொழி காரியம். காரியம் பல படல் இயல்பு.

3. தமிழே தெரியாத ஆங்கிலர் ஒருவர், யோகக்காட்சியால் திருமூலர் திருவாக்கின் பொருளை உணர்த்தியதை யான் பார்த்தேன்; அவர் கூறிய விளக்கத்தையுங் கேட்டேன். விரிவு எனது 'உள்ளொளி' என்னும் நூலிற் காண்க.

4. காவிய ஓவியங்களோடு பழகினேன்; அவைகளில் படிந்தேன்; படிந்து படிந்து உழன்றேன்; பன்னெடு நாள் உழன்றேன்; உழல உழல அவைகள் என்ன செய்கின்றன? நன்றி செய்கின்றன. எவ்வழியில்? அவைகள் தங்கள் முதலாகிய இயற்கைக் கருவூலத்தில் எளியேனைப் பிடர் பிடித்துத் தள்ளுகின்றன. என்றுங் காணுத செல்வத்தை யான் காண்கிறேன். அங்கே கட்டில்லை; காவலில்லை. செல்வக்கடல்; கொள்ளக் கொள்ள வற்ருது; வரையாது. இயற்கை அன்னை தண்ணருள் பொழிகிருள். அவள் கோலம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காவிய ஓவியமாகத் தோன்றுகிறது. ஞாயிறு, திங்கள், உடுக்கள், வானம், மலை, காடு, ஆறு, வயல், கடல், புழு, பூச்சி, பறவை, விலங்கு, மகள், மகன்,

குழந்தை முதலிய யாவும் காவிய ஓவியங்களெனப் பொலிகின்றன. இயற்கை யுலகே தொல்காப்பியமாய்த் தோன்றுகிறது. அகிலம் ஒரு பெருங் • கழகமாகக் காணப்படுகிறது.

5. அக்கழக மாணுக்கருள் யானும் ஒருவனுனேன். அங்கே ஆசிரியன்மாரில்லை. இயற்கைக் கூறு ஒவ்வொன்றும் ஆசிரியத் தொண்டுசெய்கிறது. இங்கே காவியமும் ஓவியமும் புறத்தே வேறுபாடு காட்டுகின்றன. அங்கே வேறுபட்ட காட்சியே கிடையாது. எல்லாம் காவியம்; ஓவியம். இங்கே பள்ளியில் பலதிறப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. அங்கும் பலதிறக் கலைகளிருக்கின்றன. யான் மாணுக்கன்; இயற்கைக் கழகத்தில் பயில்கிறேன்.

6. ஞாயிற்றை நோக்குகிறேன். ஐயங்கள் எழுகின்றன. அவைகளை எப்படிக் களைந்துகொள்வது? ஞாயிற்றையே நோக்கி, 'ஞாயிறே! நீ எழுவதும் மறைவதும் உண்மையா? காலையிலும் மாலையிலுஞ் சிவந்தகோலம் தாங்குவதென்னை? மற்ற வேளைகளில் வேறுகோலம் தாங்குவதென்னை? உன்னிடத்தில் ஏழு நிறம் அமைவானேன்? எட்டு ஏன் அமையவில்லை? நீ எற்றுக்கு ஒளிகால்கிருய்? ஒளி உன்னுடையதா? பிறருடையதா?' என்று கேட்பேன். எளிதில் விடைகள் கிடைப்பதில்லை. ஞாயிற்றை உன்னி உன்னி அதில் மூழ்கி ஒன்றுவேன். விடைகள் கிடைக்கும்.

7. வேனிற்காலம்; தென்றற்காற்று; கண் விழித்தேன். அண்ணுந்து பார்க்கிறேன்; நீலவானம்; முத்துக்கள் போன்ற உடுக்கள்; வெண்திங்கள் உழவு. ஆனந்தம். 'வானமே! நீலநிறத்தை எப்படிப் பெற்ருய்? அஃது உண்மையா? உருவெளியா? உன்னிடத்திலா உடுக்கள் உறைகின்றன? உடுக்களே! உங்கள் வரலாறென்ன? உங்களிடத்தில் உயிர்கள் வாழ்கின்றனவா? உங்களால் இம்மண்ணுலகுக்கு ஏதேனும் நலன் விளைகிறதா? எற்றுக்கு ஒளிர்கிறீர்கள்? உங்கள் ஒளி இயற்கையா?

செயற்கையா? உங்கட்குப் பகல் பகைமையா? வெண் திங்களே! நீ ஏன் ஓடிக்கொண்டே இருக்கிறாய்? ஏன் ஓரிடத்தில் நிற்பதில்லை? உன் நிலவு இன்பம் ஊட்டுவ தென்னை? அதை நீ எப்படி அடைந்தாய்? பகலில் அந்நிலவை ஏன் பொழிவதில்லை? பகலில் நீ இருக்கி றாயா? இல்லையா? எங்கே மறைந்துகொள்கிறாய்?' இவ் வினாக்கள் எழுகின்றன. அவைகளை எண்ணி எண்ணிப் பார்ப்பேன். எப்படியோ பதில்கள் வரும்.

8. கடற்கரை நண்ணுவேன். கடற்காவியத்தைக் காண் பேன். 'கடலே; நீ ஏன் பரந்து விரிந்து கிடக்கிறாய்? ஏன் ஆழியாய் இருக்கிறாய்? உன்னை அடைந்தால் ஏன் விழுங்குகிறாய்? உன் தரங்கம் ஏன் பாடுகிறது? நீ ஏன் உப்பை வைத்திருக்கிறாய்? கோடிக்கணக்கான உயிர் களை ஏன் அடக்கி நிற்கிறாய்? அவைகள் மூச்சு விடுகின் றனவா? அவைகள் ஒளி, காற்றுப் பெறுகின்றனவா? நீ பூமியிலும் பெரிதா யிருப்பதென்னை? அதை விழுங் கவா? நீ நிலமாயிருந்தது உண்மையா? உண்மையானால் ஏன் நீரானாய்? மீண்டும் நிலமாவையோ? உன்னருகே உலவினால் உடலில் உரம் ஏறுவதென்னை? உன்னிடத் தில் என்ன மருந்திருக்கிறது?' இவைகளைக் கடல் கேட்டு முறைமுறையே இறை இறுக்கும்.

9. வயல் வழியே செல்வேன். வெள்ளைக் கோவணம் அணிந்து, வெள்ளைக் குட்டையைத் தலையில் சுற்றி உழ வர்கள் பணிசெய்வது கருத்தை ஈர்க்கும். அவர்களது விஞ்ஞானம் எனக்கு உதயமாகும். பலநிறப் பூக்கள் நகைபுரிந்து தங்கள் வரலாறுகளைச் சொல்லும். பல நிறக் கொடிகள் தங்கள் நிலைகளைத் தெரிவிக்கும்.

10. சோலையில் புகுவேன். மரங்கள் கூப்பிடும்; விருந்து வைக்கும். ஆலமர நிழலில் அமர்வேன். ஆல், 'என் விழுதைப் பார். அந்த அரசுக்கு இஃது உண்டா' என் னும். அரசு கண்ணிற்படும். 'யான் விழுதின்றி வானுற ஓங்கி நிற்கிறேன். என்னை மக்கள் சுற்றிச் செல்கிறார்கள். காண்' என்னும். 'வேம்பு என் நிழல்

நலஞ்செய்யும். என் பூவின் குணங்களைச் சொல்கிறேன்: வா' என்னும். அத்தி, நாகை, விளா, மா, வில்வம் முதலிய மரங்கள் விளியாமலிருக்குமோ? சிந்தனையில் அவைகளின் நுட்பங்கள் விளங்கும்.

11. **மலை** என்னை அடிக்கடி அழைக்கும். மலைமீது இவர்வேன்; ஓரிடத்தில் அமர்வேன்; மேலுங்கீழும் பார்ப்பேன். சுற்றுமுற்றும் பார்ப்பேன். மனம் அமைதி எய்தும். அமைதி பொருந்திய மனத்துடன் மலையை நோக்குவேன். 'என் அருமை மலையே! உன்னை அடைந்ததும் மனம் அமைதி யுறுவானேன்? உன் வரலாறென்னை? நீ எப்படி அமைந்தாய்? மக்கள் முதல் முதல் உன்னிடத்திலா தோன்றினர்கள்? உன்னிடத்தில் எப்படி அருவிகள் அணைந்தன? வண்டுகள் சூழ்ந்தன? மயில்கள் வந்தன? குயில்கள் கூடின? நீ இசை அரங்கா? மக்கள் உன்னை நாடி வருவானேன்? உன்னிடம் வந்து உலவுங் காற்று ஏதேனும் தனி இயல்புபெறுகிறதா? உன்மீது பொழியும் ஒளிக்கு ஏதேனும் தனிச் சிறப்புண்டா?' என்று கேட்பேன். மலை எளிதில்வாய் திறக்குமோ? மலையை முன்ன முன்ன வாய்மை தவழும்.

12. பறவைகள் பாடுகின்றன; ஆடுகின்றன. பாம்புகள்நடமாடுகின்றன. விலங்குகள் உலவுகின்றன. வண்டுகாள்! உங்களில் பாட்டு எப்படி அமைந்தது? மயில்காள்! உங்களிடம் நடம் எங்ஙனம் புகுந்தது? குயில்காள்! நீங்கள் இனிய குரலை எங்கிருந்து பெற்றீர்கள்! பாம்பே நல்ல பாம்பே! உன் படம் அழகாய் இருக்கிறதே! உன்னிடம் நஞ்சு இருப்பது உண்மையா? மானே! உன் விழியில் ஏன் மருட்சி திகழ்கிறது? புலியே! அருகே வா! உன்னைக் கண்டு உயிர்கள் ஏன் அஞ்சுகின்றன? இவைகளில் நெஞ்சம் ஒன்ற ஒன்ற பொருண்மை வெளியாகும்.

13. **பருவ நல்லாள்** எதிர்தோன்றுகிருள். 'நீ கார், கூதிர் முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் ஆகிய அறுவகையாக ஏன் பிரிந்து நிற்கிருய்? அங்ஙனம் நீ பிரியாவிடின் உலகம் நடைபெருதோ?' என்றதும்,

'என்னை நினைப்பாயாக' என்னும் ஒலி எழுகிறது. நினைக்க நினைக்க உண்மை உதிக்கும்.

14. மேகங்கள் உருண்டு திரண்டு ஓடி வருகின்றன. அவைகளைக்கண்டு,'மேகங்களே! உங்கட்குச் சூல் எப்படி உண்டாகிறது? நீங்கள் ஏன் ஒன்றோடொன்று முட்டிக் கொள்கிறீர்கள்? மின்னுகிறீர்கள்? உருமுகிறீர்கள்?' என்று கேட்டதும், அவைகள் மழை பொழிகின்றன. மழை, நுட்பத்தை உணர்த்தும்.

15. பெண் உலகு காட்சி யளிக்கிறது. அளித்ததும் 'பெண் அணங்கே! இயற்கைக் கூறுகள் நீயாகி நிற்ப தென்னை! அவைகள் எப்படி நீயாகப் பரிணமித்தன? இயற்கை அழகெலாம் உன்னிடத்தில் பொலிவ தென்ன? நீ பெண்ணா? அழகா? உன்பால் தாய்மை அமைவானேன்? என்னும் ஐயப்பாடுகள் என்னுள் எழு கின்றன. பெண்தெய்வம் புன்னகை புரிகிறது. அந் நகை ஐயப்பாடுகளைக் களையும்.

16. பெண் தெய்வத்தின் அருகே அழகிய குழந்தை நிற்கிறது. அதை அணைந்து 'கடவுள்நிலை உன்னிடத்தில் திகழ்கிறதென்று அறிஞர் கூறுவதன் நுட்பமென்னை' என்று கேட்கவாயெடுத்ததும், அது சிறுகை நீட்டுகிறது. 'நீ என்னைப் போலாகிப் பார்; உண்மை விளங்கும்' என்பது கை நீட்டியதன் பொருள் என்று கொள்வேன்.

## பயிற்சி

### வினாக்கள்

1. இயற்கையினிடம் கொண்டு செலுத்தும் வழிகள் யாவை?
2. இயற்கையின் உள்ளுறை எது? அதனை உணர்தல் எவ்வாறு?
3. இறையின் தன்மையும் நிலையும் யாவை?
4. இயற்கையினின்று பிறப்பவை எவை?
5. நாதம் காரணம்; மொழி காரியம்-பொருளை விளக்குக.
6. காவிய ஓவியங்களினால் உண்டான பயன் யாது?
7. இயற்கைக் கருவூலத்தின் தன்மை யாது?

8. இயற்கைக் கழகத்தின் ஆசிரியர்களிற் சிலரைக் கூறுக.
9. ஞாயிறினில் விளங்கும் எழு நிறங்கள் யாவை?
10. வேனிற்காலக் காட்சி எழுப்பும் கேள்விகள் யாவை?
11. கடலின் தன்மைகள் யாவை?
12. சோலைகள் கூறுவன யாவை?
13. மலையைக் கண்டவுடன் எழும் கருத்துக்கள் யாவை?
14. ஆறு பருவங்கள் யாவை?
15. பெண் தெய்வம் எவற்றைத் தோற்றுவிக்கின்றது?
16. கடவுள் நிலை எங்கு விளங்குகின்றது? எவ்வாறு?

இலக்கணம்

1. பறவைகள் பாடுகின்றன; ஆடுகின்றன. பாம்புகள் நடமாடுகின்றன. விலங்குகள் உலவுகின்றன. இவற்றை நான் காண்கிறேன். (இவற்றை ஒரே வாக்கியமாக்குக)
2. மலை என்னை அடிக்கடி அழைக்கும். மலைமீது இவர்வேன்; ஓரிடத்தில் அமர்வேன்; மேலுங்கீழும் பார்ப்பேன்; சுற்றுமுற்றும் பார்ப்பேன்; மனம் அமைதி எய்துவேன்—(ஒரே வாக்கியமாக்குக.)
3. தமிழே தெரியாத ஆங்கிலர் ஒருவர் யோகக் காட்சியால் திருமூலர் திருவாக்கின் பொருளை உணர்த்தியதை யான் பார்த்தேன்—இதனை ஐந்து சிறுவாக்கியங்களாகச் சிதைக்க.

கட்டுரையாக்கம்

1. அகிலம் ஒரு பெருங்கழகமாகக் காணப்படுகிறது. இதனை விரித்து ஒரு பாரா எழுது.
2. ஒரு மாலைநேரத்தை வருணித்து ஒரு பாரா எழுது.

## 10. யூலியஸ் சீசர்

சுவாமி விபுலாநந்தர், பி. எஸ் ஸி (லண்டன்)



ஸ்ரீ இராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த துறவியருள் ஒருவரான ஸ்ரீலஸ்ரீ சுவாமி விபுலாநந்தர் அவர்கள் முத்தமிழ் ஆராய்ச்சியாளர்களுள் தலைசிறந்து விளங்குபவராவார்கள். இவர்கள் இப்போது கொழும்பு நகரிலுள்ள இலங்கைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேராசிரியராக விளங்குகிறார்கள். இவர்களுடைய **மதங்க சூளாமணி** என்னும் நாடக ஆராய்ச்சி நூல் கற்றோர்களால் பெரிதும் மதிக்கப்படுவதொன்று.

உலக மகாகவிகளுள் ஒருவரான 'ஷேக்ஸ்பியர்' என்ற ஆங்கில நாடக வாசிரியரின் நாடகங்களுள் ஒன்முன **யூலியஸ் சீசர்** என்ற நாடகத்தின் நயமான பகுதிகளை இக்கட்டுரை காட்டும். இஃது சுவாமிகளால் **ஆங்கிலவாணி** என்ற தலைப்புடன் எழுதப்பெற்ற அழகிய கட்டுரையினின்று எடுக்கப்பெற்றுள்ளது. ஆங்கில ஆசிரியரின் சீரிய கருத்துக்களைச் சுவாமிகள் தமிழில் கையாண்டுள்ள நேர்மையை இதனிற் காணலாம்.

1. பலவகையிலும் ஆங்கிலநாடு பொலிவுற்ற காலத்திலே தான் **செகசிற்பியார்** (ஷேக்ஸ்பியர்) என்னும் சிறந்த நாடகக் கவி தோன்றினர். இவருடைய கவி வனப்பினை '**மதங்கசூளாமணி**' யென்னும் நூலிலே சற்று விரிவாகக் கூறியிருக்கின்றோம். **யூலியஸ்சீசர்** எனும் நாடகத்தின் ஒரு பகுதியின் மொழிபெயர்ப்பை ஈங்குத் தருகின்றோம். இந்நாடகத் தலைவராகிய யூலியஸ்சீசர் பராக்கிரமசாலி யென்றும் சேனைத் தலைவரென்றும் முன்னர்க் குறிப்பிடப்பட்டார். உரோமாபுரியில் வாழ்ந்த **காஷியஸ்** எனப் பெயரிய சேனைத்தலைவனொருவன் **கஸ்கா திரேபோணியஸ், லிகாறியஸ், டேசியஸ், சின்ன, சிம்பர்** என்பாரையும், நீதிமானும் யூலியஸ் சீசரது நண்பனுமாகிய **மார்க்கஸ் புரூட்டஸையுந்** தன்வயப்படுத்திப் பங்குனித் திங்களின் நடு நாளில், நண்பகலில், அத்தாணி மண்டபத்தில், யூலியஸ் சீசரது உயிரைக் கவர்வதற்கு ஏற்பாடு செய்தனன். குறித்த தினத்திற்கு முன்னளிரவில், விண்வீழ் கொள்ளிகளும், தூமகேதுக்களும் பலவகை உற்பாதங்களுந் தோன்றின. யூலியஸ் சீசரின் மனைவி **கல்பூர்ணியா** தீக்கனக்கண்டு அச்சமுற்றெழுந்து, புறத்தே நிகழுகின்ற உற்பாதங்களினல் உள்ளம் அவலித்துத் துயிலொழித்திருந்து, காலைப்பொழுது வந்ததும் கணவனது முன்னிலையை யடைந்து,

பேரிரவில் நடந்தவெலாம் பீழையினை விளக்கப்
பேதலிக்கும் உளச்சிறியேன் பேசுகின்ற மொழிகள்

ஆருயிர்க்குத் தலைவ! நின தருட்செவியில் வீழ்க,
அகத்திடையின் ிருந்திடுக, அவைபுகுத லொழிக,

எனக் குறையிரந்துவேண்டி நின்றனள். •

2. அதனைக்கேட்ட சீசர் புன்னகை புரிந்து,

அஞ்சினர்க்குச் சதமரணம், அஞ்சாத நெஞ்சத்(து)
ஆடவனுக்(கு) ஒருமரணம். அவனிமிசைப் பிறந்தோர்
துஞ்சுவர், என்றறிந்திருந்தும் சாதலுக்கு நடுங்கும்
துன்மதிமூடரைக்கண்டாற் புன்னகைசெய் பவன்யான்
இன்னலும்யா னும்பிறந்த தொருதினத்தில் அறிவாய்;
இளஞ்சிங்கக் குருளைகள்யாம்; யான்மூத்தோன் எனது
பின்வருவது இன்னல்எனப் பகைமன்னர் அறிவார்,
பேதுறல் பெண்ணணங்கே! யான் போய்வருதல்
[வேண்டும்.

எனக் கூறினர்.

3. இத்தருணத்தில் டேசியஸ் என்பவன் வந்து, அத்தாணி மண்டபத்திற் குழுமியிருந்த முதியோர் சீசரை அழைத்து வரும்படி சொல்லியதாகத் தெரிவித்தான். சீசர் முதலிலே மறுத்துப் பின்பு இசைந்து உடன் போயினர். வழியில் ஒரு சேவகன் ஒரு நிருபத்தைக் கொண்டுவந்து கொடுத்து ‘இது சீசருடைய சுகத்தைக் கோரியது, இதனையுடனே படித்தருளவேண்டும்’ எனச் சீசர் கையிற்கொடுத்தனன். ‘நல்லது நண்ப! சனங்களுடைய சுகத்தைக்கோரிய நிருபங்களைப் படித்த பின்பு இதனைப்படிக்கிறேன்’ என்று கூறிவிட்டுச் சீசர் அத்தாணி மண்டபத்தை நோக்கி நடந்தனர். ஆங்குச் சிம்பர் என்பவன் முற்பட்டுவந்து முழந்தாட்படியிட்டு நின்று, ‘மஹௌதாரிய மஹாப் பிரபுவே! ஏழையேனது விண்ணப்பத்திற்கிரங்கி, ஏழையேனது சகோதரனை மன்னித்தருளவேண்டும்,’ எனவேண்டிநின்றனன்.

4. சீசர் அவனை நோக்கித்,

தாழ்ந்து மென்மொழி யுரைத்திடேல், தரணியிற் பணிந்து
வீழ்ந்து நைபவர் பொய்யுரைக் கிரங்கிய வீணர்

சூழ்ந்து செய்தன துடைத்துப்பின் சோர்வினை யடைவார்
ஆழ்ந்து செய்வன செய்யும்யான் அவர்நெறி அணையேன் ;
அண்ணல் நீர்மையேன், பிழைசெயேன், அணுவளவேனும்
நண்ணும் நீதியிற் பிரிந்திடேன், நாயெனக் கதறிக்
கண்ணில் நீர்மிக நிலத்தினிற் புரள்வதாற் கருதும்
எண்ணம் முற்றுறும் என்னநீ எண்ணுவதிழிவே,

எனக் கூறச் சார்ந்து நின்ற மார்க்கஸ் புரூட்டஸ் சீசரை நோக்கி, 'ஐய! நான் இச்சகம் பேசுவேனல்லேன், தேவரீரது திருக்கரத்தை முத்தமிட்டேன், சிம்பரின் விண்ணபத்துக்கிரங்கி அவரது சகோதரனை விடுதலை செய்தல் வேண்டும்' என்றனன். சமீபத்தில் நின்ற காஷியஸ் சீசரை நோக்கி, 'மகிமை பொருந்திய சீசரே! மன்னிக்கவேண்டும்! உம்மிருதாளிணையினையும் பற்றினேன், சிம்பரின் சகோதரனை மன்னிக்கவேண்டும்,' என்றனன். சீசர் தம்மைச் சூழ்ந்துநின்று விண்ணப்பித்தோரைநோக்கி,

இரங்குதிர், என்ன இரக்கும் நீர்மையர்
தமைப்பிறர் இரக்கிற் றயைகாட் டுநரே ;
நும்போல் வேனெனின், நும்மொழிக்கு இசைவேன் ;
வானகம் மிளிரும் மீனினம் அனைத்தும்
தற்சூழ்ந் தசையத் தானசை வின்றி
நிலைபெறு துருவன் நிலைமைகண் டிலிரோ ?
வான்மீன் அனையர் மாநில மாந்தர்
துருவன் அனையன் ஒருவனிங் குளனால் ;
அவன்தான் யான், என அறிகுவீர், புகன்ற
மொழியிற் பிரியேன் ; பழியொடு படரேன் ;
மலைவீழ் வெய்தினும், மனம்வீழ் விலனே,

எனக்கூறினர். இதனைக்கேட்ட புரூட்டஸ் ஆதியோர் சீசரது பெருமிதவுரையைத் தற்பெருமையுரையென வெண்ணி, உடைவாளை உருவி அனைவரும் ஏகோபித்துச் சீசரை வெட்டினர்கள். 'நீயுமா புரூட்டஸ்' என்னும் உரையோடு சீசர் வீழ்ந்து மரணித்தனர்.

5. பினூத்தாக் (Plutarch) எனப் பெயரிய யவனபுரத்தறிஞர் இயற்றிய **வீரர்வாழ்க்கைச் சரிதங்கள்** என்னும்

நூலின் வழியாக அநேக சரித்திரங்களையும், ஆங்கில நாட்டு மன்னர் சரித்திரங்கள் பலவற்றையும் செகசிற்பியார் நாடகமாக்கி உலகிற்கு அளித்தார். ஆங்கிலமொழி உலகில் வழங்குங்காலம் வரையும் இப்பெருங் கவியின் பெயர் நின்று நிலவும். ஆங்கில நாடு பெருஞ்சிறப்புற்றிருந்த காலத்திலே, தோன்றிய செகசிற்பியாரைப் போலத் தமிழ்நாட்டு மன்னர் கடல் கடந்து சென்று பல நாடுகளிலும் தமது வெற்றிக்கொடி நாட்டிய காலத்திலே தோன்றிய கம்பநாடர், உலகுபுகழும் வனப்பு வாய்ந்த காப்பியத்தை வகுத்தளித்தார். வீரத்தையும், ஆண்மையையும், மக்கள் நீர்மையையும் சித்திரித்துக் காட்டும் வகையிலே இருபெருங் கவிஞரும் ஒத்தபான்மையர்; இருவர் நாவிலும் நின்று கவிதை சுரந்தளித்தவள் ஒருத்தியன்றோ?

## பயிற்சி

### வினாக்கள்

1. பின்வரும் சொற்களுக்குப் பொருள் கூறுக:— அத்தாணிமண்டபம், விண்வீழ்க்கொள்ளி, தூமகேது, உற்பாதம், அவலித்து, பீழை, அவனி, நிருபம், மஹௌதாரியம், இச்சகம்.
2. காஷியஸ் செய்த சூழ்ச்சி யாது?
3. கல்பூர்ணியா சீசரை வேண்டிக்கொண்டதென்ன?
4. 'துன்மதிமூடர்' என்று யாரைச் சீசர் கூறினர்?
5. சீசர் தன் மனைவியை எவ்வாறு தேற்றிச் சென்றனர்?
6. சீசர், சிம்பர் முறையீட்டுக்குக் கூறிய மறுமொழியாது?
7. சீசர், தம்மைச் சூழ்ந்து நின்று விண்ணப்பித்தோர்க்குக் கூறியவை யாவை?
8. துருவனைத் தனக்கு உவமையாகச் சீசர் எவ்வாறு கூறினர்?
9. சீசர் மரணம் எவ்வாறு உண்டாயிற்று?
10. செகசிற்பியாரை ஒத்த தமிழ்க் கவிஞர் யார்?

+

## இலக்கணம்

1. பின்வரும் சொற்களுக்குப் பிறவினை கூறுக:—

தோன்று, தா, செய்தனன், எழுந்து, விளை.

2. புரூடஸ் சீசரை நோக்கிக் கூறியவற்றை நேர்ப்பேச்சுக் குறி நீக்கி எழுதுக.

3. மூன்றுவது பாரா முதல் வாக்கியத்தை நேர்ப்பேச்சுக் குறியிட்டு எழுதுக.

4. முதல் பாராவின் கடைசி வாக்கியத்தில் அடைந்து, என்ற பகுதிவரையில் உள்ளவற்றை 5 சிறுவாக்கியங்களாகச் சிதைக்க.

## கட்டுரையாக்கம்

(1) சீசரின் குணதிசயங்களை மேற்கோள் காட்டிக் கூறுக.

(2) சீசர் சிம்பருக்குக் கூறியவற்றை நும் மொழிகளில் வரைக.

(3) சீசர் தம்மை விண்ணப்பித்தோருக்குக் கூறியவற்றை புரூட்டஸ் மொழிகளில் அமைக்க.

---

# 11. பெண்டிர் உரிமைநலம்

பேராசிரியர் S. சோமசுந்தர பாரதியார், எம்.ஏ., பி.எல்.

ஆங்கிலங் கற்ற தமிழ்ப் பேரறிஞர்களுள் திருவாளர் பாரதியார் அவர்கள் தலைசிறந்து விளங்குபவராவார்கள். அவர்கள் வரகவி



சுப்ரமணிய பாரதியாரின் இளமைத் தோழராவார்கள். அவர்கள் வக்கீல் தொழிலில் நெடுங்காலம் பழகியிருக்கிறார்கள்; அரசியல், சமூகம் ஆகிய துறைகளிலும் தொண்டாற்றி யிருக்கிறார்கள். தமிழில் சிறந்த ஆராய்ச்சி அறிவு வாய்ந்த அவர்கள் கம்பர், திருவள்ளுவர், தொல்காப்பியர் இவர்கள் இயற்றிய நூல்களைப் பற்றிப் பல கட்டுரைகளை எழுதியிருக்கிறார்கள். தாம் கண்ட உண்மைகளை அஞ்சாமல் எடுத்துரைக்கும் வன்மை அவர்களுக்குண்டு. 'மாரி வாயில்' என்ற காவியத்தை அவர்கள் இயற்றியுள்ளார்கள்.

இக்கட்டுரையில் 'பெண்டிர் உரிமைநல'த்தைப்பற்றி அவர்களுடைய ஆராய்ச்சி, படிப்பவரின் உள்ளத்திற்குப் பல புதிய கருத்துக்களைத் தோற்றுவிக்கும். அவர்களுடைய தமிழ் நடையின் தனிச்சிறப்பை இங்குக் காண்க.

### ஒத்த உரிமையைப் பேணுவதே தமிழ் முறை

1. நம்மவர் பெண்டிரைப் பெரிதும் சிறுமைப் படுத்துவதாயும், ஆடவரோடு ஒத்த உரிமையுடையராய பெண்பாலரை, நாம் உரிமைகளை மறுத்து மதியாமல் நடத்துவதால் நமது சமுதாய முன்னேற்றம் தடைப்படுவதாயும், நல்லெண்ணமும் நல் விருப்பமுமுடைய நண்பர் பலர் முறையிட்டு மன்றாடக் காண்கின்றோம். இது பெரிதும் கவனிக்க வேண்டிய தொன்றேயாகும். தமிழகத்தில், பெண்டிர் உரிமை இழந்து தம்மியல் நல வளர்ச்சி குன்றுவரேல், தமிழ்ச் சமுதாய வளமும் நலமும் குன்றுவது ஒருதலை. மகளிர் வளம்படாச் சமுதாய

வாழ்க்கை வளர்வதில்லை. இரு பாலவரும் ஒத்து வளம் பெருக்கி வாழும் சமுதாயந்தான் முன்னேற்ற மடையும். பண்டைத் தமிழ்ச் சரித வாயிலாயும், ஆன்ற தமிழ் முது நூல்களானும், தமிழர் தங்களுள் மகளிரைத் தாழ நடத்தியதாகக் கண்டிலம். ஆண் மக்களைப் போலவே, பெண்களையும் நன்கு மதித்து, நலங்கருதி வளர்த்து, இருபாலோரிடத்தும் ஒத்த உரிமையும் மதிப்பும் பேணி வந்த தமிழ் முதுமுறை தற்காலம் மாறியுள்ளதோ? சிறப்பும் சீரு மிறப்ப, நாம், பெண்டிர் உரிமை போற்றுங் கடமையைத் துறந்து, நமது சமுதாய நலம் குன்றத் தவறிழைப் போமா? குறை நம்மிற்காணில், நெற்றிக்கண் திறப்பினுங் குற்றம் குற்றமேயாமென்று, நெறி திறப்பாமல் அறம் பேசும் இயல்புடைய தமிழராய நாம், நம் பாற் கண்ட குறை யுணர்ந்து கடிந்தொதுக்க அஞ்ச மாட்டோம். ஆனால், நமது சமுதாய முறையிற் பிறர் சொல்லுங் குறைகளென்ன? அவை யனைத்துங் கடிந்து களையத்தகும் குற்றங்களேயோ? அன்றேல் சில குறையும், பல உண்மை தேரா நன் முறையுமா? என்பனவற்றை நாம் சிறிது ஆழச் சிந்திக்க வேண்டும்.

### சமத்துவமும் ஒருமையும்

2. முதலிற் பெண்டிரும் ஆடவரும் கொண்டாடும் உரிமைகளெல்லாம், சமத்துவங் கருதுவதொன்று; ஒருமை கருதுவதொன்று; ஆக அவை, இருவேறு நோக்கின் நின்று ஆராயக் கிடக்கும் உரிமை சமத்துவத்துக்கு, உரிமை யொருமை அல்லது உரிமை யொற்றுமை இன்றியமையாத தன்று. மகளிர்க்கு நம்மோடு சம உரிமையுண்டு. இதை மறுப்பவர் மிகச் சிலரேயாம். மக்கட் சமுதாயத்தில் அனைவருக்கும் சரியுரிமை இயற்கை முறை. ஆனால், ஒவ்வொருவரும் ஒரே படித்தான உரிமைத் துறை தேடுவது இயற்கைக்கும், சமுதாயப் பொது வாழ்க்கை நலத்துக்கும் பொருத்தமற்றதாகும். சமுதாய மக்கள் தத்தம் இயல்புக்கும் களன், துறை, காலங்களுக்கும் ஏற்றபடி பல முறைகளில் முயன்று வளம் பெருக்குவதாலே, சமுதாய நலம் வளரு

மன்றி, யாவரும் ஒரே படியின் நின்று ஒன்றையே விரும்பி விடாது மேற்கொண்டு வாழும் சமுதாயம் வளங் குன்றித் தாழாது சிறப்பதரிது. தத்தம் இயல்நலம் வளர்த்தலே மரபும் அறமுமாகும். அவரவர் இயல் நல வளர்ச்சிக்கு வேண்டியவாறு இடமும் துறையும் அமைப் பதே சமுதாய நோக்கமும் கடனுமாக வேண்டும். அத்த கைய இடம் துறைகள் அமையாவாறு இடைப்படும் தடைகளைத் தாழாது விலக்கியும், அவைகளை அனைவருக் கும் கிட்டுமாறு ஒல்லும் வாயெல்லாம் ஓவாது முயன் றமைத்தும் வரும் சமுதாயந்தான் சிறந்த வளம் படும். மற்றப்படி சரியுரிமையும், தத்தம் இயல் நலத்தை வளர்க் கும் முட்டில்-முயற்சிக்குக் குறையா இடனமைப்பும், ஏற்பட்டுள்ள சமுதாயத்தில், உரிமை யொருமை ஒவ் வொருவருக்கும் ஏற்படாதது குறையன்றென்பது மட்டு மில்லை; அவ்வாறு ஏற்படாமையே அழகும், அபிவிருத்தி வன்மைக்கு அறிகுறியு மாகும்.

**எத்துறையும் எத்தொழிலும் எல்லோர்க்கும் பொருந்தா**

3. எத்துறையும் எத்தொழிலும் எல்லோர்க்கும் பொருந்துமென்பது உண்மைக்கும் இயற்கைக்கும் முர ணுகும். பால் வேறுபட்ட பெண்டிர் திறம் நிற்க: ஆடவர் தம்முள்ளும், அனைவரும் எல்லாவற்றையும் மேற் கொள் ளல் ஏலா, இசையா, வீண் முயற்சியாகும். தத்தம் திறம், விருப்பம், துணை முதலிய கருதி, காலம் இடம் கருவியாதிகளைச் சிந்தித்து, வினையும் பயனுஞ் சீர் தூக்கி, ஏற்பன மேற்கொண்டு, இசைவில விலக்குவதே அறமும் அறிவு மாகும். மேற் கொள்ளுவன வெல்லாம் நன்மை தருவன வென்று அனைத்தையும் மேற்கொள்ளலாகா தாம். சமுதாய வாழ்வுக்கு இன்றியமையாதனவும் உதவு வனவுமான பல நூறு தொழிலெல்லாம் நல்லனவேயாம். எனின் அவை யாவற்றையும் யாரேனும் செய்ய விரும் புவதுண்டோ? விருப்பமும் திறனும் கொண்டு எத்தொழி லும் மேற்கொள்ளலாகாது. நீண்ட பயிற்சியும் நிலைத்த துணைச்சார்வுமின்றி, திட்டமும் செவ்வியும் எய்தொணுத தொழில் பலவாகலான், அவ்வவற்றிற்கு வேண்டி

யதும், உதவுவதும், பொருந்துவதுமான இயல் திறம், துணைவளம் பெற்றுள்ளனவே, அவ்வவற்றை மேற்கொள்ள வேண்டியதாகும். அதுபற்றியே தொழில் வேறுபட்ட மக்கள் தொகுதிகள் பலகூடிச் சமுதாயமாகி நின்று நிலைக்கக் காண்கிறோம். இவ்வாறு எவனும் எத்தொழிலையும் மேற்கொள்ள உரிமை கொண்டாடுவது பொருந்தாததோடு, தீப்பயன் தருவதாகவும் முடியக் கூடுமென்பது தெளியக் கிடப்பதால், பால் வேறுபட்ட பெண்டிர், தம்மியலுக்குப் பொருந்தா ஆடவர் வினைகள் அனைத்தையும் உரிமை கொண்டாடி மேற்கொள்ள முன் வருவரா? மேற்கொள்ளுவது நலந்தருமா? மெல்லியலாரை வன்கொடுந் தொழிலுரிமைகளாக்குவது ஆடவர்க்கடுக்குமா? பெண்டிர்க்குப் பொருந்தா வினையுரிமை தரவேண்டாச் சமுதாயத்தை அதுபற்றிக் குறை கூறலாகாதன்றே.

## தமிழ்ச் சொற்கள் அறிவிப்பன

4. மேனாட்டவரைப் போல வினையனைத்திலும் புருடரொடு புகுந்து விரவ விரும்பா நம் மடவார், வேறு சில ஆசிய, ஆபிரிக்க ஜாதியரிற் போலப் பால்பற்றி அவமதிக்கப்படுவதுமில்லை. இயலிலும், இயல் பற்றி வினைமையிலும், இயல் வினை காரணமாகச் சில உரிமைகளிலும் வேறுபாடு உளதேனும், தமிழ்ச் சமுதாயத்தில் ஆடவரோடு ஒப்புரிமை பெற்று மகளிர் ஒருங்கு மதிக்கப் படுவாரார்வர். பாலும் இயல்பும் பற்றி விதந்து வேறுபடும் துறைகளிலன்றி, மற்றைப் பொதுமை நுதலியன யாவற்றினும் நம்மில் இருபாலவரும் ஒருபடி நிற்கக் காண்போம். பெண்டிர்க்கு நாம் சமத்துவத்தை மறுப்பதில்லை. நம்மோடு அவர் பல பொதுத் துறைகளிலும் சரி நிலை நிற்பதோடு அமையாமல், சில தனித்துறைகளில் தலைமை பூண்டு மேம்படவும் காண்போம். ஒரு சமுதாய உணர்வு ஒழுக்கங்களை, அச்சமுதாய மொழியில் அடிப்பட்டு ஆன்ற வழக்கில் நிற்கும் செம்முது சொற்களால் நன்கு அறியலாகும். நெடுவழக்கின் நின்று அழியாச் சிறு சொற்கள், அவற்றின் பொருளும்

ஆட்சியும் காரண முறையால் நுணுகி ஆய்வாருக்கு, அம் மொழிகளை வழங்கும் சமுதாய ஒழுக்கமும் தொன்னிலையும் பொதிந்துள்ள சரிதச்சிறு பண்டாரங்களாகி உதவும். "தலைவன், தலைவி; அரசன், அரசி; பெருமான், பெருமாட்டி; கிழவன், (உரிமையாளன் என்ற பொருளில்) கிழவி; இறைவன், இறைவி; நம்பி, நங்கை" என்ற பலவிடத்தும் புருடரொடு பெண்டிர்க்கு ஒத்த நிலையுரிமை காண்போம். மதிக்கப்படும் புறத்துறைகளில் இருபாலவரும் சரியுரிமை உடையாரென்பதை அவ்வுரிமை விளக்கும் சொற்கள் ஒத்து அமைந்துள்ளதால் தெளியலாகும்.

5. இனி, மகளிர் சிறப்புரிமைக்கு இடமாய துறைகளில் வழங்கும் சில சொற்களை ஆராய்வோம். மனைமாண்பு சிறக்குமாறு அகத்துறைகளில் தலைமை அதிகாரம் உடையார் பெண்டிர் என்பதும், மனையறத் தலைமை உரிமை அவர் மேற்றேயென்பதும், 'மனைவி,' 'இல்லாள்' என்னும் தொல்லைத் தமிழ் மொழிகளுக்கு நேரான ஆண்பால் வழக்கின்மையொன்றே விளக்கும். மனையாட்சிக்கு உரியாள் - இல்லத் துறைகளில் இறைமைக்கு உரியாள் - என்னும் பொருள்பட, "மனைவி, இல்லாள்" என வழங்கும் தமிழ்ச் சொற்களுக்குச் சரியாக, 'மனைவன், இல்லான்' என வழங்கும் முறை கிடையாது. இப்பொருளில் ஆண்பால் ஒரு சொல் வழக்கின்மை நோக்கின், அவ்வுரிமை மகளிர்க்கே சிறப்பாதலும் ஆடவர்க்கு அதில் ஒப்புரிமை கூட இன்மையுமே, தமிழர் முதுவழக்காதலான், இவ்வாறு சொற்கள் அமைந்துள்ளன என்பதன்றிப் பிறிது காரணம் காண்பது அரிது. இயலும் பொருத்தமும் நோக்கி, இவ்வாறு அகத்துறையில் முதல் உரிமை மகளிர்க்காக்கிய தமிழர், வன்மையும் துன்பமும் செறிந்த புறத்துறையிற் சிறந்த போர் முதலிய சிலவற்றுள் முதற்கடமை கொளற்குரியார் ஆடவரே என வகுத்து, அம்முறை விரும்பி மேற்கொண்டு ஒழுகியுள்ளார் என்பதையும் அவர் மொழியில் வழங்கும், 'செம்மல்', 'பொரு

நன்', 'செருநன்' முதலிய சொற்களான் அறியலாகும். இச்சொற்களுக்குச் சரியான, போர்த்தொழில் உரிமையைப் பெண்டிர் பாலாக்கும் பொருளுடைய பெண்பால் ஒரு சொற்கள் தமிழ்வழக்கில் இன்மை தெளிக. மெல்லியலார்க்குச் சில புறத்துறையில் சரியுரிமை நேராத் தமிழ்ச் சமுதாயத்தில் ஆடவரைச், சிறப்புரிமை அவர் தன்மைக்குப் பொருத்தமான அகத் துறைகளில் அமைந்துள்ளதைக் காணுங்கால், சமுதாய வாழ்க்கையில் மகளிர்க்கொத்த மதிப்பு தராத் தவறுடையார் தமிழரென்பது எப்படிக் கூடும்?

### பொது உரிமைகள்

6. அன்றியும், மிகச் சில துறைகளில் மட்டும் இப்படிப் பாலும் இயலும் பற்றிச் சிறிது உரிமை வேறுபாடு இருபாலவர்க்கும் அமைத்து வைத்தாலும், முக்கிய வேறுபாடுகள் வேண்டாப் பல பொதுநிலைத் துறைகளிலும் இருபாலவர்க்கும் சரியுரிமை உண்மையே வற்புறுத்தப்படுகின்றது. 'வருந்திப் பொருளீட்டல் ஆடவர்க்கும், மனையாட்சி திருந்த நிலைநிறுத்தல் மடவார்க்கும் சிறப்புரிமை' என வகுத்தமைந்த தமிழ்ச் சமுதாயத்தில், மற்றைப் பொதுநிலையில், ஒத்த மதிப்பும் சரியுரிமையும் ஆடவரைப் போலவே பெண்டிர்க்குமுண்டு. பொருளுடைமை, கல்வி, அறிவு, மணமுறை, தெய்வவழிபாடுகளில் எல்லாம் இருபாலார்களுக்குள்ளும் உரிமை வேறுபாடு கிடையாது. தொன்றுதொட்டு நம்மவருள், மடவார் பொருளுரிமை பெற்று வந்திருக்கின்றனர். ஒளவையாரும், ஆண்டாளும், நச்செள்ளை காக்கை பாடினிமாரன்ன பல பெரும் பாவலரும் கல்விக்களஞ்சியங்களாகச் சங்கமேறி வீற்றிருந்தும், மன்னர் மன்றங்களில் மதிக்கப்பெற்றும் கல்வி நிலயங்களைக் கவர்ந்திருக்கின்றனர். காரைக்காலம்மையார் போலச் சமயநெறி சிறக்க, பக்திமுறை தழைக்கப் பாடிய பெண்டிரும் பலருண்டு. அரசியல் உரிமைகளிலுங் கூடக் குறை சுமத்தப்பட்டதில்லை. ஏற்புழி இறைமை வகித்து, முறை புரிந்த முதுக்குறைவுடைய பெண்டிரும் சிலரல்லர்.

மதுரை நாயகியான தடாதகைப் பிராட்டியும், புகழேந்தி பாடிய அல்லியும், நமக்கு அண்மைக் காலத்தில் அரசு நடத்திய மங்கம்மையும் போதிய உதாரணமாம்.

## பயிற்சி

### வினாக்கள்

1. பின் வரும் சொற்றொடர்களைப் பொருள் விளங்க நும் வாக்கியங்களில் விளக்க :—ஒருதலை. இன்றியமையாததன்று. ஒல்லும் வாயெல்லாம். முட்டில்-முயற்சி. துணைச்சார்வு.

2. நெற்றிக்கண் திறப்பினும் குற்றம் குற்றமேயாம்—இதற்குரிய வரலாறு யாது ?

3. சமத்துவம் கருதுவது ; ஒருமை கருதுவது - இவை இரண்டிற்குமுள்ள வேற்றுமைகள் யாவை ?

4. சமுதாயம் இயல்நல வளர்ச்சிக்குச் செய்யக்கூடிய நன்மை யாது ?

5. புருடரோடு பெண்டிர்க்கு ஒத்த நிலையுரிமையுண்டென்பதைக் காட்டும் சொற்கள் யாவை ?

6. ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் உள்ள தனி இயல்புகளைத் தமிழ்ச் சொற்கள் புலப்படுத்துவது எங்ஙனம் ?

7. இருபாலார்க்கும் உள்ள பொது உரிமைகள் யாவை ?

### இலக்கணம்

1. தொழிற் பெயர் வினையாலணையும் பெயர்களுக்குள்ள வேறுபாடுகள் யாவை ? பின் வருவன இவற்றுள் எவ்வகையைச் சாரும் ? அமைப்பு. குறைந்தவர். வளர்த்தல். நல்லவன். முயற்சி. காண்பவர்.
2. பின் வருவனவற்றிற்குத் தொடரிலக்கணங் கூறுக :—

அறிகுறி. இயல்நலம். நூறுதொழில். துணைவளம். தீப்பயன். புறத்துறை.

### கட்டுரையாக்கம்

புருடர்க்கும் பெண்டிர்க்கும் ஒத்த உரிமை தகுமா என்பதைக்குறித்து இருவர் வாதம் புரிவதுபோல் ஒரு பக்கத்தில் எழுதுக.

## 12. போலிப் பக்தர்

### மகாமகோபாத்யாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்

மகாமகோபாத்யாய, பண்டிதமணி, முதுபெரும் புலவர் திருவாளர் மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் இன்று தமிழ்ப் புலவருலகில் தலைமை சிறந்து விளங்குபவராவர். இவர்கள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகத் திகழ்ந்து இப்பொழுது அக்கழகத்திலேயே தமிழ் ஆராய்ச்சிக் கழகத்துக்குத் தலைவராக அமர்ந்துள்ளார்கள். இவர்கள் தமிழிலுள்ள சமய நூல்களையும் இலக்கிய நூல்களையும் துருவி ஆராய்ந்து அவற்றின் திட்பநுட்பங்களை எடுத்துரைக்கும் ஆற்றலை மிகுதியாக பெற்றுள்ளார்கள். இவருடைய சொற்பொழிவுகள் கேட்போர் உள்ளத்துக்குப் பெருவிருந்துகளாகும். வடமொழியிலும் இவர்களுக்குச் சிறந்த பாண்டித்தியம் உண்டு. இவரைக் 'காவியக்கற்பகம்' என்று ஒரு பெரியார் பாராட்டியுள்ளது மிகப் பொருத்தமானதே.



'போலிப் பக்தர்' என்ற இவர்களது இக்கதை உலகில் நாம் சாதாரணமாகக் கண்டுவரும் ஒருவகை மோசடி வியாபாரத்தைப் பற்றியதே. ஆனுல் இக்கதை இவர்களுடைய கையில் இலக்கியச் சுவை பெற்றுவிட்டது. போலிப் பக்தர் உருவம் நம் முன்னே காணப்படுகிறது. அவர் பேச்சு மிகுந்த நகைப்பையும் வியப்பையும் தருகின்றது. அவ்வுண்மையை இதனைப் படித்துக் கண்டு கொள்க. ஆசிரியருடைய நகைச்சுவையையும் காண்க.

1. பதினைந்து ஆண்டுகளுக்குமுன் என் அனுபவத்தில் நிகழ்ந்த ஒரு செய்தியை இங்கே எழுத முற்படுகின்றேன்.

2. என் பிறப்பிட மாகிய மகிபாலன் பட்டியில் இப்பொழுது யான் குடியிருந்து வரும் இடத்தில் புதியமனை அமைத்தற்கு முன் ஒரு பக்கத்தில் சிறிய ஓட்டுக் கட்டிடமும் அதனை அடுத்துத் தென்னங்கீற்றுல் வேயப்பட்ட கொட்டகை ஒன்றும் இருந்தன. இக்கொட்டகையின்

எதிரே காற்றோட்டத்திற்கு வசதியான நல்ல வெளிநிலம் உண்டு. எல்லாவற்றையும் உள்ளடக்கிச் சுற்றுச் சுவர் எடுக்கப்பட்டிருந்தது. கீற்றுக் கொட்டகை வெளிச்சமும் காற்றோட்டமும் உடையது. நல்ல நூல்களைப் படிப்பதற்கும், புதிய நூல்களை எழுதுவதற்கும் அக்கொட்டகை எனக்கு நல்லிடமாக அமைந்திருந்தது.

3. ஒரு நாள் காலை, பத்துமணி யளவில் அக்கொட்டகையில் ஒரு நாற்காலியில் யான் இருந்து வழக்கம் போல் படித்துக்கொண் டிருந்தேன். அப்பொழுது பக்த வேடம் பூண்ட ஒருவர் அங்கே வந்தார். அவர் சற்றுப் பருத்து நீண்ட உடம்பும், கருமை செம்மை கலந்தபொது நிறமும்,நன்றாக வெளுத்த உடையும் திருநீறு சண்ணித்த மேனியும் உருத்திராக்க மணிக் கண்டிகையும், சுத்தமாகத் தேய்த்துக் கழுவப்பட்ட பற்களும் உடையவராகக் காணப்பட்டார். அவர் வருவதற்குச் சிறிதுநேரம் முன்னரே நீராடிக்கோலம் புனைந்தவர் என்பது அறிந்தேன். இந்நிலையில் அவர் என்முன் சமீபத்தில் வந்து கை குவித்து, "முருகா! முருகா!" என்று சொல்லிக்கொண்டு கண்களைப் பெரிதும் முகிழ்த்தவண்ணமாக நின்றார். அவர் இயல்பை யான் விரைவில் அறியமுடியாமையால் யானும் எழுந்து நின்று கைகுவித்து, "பெரியவர்கள் இருக்கவேண்டும்" என்றேன். யான் பலமுறை கூறியும் அவர் அமரவில்லை. வரவரப் பக்தியின் மேலீட்டால் அவர் முகம் ஒரு வகையான வேற்றுமை அடைந்தது. கண்களில் நீர்த்துளி ததும்பியது. பரவசமாக நின்ற அவர் நிலையைக்கண்டதும் என் உள்ளமும் ஒரு வகை மாறுதலடைந்து நெகிழ்ந்து விட்டது. "ஆ! ஆ! பெரியவர்கள் இயல்பிருந்தவாறு என்னே! அருள்கூர்ந்து இருந்து கட்டளையிட வேண்டும்" என்றேன். மீண்டும் பல முறை வேண்டிக்கொண்டதன்மேல் அவர் என் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டனர்; எதிரிலிருந்த மற்றொரு நாற்காலியில் அமர்ந்தனர்.

4. "முருகா! என்ன பக்தி! என்ன காட்சி! ஆ! ஆ! அனுக்கிரகிக்க வேண்டும்" என்றேன். தென்முகக்

கடவுள் சின்முத்திரை போலக் கையை அமைத்துக் காட்டிச் சற்று நேரஞ்சென்ற பின் வாய்திறந்து பேச லாயினர். அப்பேச்சுக்கள் அவர் நெஞ்சத்தை வெளிப் படுத்தின. "முருகா! எந்தப்பயனையும் கருதி வந்ததில்லை; 'அன்பனைத் தரிசித்துவா' என்ற முருகன் கட்டளையை மேற்கொண்டு இவன் வந்தான்," என்றார். இது கேட் டதும், "எத்தனையோ அன்பர்கள் இருக்க எளியோ னாகிய என்னைப்பற்றி முருகன் கட்டளையிட நேர்ந்தது என் பாக்கியம்!" என்று கூறி, "மேலும் உத்தரவாக வேண்டும்" என்றேன். "சற்றுப் பொறுக்க" என்னும் குறிப்பிற் கை யமைத்துக் காட்டி மௌன நிலை மேற் கொண்டு பின், "முருகா! முருகா!" என்றனர். "தயை செய்யவேண்டும், முருகா!" என்றேன். "இன்று மாலை முருகன் கட்டளை தெரிவிக்கப்படும்" என்றனர். அதன் மேல் அவருக்கு ஓர் அந்தணர் வீட்டில் உணவுவசதி செய்வித்தேன்.

5. உண்டு உறங்கி எழுந்து மீண்டும் கோலங் கொண்டு மாலை ஐந்து மணிக்கு வந்து காட்சியளித்தார். அவ்வமயம் என்னிடமிருந்த வடமொழிப் புலவர் அவர் பேச்சுக்கு இடையூறாக உள்ளார் என்பதை அவர் குறிப் பிற் கண்டு சற்று விலகியிருக்கச் செய்தேன். தனித்த நிலையில் முருகனார் என்னுடன் பேசத்தொடங்கினார். "முருகா! முருகா! இவனிருக்கும் இடம் இராமநாத புரத்துக்குச் சமீபமுள்ள ஒரு கிராமம். நீண்ட நாளாக இவன் எண்ணிய தொன்று: யாரிடமும் இரவாமல் முரு கனுக்கு ஒரு கோயில் எடுக்கவேண்டு மென்பது. அப் படியே இவன் கைப்பொருள் கொண்டுபோய் ரூபாய் ஐயாயிரம் வரை செலவிட்டுத் திருப்பணி நடந்தது. மேற் பொருளின்மையால் பாதியளவில் நிறுத்தப் பட்டது. இரந்து பொருள் பெறல் கூடாதென்பதால் முருகன் மேல் பொறுப்பேற்று இருந்தான். அவ்வமயம், ஒரு நாளிரவில் கோடிசூரியப் பிரகாசமாக ஆறுமுகமும் பன்னிருகையும் வள்ளி தெய்வயானை உடனாக மயில்வாக னத்தில் முருகன் இவன்முன் எழுந்தருளிவந்து, 'கவலைப்

படாதே' என்று கையமைத்து அருள்செய்து, 'எனக்கு ஆலயமெடுக்க இரந்து, பொருள் பெறுதல் கூடாதென்னும் உன் விரதத்தைப் பாராட்டுகிறேன். உன்னைப் போல் என்பால் அன்பன் ஒருவன் உளன்; அவன் பொருள் உன்பொருளே; வேருக நினைக்கவேண்டாம். நாளையே மகிபாலன்பட்டிக்குப்போய் அன்பன் கதிரேசனைக்கண்டு என் கட்டளையைத்தெரிவி; 5,000 ரூபாய் தருவான்; பெற்றுவந்து திருப்பணியை நிறைவேற்று' என்று கட்டளை பிறந்தது. அதனைத் தாங்கித்தெரிவிக்கும் அவ்வளவே என் கடமை" என்றார்.

6. இதைக் கேட்டதும் எனக்கு என்று மில்லாத ஆனந்தம் பொங்கியது. புகைமுற்றுக் கண்ணீர்ததும்ப, "எவ்வளவோ அன்பர்களிருக்க இச்சிறியேனைப் பொருட்படுத்தி முருகன் கட்டளையிட்ட கருணையை என்னென்பேன்! ஆ முருகா! சிறந்த இப்புண்ணியச் செயலுக்கு என்னை ஆளாக்க நினைத்த நின் அருட்செயலை எங்ஙனம் பாராட்டுவேன்! முருகா! முருகா!" என்று யானும் கூறினேன். என் செயல் அவருக்கு அதிக நம்பிக்கையை உண்டுபண்ணியது. மேலும் யான் அவரை நோக்கி, "முருகன் ஆணைப்படி நடந்து கொள்வேன்; சிறியேனாகிய என்னைப் பொருட்படுத்தித் தங்கள் கனவில் எழுந்தருளிச்செய்த கட்டளையைப் பற்றி, முருகன் சிறியேன் கனவிலும் ஒரு சிறிது அருள்செய்யலாகாதா? முருகன் அருட்கு யான் பாத்திரன் அல்லனோ? நெடுந் தூரத்திலிருந்து தங்களை வரச்செய்த முருகன் சிறியேன் கனவிலும் வராதிருப்பானா? இன்று இரவில் அப்பெருமான் காட்சி யருளாமல் இரான், நாளைக்காலையில் கட்டளைப்படி நடந்துகொள்வேன்" என்றேன்.

7. அவருக்கு ஒரு பால் ஐயமும், மற்றொருபால் நெகிழ்ந்த என்னியல்புகருதி நம்பிக்கையும் உண்டாயின. உடனே, "முருகா! அப்படியே செய்யட்டும்" என்று கூறி, இரவு உணவுக்குச் சென்றார். உண்டு, ஒரு பள்ளிக்கூடத்தில் உறங்கி மற்றநாள் காலையில் எழுந்து நீராடி முதல்நாட் கோலத்திலும் சற்று விசேட

மாகப்புனைந்து கொண்டு குறிப்பிட்டபடி காலை ஒன்பது மணிக்கு என்னிடம்வந்து, "முருகா! முருகா!" என்று கூறிக் கைகூப்பி நின்றார்.

8. யான் அவர் வரவு கருதிக் காலையில் நீராடித் திருவெண்ணீறணிந்து எதிர் நோக்கி முகமலர்ச்சியுடன் இருந்தேன். என் முகப்பொலிவைக் கண்டதும் அவர் ஐயம் ஒழிந்து அன்பின் முருகிய நிலையைப் புலப்படுத்தி, "முருகா! முருகா!" என்றனர்.

9. யான், "முருகன் திருவருட் பெருக்கை என்னென்பேன்! வேண்டுவோர் வேண்டியதேயன்றி மும்மடங்கும் உதவும் வள்ளல் முருகனே" என்று பாராட்டிக்கொண்டு, "தங்கள் அதி தீவிர பக்தி காரணமாகச் சிறியேனுக்கும் முருகன் காட்சி யளித்தான். என்ன தோற்றம்! என்ன கோலம்! பேரொளிப் பிழம்பு! நடு நிசியில், நீலப்பறவையின் மேல் நேரிழையார் தம்மோடும் எழுந்தருளி அனுக்கிரகித்தான்" என்றேன். அடங்கா மகிழ்ச்சியடைந்தனர். அந்நிலையில் அவர் குறிப்பு, தாம் கருதிய ஐயாயிரம் முழுதும் வரக்கூடுமென்னும் துணிவைப் புலப்படுத்தி நின்றது. அது கண்டு யான், "அருள் வள்ளலாகிய முருகன் யாம் வேண்டிய அளவிலன்றி மும்மடங்கு, அஃதாவது பதினையாயிர ரூபாய்க்கு வழி காட்டினர். ஓர் ஐயாயிரம் அவர்க்கு நீங்கள் எடுக்கும் கோயிலுக்கும், மற்றோர் ஐயாயிரம் முருகனை அக்கோயிலில் பிரதிட்டை செய்தபின் நித்திய வழிபாட்டிற்குமாகத் தங்களிடம் தந்துவிடும்படியும், மற்றோர் ஐயாயிரம் தங்களைப்போல் இன்னும் இத்தகைய அறத்தில் ஈடுபட்டுவரும் அன்பர்களுக்கு உதவிபுரிதற் பொருட்டு யான் வைத்துக்கொள்ளும்படியும் குறிப்பிட்டருளினர். இவ்வருளிச் செயலைக் கேட்டதும், 'ஆண்டவனே! முருகா! கருணை வள்ளலே! நும் கட்டளைப்படி நடக்கும் கடப்பாடுடையேன் ஆயினும், தற்சமயம் இவ்வளவு பெரும் பொருட்கு என்னிடம் வழியில்லையே! என் செய்வேன்! நும் கட்டளையையும், அவர் வேண்டுகோளை

யும் எவ்வாறு நிறைவேற்றவல்லேன்?' என்று கவலை தோன்றக் கேட்டேன். என்கவலைக் குறிப்பை உணர்ந்த முருகன் அதற்கும் வழி கூறி அருளினன்,'' என்றேன்.

10. இச்சொற்களைக் கேட்டதும் அவர் மனம் உவகையுற்ற குறிப்பை முகத்தில் உணர்ந்தேன். அவர் மிகப் பணிவாக, "முருகா! எனக்கு நீ இட்ட கட்டளையை, அன்பரிடம் தெரிவித்த பேரருளை என்னென்பேன்!'' என்று சொல்லிவிட்டு என்னை நோக்கி மெல்ல, "முருகன் பொருள் பெறுவதற்கு வழிகாட்டாமல் இருப்பானு? யான் தெரிந்து கொள்ளலாமா?'' என்றனர்.

11. "முருகனுடைய அருளுரை மறையாகப் போற்றிப் பேணத்தக்கது. ஆயினும், நம்மிருவர் நெஞ்சமும் ஒன்ருதலின் பொருள் பெறுவதற்கு முருகன் காட்டிய வழியைத் தங்களிடம் தெரிவிப்பதில் என்ன தடை?'' என்று சொல்லிவிட்டு யான் இருந்த கீற்றுக்கொட்டகைக்கு எதிரேயுள்ள வெளி நிலத்தின் வடபால் சுற்றுச் சுவரைக் குறிப்பிட்டு, அதனை அடுத்து நிற்கும் ஒரு வெள்வேல் மரத்தைக் காட்டினேன். பார்த்தார். ஒன்றுந் தோன்றவில்லையே என்ற அவர் குறிப்பை உணர்ந்து மேலுங் கூறினேன்; "வெள்வேல், முருகனுக்கு மிகவும் உவந்தது; ஏனெனில், முருகன் கையில் வைத்திருப்பதும் வெள்வேல் ஆதலால் அப்பெயருடைய இதனிடத்தும் அவருக்கு விருப்பம் உண்டு. பொருள் பெறுவதற்கு வழிவினவிய எனக்கு முருகன் அவ்வெள்வேல் மரத்தைக் காட்டி அதனடியிலிருந்து கீழ்பால் மூன்று கஜ தூரத்தைக் குறிப்பிட்டு அவ்விடத்தை நடுவாகக் கொண்டு ஒரு கஜ தூரம் வைத்து மூன்று கஜ ஆழமாக நிலத்தை வெட்டித் தோண்டிப் பார்க்கும்படியும், 'அங்கே குறித்த பதினையாயிர ரூபாய்க்குத் தங்கம் இருக்கும்; எடுத்து மேற்காட்டியபடி பயன்படுத்திக்கொள்ளும்' என்றும் அருளிச்செய்தனன்'' என்றேன்.

12. இது கேட்டதும் அவர் முகத்தில் மிக விரைவில் மகிழ்ச்சிக்குறி மாறிச் சிறிது வருத்தக் குறிப்புத்

தோன்றிற்று. அதன்மேல், "ஐயுறவேண்டாம்; நம்மிருவர்க்கும் செய்த கட்டளை பொய்படுமா? ஏன் தாமதம்? அக்குழி வெட்டுதலாகிய செயல் நம் மிருவரையும் பொறுத்தது; முருகன் கட்டளையும் அப்படியே ஆதலால் நாம் இருவரும் சேர்ந்து இன்றிரவு ஊரடங்கியபின் அவ்வருட்செயலை மேற்கொள்ளுவோம்" என்றேன்.

13. அவர் தாழ்ந்த குரலில் "செய்யலாம்; ஒரு சமயம் அக்குழியில் பொருள் காணப்படாதுபோனால் என் செய்யலாம்?" என்றார்.

"இப்படியும் நினைக்கலாமா! நெடுந்தூரத்திலிருந்த தங்களை இத்துணை தூரம் வரச்செய்து நம்மிருவர் கனவிலும் மனைவிமாருடன் மயிலில் எழுந்தருளிவந்து உறுதியாக ஓரிடத்தைக் காட்டிப் பேரருள் புரிந்த முருகன் அருட்செயலில் நாம் ஐயுறுவோமாயின், அது மகாபாதகமாகுமே" என்று சொல்லிவிட்டு, "தாங்கள் நினைப்பதுபோலவே என் அறியாமையால் யானும் ஐயுற்று, 'அக்குழியில் குறித்த பொருள் இல்லையானால் என் செய்வோம்? ஆண்டவனே முருகா! அருள்க' என்றேன். அதற்கும் முருகன் சினவாமல், வெறாமல், முகமலர்ச்சியுடன் புன்முறுவல் பூத்த விடையருளினன். ஆ! ஆ! என்ன கருணை! கலியுக வரதனென்பதை அவ்வமயம் உணர்ந்து அடங்காப் பேருவகை பூத்தேன்" என்றேன்.

14. இச்செய்தியைக் கேட்டதும் குழி தோண்டாமலே கருதிய காரியத்தை முடித்து விடலாமென்றோ அல்லது தோண்டினாலும் முயற்சிக்குத் தக்க பயன் அடையலாமென்றோ அவர் நினைந்து ஒரு வகையில் ஆறுதல் அடைந்து, "நீங்கள் ஐயமுற்றுக் கேட்டதற்கு முருகன் என்ன அருள் புரிந்தனன்? முருகா! எப்படியும் முடிவில் முருகனருள் சிறந்த பயனை விளைக்காமல் போகுமா? தெரிவிக்கவேண்டும்" என்று விரைந்தனர்.

15. அவர் அவாவின் விரைவை நோக்கி இன்னும் தாழ்த்தல் தருமம் ஆகாதென்று நினைந்து அவரை

நோக்கி மிக்க மகிழ்ச்சியோடு, "ஐய! அக்குழியைக் குறிப்பிட்டபடி மூன்று கஜ ஆழம் குறையாமல் தோண்டியபின் பொருள் யாதும் இல்லையானால் அப்பொருள் பெறவந்த என் அன்பனை ஜீவன் முக்திக்குரியனாக ஏற்று உயிரோடு அக்குழியில் இறக்கி முறைப்படி சமாதிக்கிரியைகளை முடித்துக் கோயில் எடுத்து உன் கையாலே பூசித்து வரவேண்டும் என்று முடிவாக மேல் எதுவும் கேளாதபடி முருகன் அருளுடன் கட்டளையிட்டுள்ளான். அக்கட்டளையைச் சிரமேலேற்று நடத்தும் கடப்பாடுடையேன். தாங்களும் ஐயுருமனும், பின்வாங்காமனும் அங்கீரிக்கவேண்டும்" என்றேன்.

16. இம் முடிவைக் கேட்டதும் அவர் முகம் மிகவும் வேறுபட்டு ஏதும் பேசாமல் நின்றார். "யோசிக்க வேண்டாம்; வெள்வேல் தல விருக்ஷமாகக் கோயில் கொண்டு எழுந்தருளும் இப்பேறு யாருக்குக் கிடைக்கும்? இப்பொழுது போய்ப் பகலுணவுகொண்டு மாலைப் பொழுதில் வரலாம்" என்றேன். மௌனமாக நடந்து சென்றார். மாலையில் வந்திலர். உணவு கொள்ளும் இடத்தில் விசாரிக்கச் செய்தேன். பகலுணவுக்கே வரவில்லை என்றும், தெற்கு நோக்கிச் சாலை வழியே விரைவாக நடந்து சென்றதாகவும் கண்டோர் கூறினர். ஆ! வேட்டியும் தாழ்வடமும் வெண்ணீறும் வெண்பலும் காட்டி மெய் முருகனைப் பொய் முருகனாக எண்ணி நடித்த போலிப்பக்தர் செயலோடு பொருந்திய உலகியல் இருந்தவாறு என்னே!

## பயிற்சி

### வினாக்கள்

1. செட்டியாரவர்களின் வாழ்க்கையைப்பற்றிய குறிப்புக்கள் இப்பகுதியால் தெரிவன யாவை?
2. போலிப் பக்தரின் கோலத்தைக் கூறுக.
3. தன்னைப் படர்க்கையாக வைத்து அவர் பேசியதேன்?
4. தம்மை நம்பும்படி அவர் செய்த பாசாங்குகள் யாவை?

5. ஐயமும் நம்பிக்கையும் அவருக்கு எப்பொழுது, ஏன் உண்டாயின?

6. 'நாம் இருவரும் சேர்ந்து இன்றிரவு ஊரடங்கிய பின் அவ்வருட்செயலை மேற்கொள்வோம்'—அவ்வருட்செயல் யாது?

7. செட்டியார் செய்த தந்திரம் யாது?

### இலக்கணம்

1. பின் வரும் வாக்கியங்களைச் செய்வினை வாக்கியங்களாக மாற்றுக:—

(1) அப்பேச்சுக்கள் அவர் நெஞ்சத்தை வெளிப் படுத்தின.

(2) 'இன்று மாலை முருகன் கட்டளை தெரிவிக்கப் படும்' என்றனர்.

2. 6-ஆவது பாராவிலுள்ள வாக்கியங்களை நேர்ப்பேச்சுக் குறிகளை நீக்கி மாற்றி அமைக்க.

### கட்டுரையாக்கம்

1. இக்கதையை ஒரு நாடகமாக்கி எழுதுக.

2. இதைப்போல மற்றொரு வேடதாரியின் கதையொன்று நிறுவுக.

## 13. அணுவைக் காணுதல்

டி. பி. நவநீதகிருஷ்ணன், M.A.

திருவாளர் டி. பி. நவநீதகிருஷ்ணனார் எம்.ஏ., அவர்கள் இப்பொழுது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இரஸாயன சாஸ்திர விரிவுரையாளராவார்கள். அவர்கள் பல்வகை அறிவியற்கலைகளிலும் தேர்ச்சிபெற்றிருப்பதோடு தமிழில் சிறந்த கட்டுரைகள் எழுதும் வன்மையும் பெற்று விளங்குகிறார்கள். சமீபத்தில் உலகத்தைத் திடுக்கிடச்செய்து வரும் அணுவின் தன்மைகளையும் ஆற்றல்களையும் இக்கட்டுரையில் அவர்கள் விளக்கி யிருக்கிறார்கள். அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பத்திரிகையில் இது வெளிவந்தது. அணுவின் தத்துவத்தை அறிய இஃதோர் அரிய முகவுரையாகும்.

1. அணுக்களைப்பற்றியும், அணுக்களின் உள்ளமைப்பைப்பற்றியும் விஞ்ஞானிகள் எப்பொழுதும்

பேசிக்கொண்டே யிருக்கிறார்கள். ஆனால் அவர்களில் யாரும் அணுக்களை நேரே பார்த்ததில்லை. சிறிய வஸ்துவைப் பெரிதாக்கிக் காட்டும் மைக்ராஸ்கோப்புகளைக் கொண்டும் அணுக்களைக் கண்டவரல்லர். அப்படியானால், அணுக்கள் இருப்பது மட்டும் உண்மைதான் என்று ஏன் அவர்கள் சொல்ல வேண்டும்? இன்னும், அணுக்களினுள்ளிருக்கும் பாகங்களைப் பற்றியும் ஏன் நேரே பார்த்தவர்கள் போல் அவர்கள் பேசுகிறார்கள்? என்ற கேள்விகளைக் கேட்பது நியாயந்தான். தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலுடன் ஆசையாய்க் கேட்கிறவர்களுக்குப் பதில் சொல்ல விஞ்ஞானிகள் கடமைப்பட்டவர்கள். ஏதோ கொஞ்சம் விஞ்ஞானம் படித்த தைரியத்தால், எனக்குத் தெரிந்த வரையில் அக்கேள்விகளுக்குப் பதில் சொல்லப் பார்க்கிறேன்.

2. முதலில் எந்த வஸ்துவும் ஒரு அளவைவிடச் சிறியதாய் விட்டால், அதை நேரே கண்ணால் பார்க்க முடியாதென்பது நாமெல்லாம் அறிந்ததே. கண்ணால் பார்க்க முடியாதவற்றை மைக்ராஸ்கோப்பில் வைத்துப் பார்க்கலாம். ஆனால் மைக்ராஸ்கோப் கொண்டும் மிகச் சிறிய வஸ்துக்களைப் பார்க்க முடியாது. ஓர் அளவுக்குக் குறைந்துபோனால், எவ்வளவு நல்ல மைக்ராஸ்கோப்பும் பிரயோசனப்படாது. ஏன்? ஒளியென்பது அலைகளாலானது என்று வெகுகாலத்திற்கு முன்பே விஞ்ஞானிகள் கண்டுபிடித்தார்கள். அலைகளில் சிற்றலைகளும் உண்டு; பேரலைகளும் உண்டு. அப்படியே ஒளி அலைகளிலும் உண்டு. அலைகளின் நீளங்கள் வேற்றுமைப்படுவதே, பலநிறமான ஒளிகள் உள்ளதற்குக் காரணம் என்றும் விஞ்ஞானிகளுக்குத் தெரியும். ஒரு வஸ்துவை நேராகவோ மைக்ராஸ்கோப் கொண்டோ பார்க்க வேண்டுமானால், அவ்வஸ்துவின் மீது படும் ஒளியின் துணையால் அதைப் பார்க்கிறோம். அப்படிப்படும் ஒளியின் அலை நீளத்தைவிட வஸ்துவின் அளவு சிறியதாயிருந்தால் அது இருப்பதே தெரியாது. கண்ணிற்குப் பார்வை தரும் ஒளியின் அலை நீளம் ஊதா அல்லது

வயலட் ஒளியின் அலை நீளத்தைவிடக் குறைந்திருக்கக் கூடாது. இந்நீளத்தைவிடக் குறைந்த நீளமான அலைகளுடனுள்ள ஒளி ஒரு வஸ்துவின்மீது படுமானால், அவ் வஸ்து இருப்பதே கண்ணுக்குத் தெரியாது. அவ்வஸ்து இருட்டில் இருப்பது போலவே இருக்கும். வயலட் ஒளியின் அலை நீளம், சுமாராக, லக்ஷத்திலிருபங்கு அங்குலமே. இதைவிடச் சிறியதான வஸ்துவை எவ்வளவு நுட்பமான மைக்ராஸ்கோப்பின் வழியேயும், கண்ணால் பார்க்க முடியாது. அப்படியிருந்தும், அணுக்கள் இருப்பது நிச்சயம் என்று ஏன் விஞ்ஞானிகள் சொல்கிறார்கள்?

3. விஞ்ஞானத்தில் எப்பொழுதும் ஒரு முறையுண்டு. ஏதாவதொரு இயற்கைச் சம்பவத்தைப் பார்த்தபோது, அதைப்பற்றி பல அளவைகள் செய்து, பார்த்திராத சில அம்சங்களும் உண்டு என்று வைத்துக் கொண்டு கணிதம் முதலியவற்றையும் உதவியாய்க் கொண்டு, பார்த்த சம்பவத்திற்குக் காரணம் சொல்வது அம்முறையாம். அதற்கு 'தியரி' அல்லது கொள்கை என்பார்கள். அக்கொள்கை முறையை யொட்டி வேறு சில சம்பவங்கள் நடைபெறலாம் என்று ஞானதிருஷ்டியால் கண்டதுபோல் சொல்வார்கள். பல விஞ்ஞானிகள் அப்படி நேரிடுகின்றனவா வென்று செய்து பார்ப்பார்கள். அப்படிச் செய்து பார்ப்பதற்குச் சோதனை செய்தல் என்று பெயர். சோதனைகளைச் செய்து, அளவுகள் எடுப்பார்கள்; தாம் எடுத்த அளவைகள், கொள்கைவிதி முறையையொட்டிக் கணக்கிடப்பட்டவற்றுடன் ஒத்திருந்தால் கொள்கை சரியென்று அங்கீகரிக்கப்படும். பார்க்கப்படாத அமிசங்களும் இருப்பதாகக் கொள்ளப்படும்; ஆனால் பல்லாயிரக்கணக்கான சோதனைகள் செய்தபிறகே, கொள்கை முழு அங்கீகாரம் பெறும். அளவைகள் ஒத்திராவிட்டால், கொள்கை தவறென்று உடனே தள்ளிவிடப்படும். இம்மாதிரி முறையில் அணுக்களின் உண்மையுள்ளது. பௌதிக விஞ்ஞானத்தில் பல பகுதிகள் உண்டு.

ஒன்றில் பதார்த்தங்களின் குணங்களைப்பற்றிச் சொல்லப்படும்; மற்றொன்றில் சூட்டைப்பற்றிச் சொல்வார்கள். இப்படியே ஒளி, ஒலி, காந்தம், மின்சாரம் என்ற பல பகுதிகள் உண்டு. இப்பல பகுதிகளின்பாற் பட்ட சோதனைகளினின்று கிடைத்த அளவைகளைக் கொண்டு பெற்ற முடிவுகளைக் கணக்குப் போட்டு, ஓரளவான இடத்தில் எவ்வளவு அணுக்கள் இருக்க வேண்டும் என்று கண்டுபிடித்தார்கள். அப்படிக் கண்டுபிடித்ததில், கிடைத்த எண்தொகைகள் ஏறத்தாழ ஒன்றாயிருந்தன. அதனால் கொள்கை சரியென்று ஏற்பட்டது. எண்தொகையும், அணுக்கள் வைக்கப்பட்ட இடத்தின் அளவும் தெரிந்ததால் ஓர் அணுவின் அளவு என்னவென்று கணக்கிட முடிந்தது. அந்த அளவு ஊதா ஒளியின் அலை நீளத்தைவிடக் குறைந்து இருந்தது. அதனால் அணுக்களை நேரேயாவது, கண்நோக்கும் கருவிகளாலாவது பார்க்க முடியாதென்று ஏற்பட்டது. ஆனாலும் மற்ற சோதனைகள் பலவற்றால் கிடைத்த அளவுகளும், அணுக்கள் உள்ளனவெனும் தொகையால் கணக்கிடப்பட்ட அளவுகளும் ஒத்திருந்ததால், அணுக்கள் நிச்சயமாய் உள்ளனவென விஞ்ஞானிகள் சொன்னார்கள். பத்தொன்பதாம் நூற்றாண்டு முடியும்வரையில் அப்படியே சொல்லி வந்தார்கள். இவ்விருபதாம் நூற்றாண்டில், ‘அணுவைப் பார்த்துவிட்டார்கள், அணுவிருப்பது வெறும் கொள்கை அன்று. அதைக் காட்டலாம்’ என்று பத்திரிகைகளில் பிரசுரம் செய்யப்பட்டன. இதைப் படித்த பலர், ஏதோ அபூர்வமான மைக்ராஸ்கோப்பால் அணுவைக் கோலிக் குண்டுபோல நம் கண்களால் நேரே பார்க்கலாம் என்று நினைத்துக் கொண்டார்கள். அப்படி அணுக்களை நேரே பார்க்க என்றும் முடியாது என்று மேலே விளக்கியுள்ளோம். விஞ்ஞானிகள் அணுக்களைப் பார்த்துவிட்டதென்பது வேறு வகையில். அவ்வகையென்ன என்பதைப்பற்றி இனிச் சொல்கிறேன்.

4. வயலட் ஒளியின் அலை நீளத்தைவிடச் சிறிதான வஸ்துவைப் பார்க்க முடியாதென்பதற்குக் கார

ணம், நமது கண் வயலட் ஒளியின் அலை நீளத்தைவிடக் குறைந்த அலை நீளமுள்ள ஒளியைக் காணமுடியாதென்பதே என்று மேலே கூறினோம். இதனால், வயலட் ஒளியின் அலை நீளத்தைவிடக் குறைந்த அலை நீளங் கொண்ட ஒளியே இவ்வுலகத்திலில்லை என்று நினைத்து விடக்கூடாது. அப்படிப்பட்ட ஒளிகள் பலவற்றை விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். அவ்வாறான ஒளிகள் உள்ளனவென்பதைப் போட்டோபடம் பிடித்துக் காட்டுகிறார்கள். சாதாரணமாக போட்டோ எடுக்கும்போது, படம் ப்ளேட்டில் விழுவதற்குக் காரணம் வயலட் ஒளி. ஆனால் வயலட் ஒளியை விடக் குறைந்த அலை நீளமுள்ள ஒளி விழுவதாலும் படம் எடுக்கக்கூடிய விசேஷமான ப்ளேட்டுகளைச் செய்ய விஞ்ஞானிகளால் முடிந்தது. அவற்றைக் கொண்டு, கண்ணால் பார்க்கமுடியாத வஸ்துக்களையும் போட்டோ பிடிக்கலாம். வயலட் ஒளியைவிட அலைநீளம் குறைவான ஒளியால், அவ்வலைநீளத்தைவிடப் பெரிதான வஸ்துக்களில் படும்படி செய்து, போட்டோ எடுப்பதால், அவ்வஸ்துக்கள் இருப்பது போட்டோவில் தென்படும். விஞ்ஞானிகள் அணுக்களைக் கண்டோம் என்று சொல்வது இம்முறையில் தான். அவர்கள், வயலட் ஒளியின் அலையின் நீளத்தைவிடச் சிறிய அலை நீளங்களுடனுள்ள, எக்ஸ் கதிர்கள், காமாக் கதிர்கள் என்பவற்றைக் கண்டுபிடித்தார்கள். அவற்றின் அலை நீளம் சுமாராய் நூறுகோடியிலொன்று அங்குலமாம். அதாவது வயலட் ஒளியின் அலை நீளம் இவற்றைவிட ஐயாயிரம் மடங்கு பெரிது. இப்படிப்பட்ட புதுவகையான ஒளிகளைக் கொண்டு, அவர்கள் அணுக்களுள்ளதைப் புலப்படுத்துவதான போட்டோ படங்களை எடுத்துள்ளனர். ஆகையால், அணுக்களைக் காணலாம், என்பதற்கு அர்த்தம், அணுக்களினால் விளைந்த போட்டோ படங்களைப் பார்க்கலாம் என்பதே.

5. அணுவைப் பார்ப்பதைப்பற்றி இவ்வளவு கூறிய பிறகு, அணுவென்றால் என்ன? அதைப்பற்றி

விஞ்ஞானிகள் ஏன் இவ்வளவு ஆராய்ச்சிகள் செய்ய வேண்டும் என்று கேட்கலாம். இப்படி ஆராய்ச்சிகள் செய்வதே விஞ்ஞானம் என்று பதில் சொல்லலாம். உலகத்தில் இயற்கையில் என்னவென்னவோ விசேஷங்கள் நடக்கின்றன. அவற்றிற்குக் காரணம் அறிந்துகொண்டு பெற்ற அறிவை முறைப்படுத்துவதே விஞ்ஞானம். உலகத்தில் பல வஸ்துக்கள் இருக்கின்றன. ஆனால் அவை ஒவ்வொன்றும் பிரத்தியேகமான வஸ்துவாய் இல்லை. சில வஸ்துக்களைச் சூடாக்கும்போதோ, உடைக்கும்போதோ, மின்சாரம் ஊடே அனுப்பும்போதோ, இன்னும் பலவற்றைச் செய்யும்போதோ, அதன்முன் வேறேயானவையென்று கருதப்பட்ட வஸ்துக்கள் கிடைக்கின்றன. அப்படித் தனியான வஸ்துக்களைக் கலந்து கிளர்ச்சி செய்தால் வேறான வஸ்துக்கள் அகப்படுகின்றன. இதையே முறையாய்ச் சோதனை ரீதியாய்ச் செய்து, ரசாயன விஞ்ஞானிகள் இவ்வுலகத்திலுள்ள வஸ்துக்களையெல்லாம், தொண்ணூற்றிரண்டு மூல வஸ்துக்கள் அல்லது எலிமெண்ட்ஸ்களால் செய்துவிடலாம் என்று கண்டுபிடித்தார்கள். இப்படி அவர்கள் சொல்லும்போது, எல்லா வஸ்துக்களிலும் உள்ள மூல வஸ்துக்களைக் கண்டு பிடித்துவிட்டார்கள் என்றாவது, மூலவஸ்துக்களைக் கொண்டு எல்லா வஸ்துக்களையும் செயற்கையால் செய்ய அறிந்துவிட்டார்களென்றாவது, நினைக்கக் கூடாது. அநேகமான வஸ்துக்களை முறித்து அவற்றிலுள்ள மூலவஸ்துக்களைப் பெற்றார்கள். அநேக வஸ்துக்களை மூலவஸ்துக்களைக்கொண்டு ஆக்கினார்கள். பலவற்றிற்கானது எல்லாவற்றிற்கும் பொருத்தமானதே யென்று, எல்லா வஸ்துக்களையும் மூல வஸ்துக்களைக்கொண்டு செயற்கையாய்ச் செய்ய முடியும் என்றும், எல்லா வஸ்துக்களையும் பகுத்து அவற்றிலுள்ள மூல வஸ்துக்களைப் பெறலாமென்றும் விளக்கினார்கள். இப்பொழுது செய்ய முடியாத வஸ்துக்களையும், இப்பொழுது பிரிக்க முடியாத வஸ்துக்களையும், முயற்சி செய்து, புது வகைகளைக் கண்டுபிடித்து, வழிக்குக் கொண்டுவந்துவிடலாம் என்று ரஸாயன நிபுணர்

கள் கூறுகின்றனர். இப்படி அவர்கள் தாம் கண்டு பிடித்த தொண்ணூற்றிரண்டு எலிமெண்ட்ஸ்களுக்கு மேலும் அநேக மூலவஸ்துக்கள் இருக்கலாம். ஆனால், வெகு அபூர்வமாய் இருப்பதால் தான் அவை நமக்குக் கிடைக்கவில்லை; இனிமேல் கிடைக்கலாம் என்றும் அவர்கள் சொல்கிறார்கள்.

6. மூல வஸ்துவொன்றைத் துண்டாக்கிக் கொண்டேபோனால், அது தூளாகின்றது. அப்பொழுது ஒவ்வொருதூளையும் தனியாய்ப் பார்க்க முடியாது. இருந்தாலும், எப்படியோ அதில் ஒரு தூளையெடுத்து இன்னும் பொடி செய்தால், கடைசியாக நொறுக்கமுடியாத சின்னஞ்சிறு தூள் கிடைக்கும். அதுவே அணு ஆம். அது தன் மூலவஸ்துவின் இலக்ஷணங்கள் எல்லாவற்றுடனுமிருக்கும். ஆனால் அளவுமட்டும் சிறியதாயிருக்கும். அதன் அளவு எவ்வளவாயிருக்குமென்று, விஞ்ஞானிகள் எப்படித் தம் சோதனைகளினின்று கணித்தார்கள் என்பதைப்பற்றி முன்பே சொன்னேன். அச்சிறிதான வஸ்துவை நேரேயாவது, மைக்ராஸ்கோப் கொண்டாவது பார்க்கமுடியாவிட்டாலும், அது இருக்கின்றது என வைத்துக் கொள்ளலாம் என்று அவர்கள் சொன்னார்கள். ஏனென்றால், ரசாயன விஞ்ஞான முறையையொட்டிச் செய்யப்பட்ட சோதனைகளினின்று பெறப்பட்ட முடிவுகளுக்கு, அணுக்கள் உள்ளனவெனக் கொண்டு காரணம் சொல்லி விளக்க முடிந்தது. அதனால் அவர்கள், அணுக்களைப் பார்க்க முடியாவிட்டாலும், அணுக்கொள்கையில் திடநம்பிக்கையுடனிருந்தார்கள். அணுக்கொள்கை, அணுவே வஸ்துக்களின் மிகச் சிறிதான பகுதியென்றும், ஒரு மூல வஸ்துவின் அணுவை வேறொன்றாய் மாற்ற முடியாது என்றும் கூறுவது. நான்மேலே கூறியவாறு பின்னர்ச் செய்யப்பட்ட சோதனைகளால், அணுக்கள்மீது கதிர்கள் பட்டுச் சிறியதாய்ப் போட்டோ படம் எடுக்க முடிந்தபோது, விஞ்ஞானிகள் அணுவைக் கண்டுவிட்டனர் என்று பத்திரிகைகள் விளம்பரம் செய்துவிட்டன.

7. ஆனால், இவ்விருபதாம் நூற்றாண்டு ஆரம்பமானதிலிருந்து செய்யப்பட்ட ஆராய்ச்சிகள் பலவற்றினின்று பெற்ற முடிவுகளுக்கு, மேலேசொன்ன அணுக்கொள்கையைக்கொண்டு காரணம் சொல்லமுடியாமல் போயிற்று. அம்முடிவுகளை விளக்குவதற்கு, அணுவைவிடச் சிறிய வஸ்துக்கள் அணுக்களில் இருக்கவேண்டுமென்று ஏற்பட்டது. ஒரு மூலவஸ்துவின் அணு சில சமயங்களில் பலமான அதிர்ச்சிக்குட்பட்டபோது, வேறொரு மூல வஸ்துவின் அணுவாய் மாறலாம் என்றும் ஏற்பட்டது. இவற்றைப்பற்றி விவரமாய்ச் சொல்லவேண்டுமானால் கதை நீண்டுகொண்டே போகும். அவற்றைக் குறிப்பிடுவதுடன் நிறுத்திக்கொள்கிறேன். இவ்விஷயங்களைக் கண்டுபிடித்த பிறகு, அணுக்கொள்கையைத் திருத்தியமைக்க வேண்டியதாயிற்று. புது அணுக்கொள்கை தோன்றியது. புது அணுக்கொள்கையின் பகுதியாய்ப் பழைய அணுக்கொள்கை இப்பொழுதுள்ளது. பழைய அணுக்கொள்கை முழுவதும் பிழையானது என்று சொல்வதற்கில்லை. ஏனென்றால் புது அணுக்கொள்கையை அனுசரிக்கவேண்டிய சந்தர்ப்பங்கள் அடிக்கடியேற்படுவதில்லை. அவற்றிற்கான பலமான கிளர்ச்சிகள் அடிக்கடி யேற்படுவதில்லை. ஆகையால் சாதாரணமாய்க் காணப்படும் விஷயங்களை விளக்குவதற்கு பழைய அணுக் கொள்கையே போதும். 'விஞ்ஞானமே தலைகீழாய்விட்டது,' என்று கொட்டையெழுத்துக்களில், பத்திரிகைகளில் இதைப்பற்றி மேல் நாடுகளில் பிரசுரம் செய்தார்கள். அப்பத்திரிகைகளில் போடப்பட்டபடி, புதுக்கொள்கை ஏற்படும்போது பழைய கொள்கை தப்பாய் விடுவதில்லை. புதுக்கொள்கை பழைய கொள்கையையும் தன்னுள் அடக்கிக் கொள்ளும்.

## பயிற்சி

### வினாக்கள்

1. பலநிறமான ஒளிகள் உள்ளதற்குக் காரணம் யாது?

2. மைக்ராஸ்கோப்புக்கும் தெரியாமல் சில பொருள்கள் இருப்பதேன்?

3. விஞ்ஞானத்தில் எப்பொழுதும் ஒரு முறையுண்டு - அம்முறை யாது?

4. விஞ்ஞானத்தின் கொள்கை எப்பொழுது அங்கீகாரம் பெறும்?

5. ஓரளவை யிடத்திலுள்ள அணுக்களின் அளவை எவ்வாறு கணக்கிடுவார்கள்?

6. அணுக்கள் நிச்சயமாக உள்ளனவென்று எவ்வாறு கண்டறியப்பட்டது?

7. கண்ணால் பாாக்கமுடியாத வஸ்துக்களை போட்டோ எடுப்பது எப்படி?

8. உலகத்திலுள்ள மூலவஸ்துக்களின் தொகை எவ்வாறு காணப்பட்டுள்ளது?

9. அணுக்கொள்கை யென்பது யாது?

10. புது அணுக்கொள்கையில் உண்டான மாறுபாடு யாது?

### இலக்கணம்

1. பின் வரும் வாக்கியங்களிற் காணப்படும் இடைச்சொற்கள் யாவை? அவற்றின் பொருள்கள் என்ன?

(1) அணுக்களைப் பற்றியும் அணுக்களின் உள்ளமைப்பைப்பற்றியும் விஞ்ஞானிகள் எப்பொழுதும் பேசிக்கொண்டே யிருக்கிறார்கள்.

(2) விஞ்ஞானிகள் அணுவையும் கண்டறிந்து விட்டார்கள்.

2. பின்வரும் வாக்கியங்களிலுள்ள செய்வினை, செயப்பாட்டு வினைகளை மாற்றி எழுதுக:—

(1) அணுவைப் பார்ப்பதைப்பற்றி இவ்வளவு கூறப்பட்டு விட்டன.

(2) அணுவைக் காட்டலாம் என்று பத்திரிகைகளில் பிரசுரம் செய்யப்பட்டன.

(3) அணுவை நேரே கண்ணால் பார்க்க முடியாதென்பது நாமெல்லாம் அறிந்ததே.

### கட்டுரையாக்கம்

சமீபத்தில் நடந்த போரில் அணுக்குண்டால் நிகழ்ந்த சேதங்களைப் பற்றி இரண்டு பாரா வரைக.

## 14. சீரு உமறுப்புலவர்

(எம். எம். இஸ்மாயில், எம். ஏ., பி. எல்.)

தமிழ் நாட்டு இளைஞர்கள் சிறந்த முன்னேற்றமடைந்து வருகின்றனர் என்பதைக் காட்ட அறிகுறியாய் விளங்குபவர்களுள், ஜனாப் எம். எம். இஸ்மாயில் ஒருவர். சிறந்த நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் உடையவர்; சமரச நோக்கம் வாய்ந்தவர்; சொற்பொழிவுகளாற்றுவதிற் சிறப்புவாய்ந்தவர்; இராஷ்டிரபதி அப்துல் கலாம் ஆஸாத் அவர்களின் வாழ்க்கை வரலாற்றைத் தமிழிலே இவர் எழுதியுள்ளார்.



இக்கட்டுரையில் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களுள் தலைசிறந்து விளங்கிய உமறுப் புலவரின் (கி. பி. 17-ஆம் நூற்றாண்டு) வாழ்க்கை வரலாறும் கவித் திறனும் எளிய நடையில் விளக்கப்பட்டுள்ளன. கட்டுரையாசிரியர் தம் சொற்பொழிவாற்றுந்தன்மையை எழுத்திற் புகுத்தியிருக்கும் பான்மையைக் காண்க.

1. ஒரு நாட்டின் மொழி அந்நாட்டிலே வாழும் பல மதத்தினர்க்கும் பொதுவானது. அம்மக்களின் சமயங்கள் வெவ்வேறாயிருக்கலாம். ஆனால் அவர்கள் அனைவரின் தாய் மொழி ஒன்றே யாகும். அன்றியும், ஒரு நாட்டில் வழங்கும் மொழியும் அம்மொழிப் பற்றும் அந் நாட்டில் பிற காரணங்களினால் உண்டாகும் வேற்றுமைகளையும், மாறுபாட்டுணர்ச்சிகளையும், பிளவுகளையும், நீக்குவதற்குப் பேருதவி செய்கிறது.

2. தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டு தமிழ்த் தொண்டாற்றியோரில் பல சமயத்தினரைக் காணலாம். அவர்கள் தங்கள் தாய் மொழிக்குப் பணி செய்வதில் தங்கள் திறமைகள் எல்லாவற்றையும் ஒன்றுபடுத்தியுள்ளனர். அச்சான்றோர் அவ்வாறு செய்ததன் பயனையே தமிழின் இறவா இலக்கியங்களாக இன்று காண்கிறோம். ஐம்பெருங்காப்பியத் தொகுதியைச்

சேர்ந்த சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் இளங்கோவடிகள் சைவராவார்; அவரை அருக மதத்தினர் என்றும் பலர் கூறுவர். மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனூர் பௌத்தமதத்தினர். சீவக சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்கதேவர் ஜைனர். தமிழ் மொழியிலுள்ள சிறந்த இலக்கணங்களி லொன்ருகிய நன்னூலின் ஆசிரியர் பவணந்தியாரும் ஒரு ஜைனரே. தேம்பாவணி என்ற அரிய தமிழ் நூலையும், தொன்னூல் விளக்கம் என்ற உயரிய இலக்கணத்தையும் செய்தவர் வீரமா முனிவர் (Father Beschi) என்னும் ரோமாபுரிப் பாதிரியார். ஜி. யு போப்பின் புலமையும், கால்ட்வெல் பாதிரியாரின் ஆராய்ச்சித் தொண்டும் மங்காப்புகழுடன் விளங்குபவை. இத்தகைய திருப்பணித் திருவிழாவில் பங்கெடுத்துக் கொண்டவர்களுள் முஸ்லிம் புலவர்களும் பலராவர். மிக உயர்ந்த தமிழ் நூல்கள் பலவற்றை அவர்கள் இயற்றியிருக்கிருர்கள். நூல் அமைப்பு முறையிலும், நடையிலும், தன்மையிலும் முஸ்லிம் புலவர்களின் நூல்களுக்கும், பிரசித்திபெற்ற பிற தமிழ் இலக்கியங்களுக்கும் அடிப்படையான வேறுபாடு எதுவுமேயில்லை என்பதை நன்ருகக் காணலாம். அந்நூல்களின் தலைவர்கள் வெவ்வேருக இருப்பினும் அந்நூல்கள் தமிழ் மரபுக் கொத்தனவாகவும், தமிழ்ப் பண்புக்கு இணைந்தனவாகவும் அமைந்திருக்கின்றன. கற்பனைத்திறத்திலும், பொருட் சிறப்பிலும், சொல்லழகிலும், கவியமைப்பிலும் அந் நூல்கள் உலகிலுள்ள எந்தக் காவியத்துக்கும், இலக்கியத்துக்கும் தாழ்ந்தனவாக இல்லையென்று அவற்றை ஆழ்ந்தறிந்த அறிஞர்கள் கூறுகின்றனர்.

3. இத்தகைய முஸ்லிம் புலவர்களுள் தலைசிறந்து விளங்குபவர் '**உமறுப் புலவர்**' என்பவராவர். கவிச் சக்கரவர்த்தியாகிய சுப்பிரமணிய பாரதியாரைத் தமிழுலகுக் களித்த எட்டயபுரமே இத்தெய்விகப் புலவரையும் பெற்றெடுத்தது. எனவே, எட்டயபுரத்தின் புலமைப்புகழ், பாரதியார் காலத்துக்கும் முந்தியது. '**சேகு முதலியார்**' என்பது இப்புலவர் பெருமானின் தந்தையின் பெயர். அவர்

எட்டயபுர சமஸ்தானத்தில் அத்தர் வியாபாரம் செய்து கொண்டிருந்தார். சுமார் 365 ஆண்டுகளுக்குமுன் சேகு முதலியாரின் செல்வக் குமாரராக உமறு பிறந்தார். அப் போது எட்டயபுர சமஸ்தான வித்துவானாக இருந்த **கடிகை முத்துப் புலவர்** என்பவரிடம் உமறு பாடங்கேட்டு வந்தார். மிகச் சிறுவயதிலேயே அவர் தமிழிலுள்ள பல இலக்கண இலக்கியங்களையும் ஐயந்திரிபறக் கற்றுக் கொண்டு விட்டார்.

4. உமறுக்கு வயது பதினாறு, பதினேழாயிருந்த போது முக்கியமான சம்பவமொன்று நேர்ந்தது. வட மொழியிலும், தமிழிலும் மிகுந்த பாண்டித்தியமுடைய வனும், மந்திரவாதியுமான 'வாலை வாரிதி' (வாலை என்ற தேவதையின் கருணையினால் கடல் போல் முழக்கம் செய்யும் ஆற்றல் படைத்தவன் என்பது பொருள்) என்பவன் இந்தியாவெங்கும் சுற்றுப் பிரயாணஞ் செய்து, ஆங்காங்குள்ள புலவர்களை வென்று விருது பெற்று வெற்றி முழக்கத்துடன் எட்டயபுரத்துக்கு வந்து சேர்ந்தான். எட்டயபுர ராஜ சமஸ்தானத்தில் அவனுடைய பிரசங்கத்துக்காக ஒரு நாள் குறிக்கப் பட்டது. தம் சமஸ்தான வித்துவானாகிய கடிகை முத்துப் புலவரையும் அன்று சபையில் வந்து பிரசன்னமா யிருக்குமாறு அரசன் கேட்டுக்கொண்டான்.

5. 'வந்திருப்பவன் மந்திரவாதி யாயிற்றே! ஏதா வது கேள்விகள் கேட்டு அவமதித்து விடுவானோ?' என்ற அச்சம் கடிகை முத்துப் புலவரைப் பற்றிக்கொண்டது. இதன் காரணமாக அவருக்குக் காய்ச்சலுமுண்டா யிற்று. குறிப்பிட்ட நாளும் வந்தது. அரச சபையில் யாவரும் கூடியிருந்தனர். அரசன் தன் ஆஸ்தான வித்துவானை யழைத்துவரத் தன் பல்லக்கை யனுப்பி னான். ஆனால் கடிகை முத்துப் புலவர் தம் இல்லத்தி லேயே தயங்கிக் கொண்டிருந்தார். அப்போது உமறு, தன் ஆசிரியர் முன் சென்று, வணங்கி, "ஆண்டவ னருளினால், தங்களுக்குப் பதிலாக நான் அரச சபைக் குச் சென்று வருகிறேன்; விடைதருக" என்று கூறினார்.

அப்பொழுது அவர் முகத்தில் என்றுங் காணப்படாத புத்தொளி ஒன்று தோன்றி விளங்கிற்று. அதைக் கண்டும், என்றும் அடக்கமாக ஒதுங்கியிருக்கும் தம் சீடன் அன்று துணிந்து முன்வந்ததைக் கண்டும், புலவர், 'இதில் புதிய விசேஷம் ஏதாவதிருக்கவேண்டும்' என்றெண்ணி உமறை ஆசீர்வதித்து விடை கொடுத் தனுப்பினர். உமறு தம் ஆசிரியருடைய ஆடையாபர ணங்களோடும், சமஸ்தான விருதுகளோடும், அரசன் அனுப்பியிருந்த பல்லக்கிலேறி கம்பீரமாக ராஜ சபை வந்து சேர்ந்தார். துணிச்சலும், உறுதியும், நம்பிக்கை யும் நிறைந்திருந்த அவருடைய தோற்றம் அங்கிருந்த அனைவரையும் ஆச்சரியத்துள் ஆழ்த்தியது. முன்னொரு கால் சோழ மன்னனின் ஆஸ்தான வித்துவானை வித்துவஜன கோலாகலனுடன் வாதப்போர் நிகழ்த்தச் சென்ற ஆளவந்தாரைப்போல் உமறு அரசனவையில் புகுந்து அமர்ந்தார். ஆனல், வாலை வாரிதி உமறுவுடன் வாது தொடங்கினர். அவ்வாதத்தின் முடிவு அவையின ரின் வியப்பை ஆயிரமடங்கு அதிகமாக்கிற்று. பதினறே வயது நிரம்பிய உமறு,வாலை வாரிதியை வெற்றி கொண் டார். தன் தோல்வியைப் பெருமிதத்தோடு ஒப்புக் கொண்ட வாலை வாரிதி, உமறுப் புலவரை ஆலிங்கனம் செய்து, தன் விருதுகளையெல்லாம் அவருக்கே பரிசாக அளித்தான். அரசனும் பிறரும் அடைந்த ஆனந்தத் துக்கும் வியப்புக்கும் எல்லையே இல்லை. இவற்றையெல் லாம் கடிகை முத்துப் புலவர் கேள்விப்பட்டார். அவர் உள்ளம் பெருமையினல் பூரித்தது. அன்று முதல் உமறுவே சமஸ்தான வித்துவானக இருக்க வேண்டு மென்று அவர் கேட்டுக்கொண்டார். அவ்வண்ணமே உமறுவும் தம் குருவின் ஆசியுடன், எட்டயபுர சமஸ் தான வித்துவான் ஆனர்.

6. உமறுப் புலவருடைய நூல்களில் அழியாப் புகழுடன் விளங்குவது "சீறாப்புராணம்" என்பது. முகம்மது நபியவர்களின் வாழ்க்கையைப் பற்றி 5027 பாடல்களில் இப்புராணம் பாடப்பட்டிருக்கிறது. இது மூன்று

காண்டங்களையும் தொண்ணூற்றிரண்டு படலங்களையும் கொண்டது; பொருட்செறிவு, சொற்செறிவு மிக்கது. உமறுப் புலவர் இதனை,

சுருங்கிய சொல்லும் விரிந்த பொருளுமாய்த்
 தெரிந்த மொழியுஞ் செறிந்த நயமுமாய்
மலைவிலா விளக்கமு மதிபடு பாகமாய்க்
 கலைவிலா நிலையுங் கனிந்த சுவையுமாய்ச்
செவிக்கோ ரின்பமுஞ் சிந்தைக் கானந்தமும்
 எவர்க்கு நல்கு மிசையும் பேறுமாய்
நாளு நாளு நவ நவ மாக
 ஆளுந் தொடைபல அமைத்துத்திரண்ட
பாலொடு தேனும் பழமுங் கொண்டு
 மேலுள சுவையெலா மிகுத்தால் வெறுக்கத்
தகுவன வாமெனத் தனியே மதுரம்
 உகுவனவா மின்ப மூறியகவிகளாற்
சிலநூ லியல்பிற் சீறுவென்ன
 முதனூ லுமமே நாட்டி முதுபயன்
அறம்பொரு ளின்பம் வீடனைத்து மடங்கிய
 திறப்பெறுங் காப்பியஞ் செய்தன ரன்றே.

7. இராமாயணத்தைப் பாடிய கம்பர் தம் கடவுள் வாழ்த்தை,

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லா விளை யாட்டு டை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசரண் நாங்களே"

என்று பரம்பொருளின் முத்தொழில் தத்துவத்தைப் பொதுவாக எடுத்துக் கூறி, எவ்வகுப்பாருக்கும் பொருந்தும்படியாகச் செய்ததேபோல், முகம்மது நபியவர்களைப் பற்றிப்புராணம் பாட வந்த உமறுப்புலவரும் எவரும் ஒப்பும் வகையிலேயே ஆண்டவனின் சச்சிதானந்த நிலையை வற்புறுத்தித் தம் கடவுள் வாழ்த்தைப் பாடியிருக்கிறார். அவருடைய காப்புச் செய்யுள்களுள் முதலாவது பின்வருமாறு:—

திரு வுருவா யுணருருவா யறிவினொடு
தெளிவிடத் துஞ்சிந் தியாத
அருவுருவா யுருவுருவாய கம்புறமுந்
தன்னியலா வடங்கா வின்பத்
தொருவுருவா யின்மையினி லுண்மையினைத்
தோற்றுவிக்கு மொளியா யாவு
மருவுருவாய் வளர்காவன் முதலவனைப்
பணிந்துள்ளி வாழ்த்து வாமே.

வேத நூல்கள் யாவும் கூறும் முடிவான உண்மை, அகில உலகுக்கும் பொதுவாக, எளிய சொற்களில் இப்பாடலில் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

8. முகம்மது நபியவர்களின் அன்னையின் பெயர் 'ஆமினா' வென்பது. அரபி நாட்டிலேயே செல்வாக்குப் படைத்த 'குறைஷி' குலத்தைச் சேர்ந்த அப்பெண்மணி, "கற்பெலாந்தி ரண்டுருக்கொண்ட கன்னி" யாவர். அந்த "மயிலெனுமாமினவென்னு மங்கை"யைப் பற்றி நபி யவதாரப் படலத்திற் புலவர் பெருமான் சில பாடல்களிற் கூறுகின்றார். அவற்றுள் ஒரு பாடலை மட்டும் இங்குக் கவனிக்கலாம்.

9. ஆமினா பெண்கள் திலகமாகவும் அறத்திற்கே உறைவிடமாகவு மாவார். ஆணுக்கும் பெண்ணும் தருமம் பொதுவாயினும், அன்னையின் அறம், அரும் புதல்வனின் மூலம் அகிலத்தையாள வேண்டுமல்லவா? தனயன் அறக் கொழுந்தாயிருப்பதற்குத் தாய் அதன் இருப்பிடமா யிருப்பது இன்றியமையாததேயன்றோ? அருளுக்கும் அவ்வம்மை ஒரு தாயகம். கருணைக்கடலான நபி பெருமானின் தாயல்லரோ அப்பெண்மணி? அருட் பிழம்பின் அன்னையாம் அவர் அவ்வருளுக்குத் தாயகமா யிருப்பது நியாயந்தானே? பொறுமையைப் பூஷண மாகக் கொண்டது இப்பூமி; அளவற்ற இன்னல்களையும் அநியாயங்களையும் அது சகிப்புத்தன்மையோடு பொறுத்துக்கொண் டிருக்கிறது. அத்தகைய பூமியையும் மிஞ்சிவிடுகிறராம் ஆமினா அம்மை பொறுமையில். இல்லாவிட்டால், நாகரிகவாசனை அறவே அற்ற அரபியரை

யும் பிறரையும் நாகரிகத்தின் உச்சநிலைக்குக் கொண்டு வந்துவைக்க முகம்மது நபியவர்களுக்கு வேண்டிய பொறுமை வேறெங்கிருந்து வரும்? தம்முடைய பெருங் குடிக்கே இணையற்ற மாணிக்கமாக அப்பிராட்டியார் திகழ்கின்றார். இத்தகைய சீமாட்டியின் சிறப்புக்கு உவமையே யில்லை. சிறப்பின் சிகரத்திலேயே இச் செல்வி நிற்பவராதலால் இவருக்கு ஒப்பாக எதனைக் கூறுவது? இதோ இருக்கிறது அந்தப்பாடல்:—

அறத்தினுக் கில்லிடம் அருட்கோர் தாயகம்
பொறுத்திடும் பொறுமையிற் பூமிக்கெண்மடங்
குறைப்பெருங் குலத்தினுக் கொப்பிலாமணி
சிறப்பினுக் குவமையில்லாத செல்வியே.

(நபியவதாரப் படலம், பாட்டு 12)

10. திருப்பித்திருப்பி இப்பாடலைப் படித்துப் பாருங்கள். எவ்வளவு கம்பீரமா யிருக்கிறது? மென் மையும் பெண்மையும் கலந்து கமழ்கின்றதன்றோ? இத் தகைய பாடல் அமரத்துவ மெய்தியதில் ஆச்சரியமில்லை. உலகப்பெருமான் முகம்மது நபியவர்களைப் பெற்றெ டுத்த உத்தமபத்தினித் தாயின் கல்யாண குணங்கள் இப்பாடலில் ஒவ்வொரு சொல்லிலும் தொனிக்கின்றன.

11. நபிபெருமானின் அவதாரத்துக்குமுன் சில சம்பவங்கள் நிகழ்கின்றன. அறம் பிறக்கப்போவதை யறிந்து, மறம் தன் வாழ்வு ஒழியப்போவதைக் குறித்து வருந்துகிறது. அத்தகைய மறத்துக்கும், வழிகேட்டுக் கும் காரணபூதமாயிருப்பதை "இபுலீசு," "ஷைத்தான்" என்று அரபிபாஷையில் உருவகப்படுத்திக் கூறுவார் கள்; கிறிஸ்தவர்கள் கூறும் சாத்தானும் இதுவே. நபி பிறக்கப்போவதை யறிந்த சாத்தானின் செய்கையை யும், நிலையையும் ஆசிரியர் சில பாடல்களில் வர்ணிக்கி றார். கீழ்க்காண்பன அவற்றி லிரண்டு செய்யுட்கள்:—

நடுங்கி வாயினீர் வறந்திட நாவுலர்ந் துடல
மொடுங்கி யைம் பொறி மயக்குற நெஞ்செலா முடைந்து
புடங்கொள் வங்கமதாய் நினைவுருகினன் புலம்பத்
துடங்கினனடிக்கடிபெருமூச்சொடு சுழன்றே.

கரைவ னேங்குவன் மலங்குவன் கலங்குவன் கதறி
யிரைவன் கன்னத்திற் கையை வைத்திருந் தெழுந் [திருப்பன்
தரையின்மேல் விழுந்தெனக்கிலையினி யிச்சிங்காசன [மென்
றுரைமறந்திடக் கிடந்தனனிரு கணீரொழுக.
(நபியவதாரப்படலம், பாடல்கள் 21, 22.)

கருத்தழிந்து செய்வதறியாது நிலைதவறிப்போன ஒரு வனுடைய நிலைமையை எவ்வளவு இயற்கையாகவும், படம்பிடித்துக் காட்டுவதுபோலவும் காட்டுகின்றன இச் செய்யுட்கள்! வழக்கிலே உலவும் எளிய சொற்கள் தாம்; ஆனல் பாட்டிலே ஒரு தனிஎழில் மிளிர்கிறது.

12. மக்கமாநகரில் முகம்மது நபியவர்கள் தமது இஸ்லாமியப் பிரசாரத்தை நடத்த வாரம்பித்தார்கள். ஆனல் அவ்வூர் வாசிகளுக்கு அது பிடிக்கவில்லை. எனவே நபியவர்களைப் பலவிதத்திலும் துன்புறுத்தத் தொடங்கிவிட்டார்கள். ஒருசமயம் தம் உயிருக்கே ஆபத்துவர விருந்தபோது, நபிபெருமான் மக்காநகரை விட்டு மதீனு நகருக்கு ஒடிவிட்டார்கள். அங்கே அனேகர் அவர்களுடைய உபதேசங்களை யேற்றுக்கொண் டார்கள். அச்சமயத்தில் மக்காவாசிகள் ஒருபடை திரட் டிக்கொண்டு மதீனுநோக்கிப் போருக்காகப் புறப்பட் டார்கள். தற்காப்புக்காக நபியவர்களும் தம் சகாக்களி னுதவியுடன் ஒரு சிறுபடையைத் திரட்டிக்கொண்டு சென்றூர்கள். **உகுது** (உஹத்) என்ற இடத்தில் போர் நடந்தது. நபியவர்களின் படையின் போக்கைப்பற்றி உகுதுப்படலத்தில் உமறுப்புலவர் பின்வருமாறு கூறு கிறூர்:—

அல்லுங் கல்லு மொத்தன மனக்கு பிரவர் படையிற்
செல்லுஞ் செல்லுமென்றேவின விசிறியின்றிரள்கள்
கொல்லுங் கொல்லுமென் றுரைத்தன பல்லியங் குமுறல்
வெல்லும் வெல்லுமென் றூடின விடுநெடுங் கொடிகள்.
(உகுதுப்படலம், பாடல் 96.)

எல்லாம் இடையின வெழுத்தாலான சொற்கள்தாம். ஆனால், சந்தமும் பாவமும் யுத்த உற்சாகத்தையும் ஆரவாரத்தையும் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. சொல்லடுக்குகள் அணிவகுத்துச்செல்லும் படையமைப்பை மனக்கண்முன் கொண்டுவருகின்றன.

இத்தகைய பாவப்பொலிவும், சந்தவழகும், உயர்ந்த பொருளும், சிறந்த கற்பனையும் நிறைந்த பாடல்கள் இப்புராண முழுவதிலும் மண்டிக்கிடக்கின்றன. இலக்கிய ரசிகர்களுக்கு இப்புராணம் ஒப்பற்ற விருந்தாகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## பயிற்சி

### வினாக்கள்

1. மொழி, நாட்டை ஒற்றுமைப்படுத்தும் வாயிலாகும் என்பது எவ்வாறு காட்டப்பட்டது?
2. தமிழ்நாட்டில் வழங்கும் முக்கிய சமயங்கள் யாவை? அவ்வச்சமயத்தினரால் இயற்றப்பெற்ற தமிழ்நூல்கள் சிலவற்றின் பெயர்களைக் கூறுக.
3. உமறுப் புலவர் சமஸ்தானப் புலவரான வரலாறு யாது?
4. சீறுப் புராணத்தின் தன்மைகளை நும் சொற்களாற் கூறுக.
5. கடவுளின் பொதுத் தன்மையைப் புராணம் எவ்வாறு காட்டிற்று?
6. ஆமினவின் சிறப்பியல்கள் யாவை?
7. 'இபிலீசு'வின் தன்மைகள் யாவை?
8. அச்சமும் மருட்கையும் இபிலீசுவின் பால் எவ்வாறு தோன்றின?
9. உகுதுப்போர் யார் யாருக்கு மிடையே நடந்தது? ஏன்?
10. உமறுப் புலவரின் பாடல்களின் பெருமைகளைச் சுருக்கி எழுதுக.

### இலக்கணம்

1. 5வது பாராவிலுள்ள நேர்ப்பேச்சு வாக்கியங்களை அம்முறையை நீக்கி எழுதுக.

2. 1வது பாராவிலுள்ள வாக்கியங்களைப் பிணைத்து ஒரே வாக்கிய மாக்குக.

3. பின்வரும் வாக்கியங்களைச் செயப்பாட்டு வினை வாக்கியங்களாக மாற்றுக :—

(i) தமிழ் நூல்கள் பலவற்றை அவர்கள் இயற்றி யிருக்கிறார்கள்.

(ii) அவர்தான் தங்கள் தாய்மொழிக்குப் பணி செய்வதில் தங்கள் திறமைகள் எல்லாவற்றையும் ஒன்று படுத்தியுள்ளனர்.

(iii) தம் சமஸ்தான வித்வானாகிய கடிகை முத்துப் புலவரையும் அன்று சபையில் வந்து பிரசன்னமாயிருக்க வேண்டுமென்று அரசன் கேட்டுக்கொண்டான்.

## கட்டுரையாக்கம்

(1) வாலை வாரிதிச் சம்பவத்தைக் கடிகை முத்துப் புலவர் மற்றொருவருக்கு உணர்ச்சி பெருகிக் கூறியது போல எழுதுக.

(2) நபியின் அவதாரத்தால் தனக்கு நேரப்போகும் துன்பத்தைக் குறித்து இபிலீசு பலபடக்கூறியதாக ஒரு கட்டுரை எழுதுக.